உ

சிவமயம்.

# கைவல்ய நவநீதம் மூலமும், பத சார உரையும்.

—O*O—

## அவதாரிகை.

வட மொழி தென் மொழியில் வல்லமை யுள்ள, ...ிந்நூ லாசிரியர், தா மடைந்த வத்துவித ஞாந அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார வநுபவத்தை முமுட்சுக்கள் சுலுவி லடைந் தாநந்தாதீதமாகும் பொருட்டுப், பே சருளினுற் சொல்லப் புகுந்த விந்நூ, றேக மநோ மத வாதி விக்நெ மின்றி யினிதி னிறை வேறும் பொருட்டு, மின் னூலைப் பெரியோ ரங்கீக ...ிக்கும் பொருட்டும், படிப்போர் கேட்போர்கட்குத் தேக விக்நெ மின்றி யேகாக்கிர சித்த முதலியன வுண்டா யாநந்தாதீதஞ் சித்திக்கும் பொருட்டு, மின் னூல் பாரம்பரிய மாய் விளங்கும் பொருட்டு, மித னந்தரங்க மான பிரம ஸ்வரூபத்தை நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமாநந்த அத்துவித ஸ்வரூபமாகவுஞ், சர்வ காரண சத்து சித் தாநந்த நித்திய பூரண பர மாத்துவித ஸ்வரூப மாகவுந், துதிப்பான் றொடங்கி, யிச் செய்யுளில், நித்த சுத்த புத்த முத்த சத்திய பர மாநந்த வத்து ஸ்வரூப மாகத் துதிக்கின்றூர்.

1. பொன்னில மாத ராசை பெருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரந்திற் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கு
மென்னிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா
நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி.

இதன் பதப் பொருள்

பொன் - செல்வத்தி னிடத்தும், நிலம் - பூமியி னிடத்தும், மாதர் - மடவா ரிடத்தும், ஆசை பொருந்தினர் - ஆசை யுள்ள அஞ்ஞாநிகளும், பொருந்தார் - நிராசை யுள்ள ஞாநிகளு மாகிய விவர்களது, உள்ளந் தன்னில் - இகயாம்பரத்திலும், அந்தரத்தில் - பேதங்களி னிடத்திலும், சிவ சாக்ஷி மாத்திர மாய் - சிதாபாசனுக்குச் சாக்ஷி மாத்திர மாக, நிற்கும் - நிறைந்திருக்கின்ற வறிவும், என் னிலங்களினும் - எவ் வித மான பூமிகளிலும், மிக்க - மேலாய், எழு நிலமவற்றில் - (ஞாந) பூமிக ளேழினுள், மேலாம் நன்னில மருவும் - முடி வாகிய துரிய பூமியிற் பொருந்திய, ஏக நாயகன் - ஒன் றாகியும் சர்வ சாட்சியு மாகிய, பதங்கள் - (ஐக்கிய ஸ்வரூபத்தினது) திரு வடிகளை, போற்றி - வணங்குவாம், என்ற வாறு.

பத சாரம்.

நவ லோகம் நவ ரத்திநம் நவ தாநிய, மற்றும், விற்கத் தகுத்த இகத்தி லுள்ளதும; சங்க நிதி பதும நிதி சிந்தா மணி காம தேநு கற்பக விருக்ஷ முதலிய பரத்தி லுள்ளதும், நாக ரெத்திந முதலிய பாதாளத் துள்ளதும், செல்வ மென்பார், "பொன்" எனவும், குறிஞ்சி நிலம், பாலை நிலம், முல்லை நிலம், மருத நிலம், நெய்தல் நில மாகிய விகத்திற் பஞ்ச நிலமும், மே லுலகங்களுங், கீ ழுலகங்களும் பூமி யென்பார், "நில" மென்றும், இக லோக ஸ்திரீ, ரம்பாதி நாக கன்னிகைகள் மடவா ரென்பார், "மாத" ரெனவும், பிரமாதி ஸ்தம்பாந்த சர வுயிர்க ளெல்லாம் ஞாநி யஞ்ஞாநி யென்னு மிரு வகையா யிருக்கு மென்பார், "ஆசை பொருந்தினர் பொருந்தா, ரெனவும், உழவு தொழவு வரைவு வாணிபம் வித்தை சிற்ப மாகிய அறு வகைத் தொழிலும் செய்து, இகத்திற் பொன் னில மாதரை யடையவும், யாக தாந உபாசனை யோகாதி செய்து பரத்திலும்,






பாதாளத்திலு முள்ள பொன் னில மாதரை யடையவும, இச்சை செய்யு மஞ்ஞாநிக ளென்பார், "ஆசை பொருந்தின" ரெனவும், ஈசுவர கிருபையினற் றத்துவ ஞாநம் வந்து மித்தியா புத்தியா னிராசை யுடைய ஞாநிக ளென்பார், "பொருந்தா" ரெனவும், பசுவின் சரீர மெல்லாம் பா லிருந்தாலும், முலைக் காம்பிற் காணப் படுதல் போலும், சூரிய கிரண மெங்கும் பொருந்தினலுங், காந்தக் கல்லினிடத்தி லக்கிநி காணப்படுதல் போலும், சாக்ஷி யெவ்விடத்திலு நிறைந்திருந்தாலும், விளங்குதற் குரிய ஸ்தாந மிதய மென்பார், "உள்ளந் தன்னி" லெனவும், குறு முனை முதற் கற்பகத் தரு வரை யசர வுயிர்க ளிடத்தும், பஞ்ச பூதம் மலை யாறு கோபுர முதலிய வசேதநங்களினிடத்துஞ், சாக்ஷி விளக்க மின்றி வியாபித்திருக்கின்ற தென்பார், "அந்தரத்தி" லெனவும், தூல சரீர நூறு வருஷத்துக் குள்ளுஞ், சூக்ஷ்ம சரீரம் பிரளயத்திலு, மிறக்கத், தத்வ ஞாநம் வருகிறவரையி லிறவாது சிவித்துஞ், சூரியப் பிரதிவிம்ப திருஷ்டாந்தம் போல், மூன்று சரீர முடையவ னை விசுவ தைசத பிராஞ்ஞ னென்னு நாமத்தோடு அவஸ்தாத் திரயத்திலுங், கர்த்தா போக்தா பிரமாத்ருவாய்ச் சண்டைக்காரன் போற், பஞ்ச கோசத்தை யபிமாநித்தும், விளங்குகிறவ னென்பார், "சிவ" னெனவும், சீவன் விஷயாகாரமாய்ப் போமிடத்துஞ், சாக்ஷிக்காரன் போ லதிற் ருக்கற் றறிந்தும், சீவன் முதலியன வாத்மாவைக் குறித்துச் சட மாய்ப் போகல் போ, லொன்றினலுஞ் சட மாகாமலும், சீவன் முதலியன வநித்திய மாய்ப் போதல் போ லின்றி நித்திய மாகவு மிருக்கின்ற பிரஞ்ஞாந பதார்த்த மாகிய வறிவு ஸ்வரூப மென்பார், "சாக்ஷி மாத்திரமாய் நிற்கு" மெனவும், சகல சமயங்களு மடங்கிய வஞ்ஞாந பூமி யேழுக்கு மேலானது ஞாந பூமி யென்பார், "என் னிலங்களினு மிக்க வெழு நில" மெனவும், முடிவானதாய், மே லடையும் பூமி யொன் றற்றதாயு மிருக்கின்ற துரிய பூமி யென்பார், "நன் னில" மெனவும், பிரஹ்மம் பதின் மூன்று பூமியிலும், விலக்ஷண பரிபூரண சுக மாய் விளங்கு மென்பார், "மருவு" மெனவும், ஆகாச மநேகங் கடத்தில் வளைபட்டு அநேகாகாச மாயத் தோற்றினலும், ஒன்ரு யிருத்தல் போலவும், சூரிய னநேக கட சலத்திற் பிரதிபிம்பித்து அநேகஞ் சூரிய னுகத் தோற்றினலும், ஒன்ரு யிருத்தல் போலவும், அநேக அவித்தையில் வளைபட்டு அநேக சாக்ஷியாகத் தோற்றினும், அநேக வந்தக் கரணத்திற் பிரதிபிம்பித்து அநேக சீவன் போலத் தோற்றினு, மொன்ருகவுக், பிறவித்

துன்பத்தை நீக்கி மோக்ஷ வின்பத்தை கொடுப்பதாகவு மிருக்கின்ற பிரஹ்ம பத அர்த்த மாகிய சர்வ சாக்ஷி யென்பார் "ஏக னயக" னெனவும், சர்வத்துக்கும் ஆதார மான பிரஞ்ஞாந பிரஹ்ம பத வர்த்த மான ஐக்கிய சொரூப மென்பார், "பதங்க" ளெனவும், அவ் வைக்கிய சொரூப வநுபவத்தாற் றற் போதத்தை யொழிக்கின்றே னென்பார் "போற்றி" யெனவுங் கூறினர்.

விசேஷ வுரை.

ஆசை பொருந்தா ரென்ற பதத்திற்கு. பரத்தில், ஸநகாதி, நந்தி யாகி; கெருடாகி, ஆகு வாதியும். இகத்தி லிராமார்ச்சுநாதி, அநுமா ராதி, கரிக் குருவி யாதி நாக மாதி, கூர்ம மச்சாவதாராதியும், பாதா ளத்தில், ஆதி சேஷ ஞதி, மாவலி யாதியும், ஞாந முடையோ ரெனவும். சிவ னெனும் பதத்திற்குச் சூரிய னுபாசப்படுவதற்குச் சலம் வேண்டு வது போல், சித்து ஆபாசத்திற்கு அந்தக் காரணமும், சலத்திற் காதாரம் கடம் போல். அந்தக் கரணத்திற் காதாரம் தூல சரீரமும், அவ் விரண்டிற்கும் ஆதார மாகாசம் போ, லிவ் விரண்டு. சரீரத்துக்கு மாதாரம் அவித்யா சரீரமும் வேண்டுதலின், மூன்று சரீர முடையவ னுய்ச் சண்டைக்காரன் ஒருவன் செயலை மற் றொருவன் பேரிற் சுமத்துவது போ, லந்ந மயகோசத்தினது பருத்த லிளைத்த லாதியும். பிராண மய கோசத்தினது பசி தாகாதியும். மநோ மய கோசத்தினது காமக் குரோதாதியும். விஞ்ஞாந மய கோசத்தினது நிச்சய மாநாபி மாநாதியும். ஆநந்த மய கோசத்தினது பிரிய மோதப் பிரமோத வறி வறியாமை யாதியையும். பிரகாச சுபாவம் தன தென் றபிமாநிப்ப வனுய் விளங்குபவன் சிவ னெனவும். என் னிலங்களினு மிக்க வெழு நில மென்னும் பதத்திற்கு. மற்றைச் சாஸ்திர கர்த்தாக்க ளெல்லா நூன் முகப்பில் விக்நேசுவரர் முதலிய கடவுளை வணங்கி யிருக்க இந் நூலிற் றனக்கு வணக்கங் கூறிய தே னெனில், அக் கடவுள்களி லொன்றை வணங்கி. மற் றொன்றை வணங்கா திருந்தால், நிந்தித்த தாகலாலுஞ் சர்வ சாக்ஷி யாகிய தன்னை வணங்கிற் சர்வ தெய்வத் தையும் வணங்கிய தாதலாலுந். தனக்கே வணக்கஞ் சொல்லப்பட்ட தெனவும் கொள்க.

இதனது தாத்பரியம் - அதத்துவியாவிருத்தி யினுற் றன்சமாதியில் விலக்ஷண மாய் விளங்கிய இருக்கு வேத மகா வாக்கியார்த்த ஸ்வ ரூபத்தைத் துதி செய்த தாம்.

(1)



அவதாரிகை.

முற் கூறிய பிரம ஸ்வரூபத்தைச் சர்வ காரண சச்சிதாநந்த நித்திய பூரண பரமாத்வைத சொரூப மாகத் துதிக்கின்றார்.

2. ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனுய் மாலாய், ஆன்றவீ சனுமாய்த் தானே யநந்தமூர்த் தியு மாய் நிற்கும், பூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனுய் நாளுந், தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.

(இ—ள்) ஈன்று - சிருஷ்டித்து, அளித்து - இரக்ஷித்து, அழிக்கும் - சங்கரிக்கும், செய்கைக்கு ஏது வாம் (இம் முத்) தொழிற்குங் காரண மாகிய, அய னுய் - பிரம னுகியும், மா லாய் - விஷ்ணு வாகியும், ஆன்ற வீசனு மாய் - மாட்சிமை யுள்ள உருத்திர னுகியும், தானே - தான் ருனே, அநந்த மூர்த்தியு மாய் - மற்றும் பல வடிவங்க ளாகியும், நிற்கும் - இருக் கின்ற, பூன்ற - பூரண மாய், முத்தனு மாய் - (நான்கு அபாவம் விடுபட்ட) நித்திய மாய், இன்பப் புணரி (யாய்) - ஆநந்த சமுத்திர மாய், ஆதவ னுய் - ஞாந சூரிய னுய், நாளுந் தோன்றிய - திரி காலத்திலுங் (காணப்படுஞ் சத்தாய்) விளங்குகின்ற, விமல போத சொரூபத்தை - சுத்த சைதந்ய சொரூபத்தை, பணிகின்றேன் - வணங்குகின்றேன். எ - று.

(ப—ம்) ஆனவத்திற் கட்டுண் டிருக்குஞ் சீவர் கள் கர்ம போகம் புசித்துத் தீர்ந்து மோக்ஷ மடையும் பொருட்டுச் சக சிருட்டி பண்ணுகின்றவ னென்பார்,

''அயன்'' எனவும், அசுத்த போகங்களும், புசிக்கும் படி தன் மாயா சத்தியால் மயக்கிச் சக ஸ்திதி செய் கின்றவ னென்பார் : ''மா'' லெனவும், சுழுத்தி யவஸ்தையில் சாக்கிர சொப்பந மடங்குவதுஞ். சுழுத்தி யம் மூன் றவஸ்தையிலு மிருப்பதுஞ், சுகஞ் செய்தலும் போலப், பிரம விஷ்ணுக்களைச் சங்கரித் தலும், முத்தொழிலில் வல்லவ ராயும், சக சம்மாரஞ் செய்து, சுகஞ் செய்தலு முடைய சர்வஞ்ஞத்வாதி சட் குண ஐசுவரிய சம்பந்த னென்பார், ''ஆன்றவீச'' னெனவும், லோகாயதன் முதலிய சமய வாதிகள் சொல்லுந் தெய்வங்கள் சகத்காரண மல்ல, பிரமமே சிருட்டி யாதி முத் தொழில் செய்யுஞ் சகத் காரண மென்பார், ''தானே'' யெனவும், ஸ்ரீவேசுவ்ர சகத்தா யிருப்பது சலக்ஷணமாக விளங்குகிற ''அபமாத் மாப் பிரஹ்ம'' மென்னும் வாக்கியார்த்த சொரூப மென்பார், ''அயனுய் மாலா யான்ற வீசனுமாய்த் தானே யநந்த மூர்த்தியுமாய் நிற்கு'' மெனவும், அகண்ட மென் றிருக்கு மீசு ராதிகள், ஆகாசம் போன்ற, தேச கால வஸ்து பரிச்சேத மற்ற பிரஹ் மத்தைக் குறித்துக் கண்ட மென்பார், ''பூன்ற''மென வும், நித்திய மென் றிருக்கு மீசுராதிகள் மண் போன்ற பிராகபாவ முதலிய நான்கபாவமு மற்ற பிரஹ்மத்தைக் குறித்து அநித்திய மென்பார்.'மூத்த' னெனவும், மகத் தென் றிருக்கு மநுடாநந்த முதல் பதி னொரு வகை யாநந்தமுங், கடல் போன்ற பிரஹ் மாநந்த சாகரத்தி னோர் திவலை யென்பார், ''இன்பப் புணரி'' யெனவும், முக்கிய மென் றிருக்கும் மின்ன லாதி யஷ்டப் பிரகாசமும், சூரியன் போன்ற பிரமப் பிரகாசத்தைக் குறித்து, மின் மினிப் பிரகாசம் போ



லற்ப மென்பார், ''ஆதவ'' னெனவும், சத் தென் றிருக்கு மீசுவராதிகள், பழுதை போன்ற பிரம சத்தைபைக் குறித்துப் பாம்பாதி போலசத் தென் பார், ''நாளுந் தோன்றிய'' வெனவும், முப் பத் தைந்து தத்துவம் போல், மலம் பொருந்திய தல்லா தாகியும், சச்சிதாநந்த நித்திய பூரணம் போல், சலக்ஷண விலக்ஷணத்துவ மாகாத தாகியு மிருக் கின்ற, சுத்த சைதந்ய மென்பார், 'விமல போத'' மெனவும், அச் சொரூபாகாரமா யிருக்கின்றே னென் பார், ''பணிகின்றே'' னெனவுங் கூறினர்.

(வி—ரை) 'ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனுய் மாலாய் ஆன்ற வீ சனுமா' யென்ற பதத்திற்குச், சகத் காரண மொரு வஸ்துவிற்கே தவிர, இரண்டு மூன்று வஸ்துவிற்குக் கூடா தாகலின், சிருஷ்டி காரண மாத்திரங் கூறிற், குலால னுண்டாக்குவதை, மற்றொருவ, னுடைப்பது போற், சம்மாரத்திற்குக் காரண வஸ்தது வேறுகு மாத லானுஞ், சிருட்டி சம்மார காரண மாத்திரங் கூறிற். சர்வஞ்த்துவ மில்லாத உலண்டுப் பூச்சிக் கத்தொழி லிரண்டிருந்து மிரக்ஷிப்புத் தொழி லில்லாதது போல், ஸ்திதிக்குக் காரணம் வேருகு மாதலானும், தானே முத் தொழிற்கும் காரண மென்று பிரமத்தைத் தடத்த விருத்தியாற் றெரிவித்த தெனவும், 'தானே' யென்ற பதத்திற்கு, உலோகாயதன், - மாதா பிதாக் களாற் சிருஷ்டி உண்டாகின்றது, கண்டதே காட்சி யாதலால். வேறே தெய்வ மில்லை. யாதலா, லவர்களே சகத் காரண மென்பது, - மாதா பிதாக்கள், ஆணிச் சித்தாற் பெண்ணும். பெண் ணிச்சித்தா லாணு,

மிரண்டு மின்றியி லிருக்க, அலியு முண்டாகை
யாலும், அவர்களுக்குப் பிராண னில்லாத போது,
ஒரு தொழிலு நடவாது, பிராண னுண்டான போது,
சகல தொழிலு நடத்தலாலும், சுக்கில சுரோணி
தத்தை யிவர்க ளொன்றுஞ் செய்யா திருக்க, வேறே
யொரு வீசுரன், கர சரணாதி யவயவங்க ளாய்ச் செய்த
லாலும், இவர்கள் பஞ்ச பூதத்திற் பிறந் திறத்தலா
லும், கூடாது. சுபாவ வாதி - மஞ்சளுஞ் சுண்ணாம்
புஞ் சம்பந்தப்பட்ட விடத்திற் சிவப் புண்டாவது
போற், சுக்கிலமுஞ், சுரோணிதமுஞ் சம்பந்தப்பட்ட
விடத்திற், கர சரணாதி யவயவ முண்டாதல் சுபாவ
மாதலினால், சகத் காரணத்திற்கு வேறே தெய்வ
மில்லை யென்பது, - மஞ்சளையுஞ், சுண்ணாம்பையுஞ்
சேர்க்கிறதற் கொரு ஆள் வேண்டுவது போலச்,
சுக்கில சுரோதிணிதத்தைச் சம்பந்தப்படுத்து
வதற்கு வேறே யொரு ஈசுரன் வேண்டுதலின்
கூடாது. சாருவாகன் - பிராண னிருக்குங் காலத்தில்,
சகல தொழிலு நடந்து, பிராணன் நீங்கிய காலத்தில்
ஒரு தொழிலும் நடவாதிருத்தலால், பிராண னசைவி
னாலேயே, சுக்கில சுரோணிதஞ் சேர்ந்து சிருட்டி
யுண்டாகிறது, வேறே தெய்வ மில்லைப் பிராணனே
சகத் காரண மென்பது, - மந தில்லாத சுழுத்தியிற்
பிராணனாலே ஒரு தொழிலு நடவாதிருத்தலாலும்,
மநது அதையடக்கி விடுதலாலும், பிராணன் இன்ன
பக்கத்தி லோடுகிறோ மென்கிற வறி வில்லாத சட
மாதலாற், சுக்கில சுரோணிதந்தை யறிந்து சேர்ப்
பிக்கிறதற்குச் சித்தா யிருக்கிற வேறே யொரு ஈசுரன்
வேண்டுதலாலும், அபஞ்சீகிருத பஞ்ச பூத ரசோ
குண சமஷ்டியில், பிராண னுண்டா யிறத்தலாலும்



கூடாது. உபாசகன் - மந திருக்கின்ற காலத்துச்
சிருஷ்டி நடக்கிறது, மந தில்லாத காலத்தில் சிருஷ்டி
நடக்க வில்லை. ஆதலான், மநதே சகத் காரணம்,
வேறே தெய்வ மில்லை யென்பது, - புத்தி யில்லாத
போது மநதா றவிக்கின்றபடியாலும், மநதைப் புத்தி
சங்கற்பிக்கவும், சங்கற்பியாதிருக்கவும் செய்தலா
லும், சிருஷ்டிக்கிறதற்கு மநதிற்குச் சுத: (தா னாக)
அறி வில்லாதிருத்தலாலும், சுதந்தர வறி வுடைய
வேறே யொரு வீசுரன் வேண்டுதலாலும், மநது
அபஞ்சீகிருத பூத சத்துவ குண சமஷ்டியி லுண்டா
யிறத்தலாலும் கூடாது. க்ஷணிக வாதி-புத்தி யில்லாத
போது சங்கற்பந் திரப்படாமற் சிருஷ்டி யில்லாமற்
போதலாலு, மிருக்கும் போது சங்கற்பந் திரப்பட்டு
சிருஷ்டி நடக்கின்றதாலும், புத்தியே சகத்
காரணம், வேறே யொரு தெய்வ மில்லை யென்பது,
பிரிய மில்லாத போது நிச்சயத் தொழில் நடவா
மலும், பிரிய மிருக்கின்ற போது நிச்சயத் தொழில்
நடக்கின்றதாலும், சிருஷ்டிக்கின்றதற்குப் புத்திக்குச்
சுதந்தர வறி வில்லா திருத்தலாற், சுதந்திர வறி
வுடைய வேறே யொரு வீசுரன் வேண்டுதலாலும்,
பஞ்சீகிருத பூதங்களின் சத்துவ குண சமஷ்டியிற்
புத்தி யுண்டா யிறத்தலாலும் கூடாது. பௌத்தன் -
பிரிய மிருக்குங் காலத்திற் சிருட்டி நடக்கிறது.
பிரியம் இல்லாத காலத்தில் சிருட்டி நடக்க வில்லை.
யாதலா, லாநந்தமே சகத் காரணம், வேறே யொரு
தெய்வ மில்லை யென்பது, :-சுய மாநந்தமா யில்லாது,
ஆத்மப் பிரதிபிம்பாநந்தமா யிருத்தலாலுஞ், சிருஷ்
டிக்கிறதற் கவ் வாநந்தத்திற்குச் சுதந்தர வறி வில்லா
திருத்தலால், சுதந்தர வறி வுடைய வேறே யொரு

வீசுரன் வேண்டுதலாலும், அவ் வானந்தம் அவித்தையி லுண்டா யிறத்தலாலுங் கூடாது. பிராசாபத்தியன் :- ஆநந்த மய சிவன் கிஞ்சிஞ்ஞனவன் ஆனதனாலும், நினைத்த பிரகாரஞ் சிருஷ்டிக்கக் கூடாதிருத்தலாலும், சர்வஞ்ஞனாய் நினைத்த பிரகாரஞ் சிருஷ்டிக்கின்ற பிரம்மாவே சகத் காரணம், வேறே தெய்வமில்லை யென்பது,:-பிர்மா அவனுடைய பஞ்ச சிரசில் ஒரு சிரசைக் கிள்ளின காலத்தில், அதைச் சிருஷ்டித்துக் கொள்ள வல்லப மில்லாதவனாதலாற் கூடாது. வைஷ்ணவ பாகவதர்கள் ;- விஷ்ணுவினது உந்திக் கமலத்தில் பிர்மா ஜநித்துச் சக சிருஷ்டி செய்கின்றமையால், விஷ்ணுவே சகத் காரணம், வேறே யொரு தெய்வ மில்லை யென்பது, ;- பிருந்தையை யுண்டாக்கிக் கொள்ளச் சக்தி யில்லாததனால்,விஷ்ணு சகத் காரண மென்பது கூடாது. சைவாகமக்காரன்- சிவனது பாதம் விண்டு காணாதபடியினால், சிவனே சகத்காரணம், வேறொரு தெய்வ மில்லை யென்பது,:- மாயையினாற் றோன்றி யொடுங்குதலால் (ஜகத் காரணம் என்பது) கூடா தெனவும், 'பூன்ற' மென்ற பதத்திற்குத். தேச கால வஸ்துவால் அபரிச்சிந்நமென மூன்று விசேஷம் யாதுக்கு, தேசத்தால் அபரிச்சிந்நத்துவம் என்றாற் போதாதோ வெனில், ஆகாயமுஞ் சகல தேசத்திலும், வியாபகமா யிருக்கின்றபடியா, லதற்குத் தேசத்தா லபரிச்சிந்நத்துவமாகின்ற வகண்டத்துவம் வரும், அதை நிராகரிக்கு நிமித்தங் காலத்தினாலும், அபரிச்சிந்நத்வம் என்னும் இரண்டாவது விசேஷணமும் வேண்டும். அவ் வாகாயத்திற்குக் காலத்தினா லபரிச்சிந்நத்துவமில்லையா வெனி, லது சிருஷ்டி காலத்தி லுண்டாய்ப்



பிரளய காலத் திறத்தலா லில்லை. ஆனா, லவ் வீரு விசேஷண மாத்திரமும் போதாதோ வெனில், காலம் விபுவா யிருக்கின்றபடியால்,தேசத்தினாலும், ஆகாசத் தினாலும், அபரிச்சிந்ந மாயுந், தன்னாலே தனக்குப் பரிச்சேதம் கூடாதாயு மிருக்கின்றமையால், அதற்கு வகண்டத்வம் வரு, மதை நிராகரிக்கும் நிமித்தம் வஸ்துவினாலும் அபரிச்சிந்நத்துவ மெனும் மூன்று விசேஷணமும் வேண்டும். அக் காலத்திற்கு, வஸ்துவினா லபரிச்சிந்நத்துவ மில்லையா வெனில், அது ஆகாசாதி வஸ்து வல்லாதபடியா லில்லை. ஆகையால், ஆத்மாவைத் தவிரக் காலம் வஸ்து தேசங்களுக்குத் திரிவித பரிச்சேத சூநியமான அகண்டத்வம் கூடாது' அப்படியே யாத்மாவுக்கும், ''நான் இந்தத் தேசத்தி லிருக்கின்றேன், அந்தத் தேசத்தி லிருக்க வில்லை'' யென்று தேசத்தினாலும், 'நான் முன் வருஷத்திற் பிறந்தேன், கொஞ்ச காலத்திற்குப் பி னிறந்து விடுவே'' னென்று காலத்தினாலும், ''நான் பிருதிவியாதிக ளல்ல'' வென்று வஸ்துவினாலும், பரிச்சிந்நத்துவ மிருக்கின்றதே யென்னில், அது, அத்தியாசமாய், தேகத்தை யபேக்ஷித்து வருகிறதே தவிர, ஆத்மாவுக்கு இல்லை. கட மிருக்கிறது, பட மிருக்கிறது, பிருதிவி யிருக்கிறது, அப்பு விருக்கிறது, என்று பூத பௌதிக மாகிய சமஸ்தப் பிரபஞ்சத்திலும், ஆத்மா வியாபகமா யிருப்பதால், தேசத்தா லபரிச்சிந்நத்துவமும், ஆத்மா அநாதியா யிருப்பதால், பூத காலத்தாலும், நித்தியனா யிருப்பதால், பவிஷியத் காலத்தாலும், அபரிச்சிந்நத்துவமும், சர்வாத்மனா யிருப்பதாலும், சஜாதீய விஜாதீய ஸ்வகத மாகிய மூன்று பேதமு மில்லாதிருப்பதனாலும், வஸ்துவா லபரிச்சிந்

நத்துவமு மாத்மாவுக்கு இருக்கிறது. அப்படி யல்லக்,
கட மிருக்கிறது. தேவதத்த னிருக்கின்ருன். சைத்தி
ராத்துமா, வென்று சசாதீயமுஞ். சசாதீய பேதமும்,
பிருதிவி யாதி யென்றும், கடாதி யென்றும், விசாதீய
மும்; விசாதீய பேதமும், இச்சா துவேச சத்வ ரஜஸ்
தமஸ் என்று ஸ்வகத பேதமும், இருக்கிறதே
யெனில், ஆகாயம், உபாதியால் கடாகாசாதியாகத்
தோற்றல் போல், ஆத்மாவும், சரீர உபாதியாற்
றேவதத்த ஞதி யாகத் தோற்றலாற், சசாதீய பேத
மும். பிரபஞ்ச மசத் தாகையால், விசாதீய பேதமும்,
இச்சை யாதி, யந்தக்கரண சுபாவ மாகையால், சச்சி
தாநந்த மாத்திர வாத்மாவுக்கு, ஸ்வகத பேதமு.
மில்லை. சத்து சித்து ஆநந்தம் என்னும் பேதம்
இல்லையோ வென்னில், குளிர் இளகல் வெண்மை
போற் பேத மில்லை. இந்தப் பிரகார மாய்ப் பிரமம்
தேசகால வஸ்துவால் அபரிச்சிந்ந மெனவும், 'முத்த'
னென்ற பதத்திற்கு, கடம், உண்டாகிறதற்கு முன்
னும், உடைந்த பின்னும், மத்தியி லந்நிய கடத்திலும்,
எக் காலத்திலு மின்றி, மண், கட வுற்பத்திக்கு முன்
னும், லயத்தின் பின்னும், மத்தியி லந்நிய கடத்
திலும், எக் காலத்திலு மிருத்தல் போற், ஜீவேசுர
சகத்துச் சிருஷ்டிக்கு, முன் னில்லாத பிராகபாவ
மும், பிரளயத்தின் பின் னில்லாத பிரத்தொம்சா
பாவமும், திதி காலத்தில், ஒன் ருென்ருகாத அந்நி
யோந்நியாபாவமும், எக் காலத்திலு மில்லாத அத்தி
யந்தாபாவமு முடையது. தன்னிடத்திற் ருேன்று
நினைவும், உதிக்கு முன்னும், ஒடுங்கின பின்னும்,
மத்தியி லந்நிய நினைவிலும், மெப்போது மில்லாதது.
இவைகள் போ லின்றிப், பிரமம் பிரபஞ்ச வுற்பத்



திக்கு ஏது வாய்ச் சிருஷ்டிக்கு முன்னும், லயத்துக்
கேது வாய்ப் பிரளயத்துக்குப் பின்னும், இருத்தற்
காதார மாய்த் திதி காலத்திலு, மெக் காலத்திலு
மிருப்பது வென்றும், 'இன்பப் புணரி' யென்ற
பதத்திற்கு, அழ கிளமை யாரோக்கிய திடகாத்
திரஞ் சகலரையுஞ் செயிக்கப் பெல முடையவ
ஞய்ச், சகல சாஸ்திரமும் வந்தவஞய்ச், சகலராலும்
வாழ்த்தப்பட்டவ ஞய், ஐம்பது கோடி பூ மண்டல
மும். ஓர் குடைக் கீழாள்பவஞ யுள்ளவனுக்கு மநுடா
நந்தம். இதற்கு மே லான மநுட கந்தருவ ஞநந்தம்,
தேவ கந்த ருவ ஞநந்தம், பிதிர் தேவ ஞநந்தம்,
பிறவித் (ஆஜாந) தேவ ஞநந்தம், கரும தேவ ஞநந்தம்,
தேவாநந்தம், இந்திராநந்தம், பிரகஸ்பதி யாநந்தம்,
விராட் புருடாநந்தம், இரணிய கர்ப்பாநந்த, மாகிய
இவ்வைகள், ஒன்றுக் கொன்று நூறு பங் கதிக மான
அதிசய முடைய அளவுபட்டதா யநித்திமா யநர்த்
தமா, யந்நிய மாய்ப் பங்கிட் டநுபவிக்கிற தாகையாற்,
பிரமாநந்த சாகரத்தி ஞேர் திவலை யெனவும்,
'ஆதவ' னென்ற பதத்திற்கு - லோகத்தில் பிரகாச
வஸ்து வென்னு மின்னல் நக்ஷத்திரம். அக்கிநி
சந்திரன் சூரிய னிவைகளி னுதயாஸ்தமநங்களை யறியு
மிந்தியங்கள், அவைகளின் அந்வய வியதிரேகத்தை
யறியு மந்தக் கரணம், அதன் அந்வய வியதிரேகத்தை
யறியுஞ் சீவ, னிவை சுய மாய் விளங்காததாய், ஆத்
மாவின் சுயம்பிரகாச வேகதேசப் பிரதிவிம்ப மாய்,
ஆத்மப் பிரகாச அகண்டாநுபவத்திற் குன்று
வதா யிருப்பதால், பிரமப் பிரகாசத்திற் கற்பம் என
வும், 'நாளுந் தோன்றிய' வென்ற பதத்திற்கு, பழு
தையினிடத் தாரோப மாய்த் தோன்றும் பாம்பு,

புருட னுடைய பிராந்தி காலத்திற்குப் பூர்வமும்,
பிராந்தி காலத்திலேயும், பிராந்தி தீர்ந்த பின்பு மில்
லாமல், அதிஷ்டாந பழுதை யம் மூன்று காலத்திலு
மிருப்பது போலப், பிரஹமத்தி லாரோப மாய்த்
தோற்றும் சிவேசுர சகத்து, அவிசார காலத்திற்கு
முன்னும், அவிசார காலத்திலும், அவிசாரம் நீக்கிய
பின்னு மில்லாது, அதிஷ்டாந பிரமம், அம் மூன்று
காலத்திலும், அவத்தாத் திரய காலத்திலும், தேக
வுற்பத்தி திதி லய காலத்திலு மிருப்பதால், பிரம
சத்தையைக் குறித்து, அசத்து வெனவும், 'விமல'
மென்ற பதத்திற்கு, சர்மம் 'உதிரம் மாமிசம் சநாயு
அஸ்தி மச்சை யென்னு மாறு தத்துவ மான தூல
சரீரத்திற்குக், குறும்பி பீளை சளி கோழை வேர்வை
மல சலமும், கர்மேந்திரியம் ஐந்து, பிராண வாயு
ஐந்து, ஞாநேந்திரிய மைந்து, அந்தக் கரண மைந்து
ஆக இருபது தத்துவ மான சூக்ஷம சரீரத்திற்குக்
காமக் குரோத செவி டுமை யாதியும், அவித்தைக்கு–
வாசனையும், சிவனுக்கு - அவித்தையும், பிருதிவிக்கு -
உச்சிட்டஞ் சேறு பசா நாதியும், அப்புவுக்குக்-கலங்க
லாதியும், அக்கினிக்குப் - புகையும், வாய்வுக்கும்,
ஆகாயத்துக்கும், தூளியும், மாயைக்குச் - சகத் கார
ணமும், ஈசுரனுக்குக் - கிருபை யாதியும், மல மென
வும், ஆகாச மானது-பிருதிவி யப்பு தேயு வாயு பூதங்
களும், பௌதிகமும். மண் ணனது - கட சராவ குட்
டிய குசூலமும், கட லானது - அலை திவலை நுரை
குமிளியும், சூரியன் - மழை பனி யாதியும், பழுதை
யானது - பாம்பு தடி மாலையும், அவைகளி லொன்று
நாச மானல், அவ் வாகாய மண் ணதி நசியாதது
போலச், சச்சிதாநந்த நித்திய பூரண சொரூபமும்,



அநந்த மூர்த்தி யாகியும், அவைகள் நாச மாயின், நாச
மாகா தெனவுங் கொள்க.

(இ—ம்) தடத்த விருத்தியாற், சலக்ஷண மாயும்,
சொரூப விருத்தியாற், சலக்ஷண விலக்ஷண மாயும்,
தன் சகசத்தில் விளங்கிய, அதர்வண வேத மகா
வாக்கியார்த்த சொரூபத்தை வணங்கிய தாம். 2

(அ—கை) முற் கூறிய பிரம சொரூபமே வடிவ
மான, அருளிறையைத் துதிக்கின்றார்.

3 எவருடை யருளால் யானே யெங்குமாம் பிரம மென்
பால், கவருடைப் புவந மெல்லாங் கற்பித மென்ற றிந்து,
சுவரிடை வெளிபோல் யானென் சொரூப சுபாப மானேன்,
அவருடைப் பதும பாத மநுதிநம் பணிகின் றேனே. 3

(ப—ம்.) பஞ்ச கோச விலக்ஷண மாகிய அகம் பதாரத்த மான
கூடஸ்தரே தனது சொரூப மென்பார், 'சுவரிடை வெளி போல்
யானென் சொரூப சுபாவ'' மெனவும், பரிபூரண கூடஸ்தராகிய
வென்னிடத்தில். அத்தியாச மாய்த் தோற்றுஞ் சராசரப் பிரபஞ்ச
மெல்லாம் மித்தை யென் றறிந் தென்பார், ''என்பாற் கவருடைப்
புவந மெல்லாங் கற்பித மென்ற றிந்'' தெனவும், கூடஸ்தராகிற
நானே பிரம பத அர்த்த மாகிய சர்வ சாக்ஷி யானேன் என்பார்,
''யானே 'எங்குமாம் பிரம'' மெனவும், அசி பத அர்த்த மாகிய
ஐக்கிய சொரூப மானே னென்பார் ''ஆனே'' னெனவும், சிவ காரு
ணிய முதலிய நான்குந் திரு மேனியானவரது பிரமாநந்த முடைய
திரு வடி யென்பார், ''அவருடைப் பதும பாத'' மெனவும், அத் திரு
வடியை மறவாது சிந்தித்துக் கொண்டு. அவராற் பெற்ற சகசாநுபவத்
திருக்கின்றேன் என்பார், ''அநுதிநம் பணிகின்றே'' னெனவும்
கூறினர்.

(வி—ரை.) 'சுவரிடை வெளிபோ' லென்றபதத்திற்கு,சுவரைக் கெல்லி ஆகாசத்தைக் காட்டுதல் போற், பஞ்சகோசத் தசத்தாதிகூறி, நியதி களைந்து, அவற்று, ளாத்மாவைக் காட்டல். அவருடைப் பதும பாதத்துக்கு = தாமரைப் பூ பெரிது மிகு தேன் குளிர்ச்சி முள்ளின்மை கண் டடுத்திருக்கச் சுகம், வண்டு, தேடிவரத் தவளை யறியாமை போல், மற்ற குரு திரு வடிக்கு மேல் பிரமாநந்தம் தாப நிவிர்த்தி ராகாதி யின்மை கண் டடுத்தடையச் சுகம். பக்துவர் தேடிவர, மற்றோ ரறியாமை. 'சுபாவ சொரூப, மென்றதனால், புண்ணிய பாப நீக்கம். 'கற்பித' மென்றதனால், நரக பய நீக்கம். 'எங்குமாம் பிரம' மென்பதனால், ஈசுவர புத்தி நீக்கம்.

(தா—ம்) தூல தேக. முதல் சீவன் வரை தா. னென்னுங் கற்பிதாத்மத்துவம் போக்கி, யெசுர் வேத மகா வாக்கியார்த்த மான பிரத்திய காத்மா வாயும், பிரம மாயும், அத்துவித மாயுஞ், சாட்சாத்கார அநுபவம் வரப் பண்ணிய குருவைத் துதி செய்த தாம் 3

(அ—கை.) இதுவு மது.

4. என்னுடைய மநது புத்தி யிந்திய சரீர மெல்லாம்,
என்னுடைய யறிவி னாலே யிரவிமுன் னிமமே யாக்கி,
என்னுடை நீயு நானு மேகமென் றைக்கியம் செய்ய
என்னுடைக் குருவாய்த் தோன்று மீசனை யிறைஞ்சி னேனே.

(ப—ம்) துவம் பத் வாச்சியார்த்த மாகிய இரு பத் தெட்டுத் தத்துவங்களும்; தத் பத வாச்சிய மாகிய முப் பத் தைந்து தத்தவங் களும் என்பார், "என் னுடைய மநது புத்தி யிந்திய சரீர மெல்லா"



மெனவும், அவ் வாச்சியங்களைச் சமாதி ஞானத்தினால் நீக்கி, துவம் பதார்த்த கூடஸ்தரையும் தற் பதார்த்த பிரமத்தையும், அசி பதார்த்த அயிக்க சொரூப மாக்கினா னென்பார், "என் னுடைய யறிவி னாலே யிரவிமுன் னிமமே யாக்கி யென்னுடை நீயு நானு மேகமென் றக்கியஞ் செய்ய" வெனவும், தனது பிரியத் தடிப்பே குரு சொரூப மென்பார், "என்னுடைக் குரு" வெனவும், தன்னை ரக்ஷிக்கு நிமித்தம் உதய மான தரு ளிறை யென்பார், "ஈசன்" எனவும், சிவ சாக்ஷி குறியாமற் றிரி கரண மொத்து திரு வடி சாக்ஷி யாக வணங்குகின்றேன் என்பார். "இறைஞ்சினே" னெனவுக் கூறினார்.

(வி—ம்) குரு வென்னும் பதத்துக்கு, - கு வென்றது - அஞ்ஞா நம், ரு – வென்றது, ஞாநம், ஞாநத்தால், அஞ்ஞாநத்தைக் கெடுத் திருக்கின்றவர் குரு வெனவுங் கொள்க.

(இ—ம்) மந முதலிய தத்துவங்க ளனைத்தையும், சமாதி ஞாநத் தினாற் கரைத் ததனி லுதய மாகு மாநந்த மாகிய, அஃதே இஃது, இஃதே அஃது, என்னுஞ் சாம வேத மகா வாக்கிய அர்த்த மான. அத்துவித சொரூபத்தை தரிசிப்பிக்கும் பொருட்டுப், பூரணமே யோ குரு வாக வெளுந் தருளிய ஆசாரியரை வணங்கிய தாம்.

(அ—கை) தன தாசிரியரை வணங்கி யவ ரருளினாற், கூறப் புகுந்த வின் னூலின் முகத்து, இதிற் கூறப்படும் விடயமும், இதனா லுண்டாகும் பயனும், இன் னூற்கு, மிதிற் கூறப்படுவ தாகிய விடயத்திற்கு முள்ள சம்பந்தமும், இது கேட்டற் குரிய வதிகாரியு மாகிய அநுபந்த சதுஷ்டய, மின் னூல் கற்கு மாணாக்க ருணரும் பொருட்டு டுரைக்க வேண்டு தலின், அவற்றுள், அதிகாரியும். விடயமும், இதிற் கூறுகின்றார்.

5. அந்தமு நடுவு மின்றி யாதியு மின்றி வாந்போல்,
சந்தத மொழிரு ஞாந சற்குரு பாதம் போற்றிப்,

பந்தமும் வீடுங் காட்டப் பரந்தநூல் பார்க்க மாட்டா,
மைந்தரு முணரு மாறு வத்துதத் துவஞ்சொல் வேனே.

(ப—ம்) திரி காலத்திலும் நசியாத சத் தென்பார், "அந்தமு மின்றி" யெனவும், எக் காலத்திலு, எத் தேசத்திலும் பிரகாசிக்குஞ் சித் தென்பார், "நடுவு மின்றி". யெனவும், எக் காலத்திலும், எத் தேசத்திலும், எவ் வஸ்துவிலும், பிரியமா யிருக்கு மாநந்த மென்பார், "ஆதியு மின்றி" யெனவும், சொரூபம் வியாபக மாயும், நிரவயவ மாயும், சூக்ஷ்ம மாயும், அமூர்த்த மாயும், விளங்கு மென்பார், "வாங் போல்" எனவும், இங்ஙனஞ் சதோத மாய் விளங்கும் சைதந்நியமே, குரு சொரூப மென்பார், "சந்தத மொளிரும் ஞாந சற்குரு' வெனவும், ஞாநாதி யாறு லக்ஷண முடைய ரென்பார், "சற் குரு,, வெனவும், தா னதன் மய மாய் நிற்ற லென்பார், "பாதம் போற்றி', யெனவும், ஞாந நூ லென்பார், "பந்தமும் வீடுங் காட்ட" வெனவும், மந்தம் மநத தரம் தீவிரம் திவிர தர மாகிய நால் வகைப் பக்குவரும் அதிகாரி யென்பார், "பரந்த நூல் பார்க்க மாட்டா மைந்த'' ரெனவும், சொரூபமே விடய மென்பார், "வஸ்து தத்துவ" மெனவுங் கூறினர்.

(விசேடம்.) 'சற் குரு' வென்னும் பதத்துக்கு - சீவேசுர, அவித்தை, யாயை, நாலி னுற்பத்தி நாசமும், ஞாநாஞ்ஞாந மிரண்டின் லக்ஷணமு, மநுபவ மாய் அறிந்தவ ரெனக் கொள்க. 'பந்தமும் வீடு' என்ற பதத்துக்கு, - தனக் குரிய புல்லை விட்டு, உரித் தல்லாத பயிரைத் தின்னும் பசுவை, பசுவுக் குடையவன், கட்டிக் கதறினதின் பேரில், இரங்கி யவிழ்த்து விடல் பேர்லத், தனக் குரிய பிரமாநந்தத்தை விட்டு, உரித் தல்லாத விடயாநந்தத்தைப் புசிக்கின்ற பசு வாகிற சீவனைப், பசு பதியாகிற ஈசுரன், பஞ்ச கோசத்திற் கட்டுப்படுத்தல் பந்தம். அப் பந்தத்தா லச்சீவன் துன் புற்றதைக் கண்டு நீக்குதல் வீ டெனவும், இங்ஙனமே, திருடனை அரசன்



கட்டி விடுதல் போலச், சீவனை ஈசுவரன் கட்டி விடுதல், பந்தம், வீ டெனவுங் கொள்க. 'பரந்த நூல் பார்க்க மாட்டா மைந்தரு' மென்ற பதத்துக்கு, பாவை பண்ணு நின்ற கல்லைப் போலு, மிரும்பைப் போலும், மரத்தைப் போலும், வெண்ணையைப் போலும், மந்தம் மந்த தரந் தீவிரந் தீவிர தரம் என்னும் நாலு பக்குவ ரெனவும். நீர் தெளிதல் போற் குடும்பப் பிரபஞ்சத்தில் வெறுப்பும், தாமரைத் தண்ணீர் போலக் குடும்பத்திற் கூடாது. பிரபஞ்சங் கானற் சலம் போற் றோன்றுதலும், குடும்பம் பொது மண்டபம் போலும், இந்திராதி வாழ்வு சொற்பநம் போலும். தோன்றுதலும், குடும்பத்திலும்; பிரபஞ்சத்திலும், ஆசை யில்லாமையும், அந் நால்வர் களும் போதிக்குங் காலத்தி லுண்டாம் பக்குவ மெனவும்; வாழைத் தண்டையும், பச்சை மரத்தையும்; கரியையும், பன்னிய பஞ்சையும் சுடுதல் போல, அந் நால் வருக்கும். ஞாந முண்டா மெனவுங் கொள்க.

(தா-ம்) இது ஞாந நூ லெனவும், இதற்கு அதிகாரி நால்வகைப் பக்குவ ரெனவும், விடயம் சொரூப மெனவும் கூறிய தாம். 5

(அ—கை.) சம்பந்தமும், பிரயோசநமுங் கூறுகின்றார்.

6. படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு முன்னூற், குடங்களி னிறைத்து வைத்தார் குரவாக ளெல்லாங் காய்ச்சிக், கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீதத்தை, அடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியி லாரே.

(ப—ம்.) உபநிடத மநேக மாகையால், ''படர்ந்த வேதாந்த'' மெனவும், அவை கூறுவ தள வின்மையால், ''கட'' லெனவும், உப்புக் கட லாதிக் காப்பாற்பட்டது போற், கர்ம பத்தி காண்டத்திற் கப்பாற்பட்டதாற், ''பாற் கட'' லெனவும், அவையிற் கூறி யுள்ளதிற் கொஞ்சம் பூர்வாசாரியர்க ளெடுத்துக் கொண்டா ரென்பார், 'மொண்' டெனவும், அவர்கள் தாம் பெற்ற பே றுலகம் பெற முன் னூல் களிற் பூருவ சித்தாந்த மெல்லாங் குறைவற அமைத்தா ரென்பார். ''குடங்களில் நிறைத்து வைத்தா'' ரெனவும், அவைகளை யெல்லாம் மநதிற் சேகரித்துக் கொண்டதை, ''எல்லா'' மெனவும், பூருவ பக்ஷந் தள்ளிச், சித்தாந்தத்தை மிஞ்ச வைக்க, விசாரஞ் செய்ததை,' 'காய்ச்சி', யெனவும், அதிலும் திட்டாந்தக் கதைகளை நீக்கி யரோப மபவாத சிவேசுர ஐக்கியாதிக் கிரம மட்டு மிஞ்சத் தீர விசாரித்ததை. 'கடைந்' தெனவும், வெண்ணெயைக் கொடுத்தல் போல், அந்த மிஞ்சிய கிர மத்தை கைவல்லிய மெனப் பேரிட் டின் னூற் கூறியதை, ''எடுத்த தளித்தே னிந்தக் கைவல்லிய நவநீதத்தை'' யெனவும், இதை யநுவ் டித்து தத்துவ ஞாநம் பெற்றவர் அடைய வேண்டிய தெல்லா மடைந்தோ மென்னுந் திருப்தி யுடையவ ரென்பார், ''அடைந்தவர் பசியிலா'' ரெனவும், இவ் வாரூடர், விடயம் புசித்து. இச்சையினல் விடயத்துக் கேது வான இகபரத் தொழிலிற் சுழலா ரென்பார், ''விடய மண்டின் றலைவரோ'' வென்றுங் கூறினர்,

(விசேடம்) 'பாற் கட' லென்ற பதத்துக்கு - உப்புக் கடல் நீர், சாப்பிட்டால் திருத்தி யின்றி, துன்பம் வருதல் போல, கர்ம பத்தியாற், திருத்தி யின்றிப் பவத் துன் படைதல். பால் திருத்தி செய்து சுகந் தருவது போல், ஞாநந் திருத்தி செய்து முத்தியின் பளித்த லென வும், ''மொண்டு குடங்களில் நிறைத்து வைத்தார் குரவர்க''ளென்ற பதத்துக்கு, சமர்த் துள்ள புண்ணிய வான், உப்புக் கட லாதி கடந்து போய்ப் பால் சாப்பிட்டு, உலோகாபகார மாய் மொண்டு வைத்தல் போல், கர்மாதி காண்ட மப்பியாசித்து விட்டு, ஞாந காண்ட மப்பியா



சித்து, அநுபவித்து, நூல் செய்த தெனவும், 'எடுத் தளித்தே னிந்தக் கைவல்லிய நவநீ தத்தை' யென்ற பதத்துக்கு, கேவல சம்பந்தங் கைவல்லிய மாகையாலுந், தயிர் கடைவதிற் றிரளும் நவநீதம் போல், சித்தாந்தத் திற் றிரட்டிய ஞாநக் கிரம முள்ள தாகையாலு, மிதற் குக் காரணப் பெய ராகக் கைவல்லிய நவ நீத மெனப் பேரிட்ட தெனவும், அந்தக் கிரமமே நூலுக்குச் சம்பந்த மெனவும், 'அடைந்தோர் பசியிலார்' என்ற பதத்துக்கு, பசியிலாமையே நூலுக்குப் பிரயோசந மெனவும், 'விடய மண் டின் றலைவரோ' வென்ற பதத்துக்கு, மண் போல், விடயந் திருத்தி யின்றிப் பவத் துன்பந் தரல், வெண்ணெ போ, லிது திருத்தியு முத்தி யின்பமுந் தர லெனவும் கொள்க.

(இ—ம்) இன் னூல் செய்த விபரமு, மிதன் நாமங் கைவல்ய நவநீத மென்பதுஞ், சம்பந்த மத் தியாரோபாதி ஞாநக் கிரம மென்பதும்; பிரயோசநம் தடை யற்ற வாநந்த மென்பதுங் கூறிய தாம். 6

(அ—கை) தனது ஆசிரியர் நாமங் கூறி வணங்கி, இன் னூலின் படல வகை கூறுகின்றூர்.

**முத்தனை வேங்க டேச முகுந்தனை யெனையாட் கொண்ட,**
**கர்த்தனை வணங்கிச் சொல்லுங் கைவல்லிய நவநீ தத்தைத்,**
**தத்துவ விளக்க மென்றுஞ் சந்தேகந் தெளித லென்றும்,**
**வைத்திரு படல மாக வகுத்துரை செய்கின் றேனே.** 7

(ப—ம்.) அஞ்ஞாந மஞ்ஞாந காரிய மான பாசங்களும், விடு பட்டவ னென்பார் 'முத்த'' னெனவும், நீ ராலங் கட்டி யாய்த் தடித்

தது போல, மாநுடச் சட்டை சாத்தி நாராயண தேசிக ரென்னு நாமந் தரித்து எழுந் தருளிய, வாக்கு மநதுக் கெட்டாத சொரூப மென்பார், "வேங்கடேச முகுந்த" னெனவும், தத்துவ ஞாநிக ளெல்லாங் குரு வாயினும் தனது துயரை நீக்க அருளினுற் றன்னைத் தடுத் தாண்ட அரு ளிறை யென்பார், "எனை யாட் கொண்ட கர்த்தனை" யெனவும், அதத் துவ முப் பத் தைந்தும் நீக்கி, பரதத்துவத்தை தெரிவிக்கப்பட்ட தென் பார்' 'தத்துவ விளக்க" மெனவும், பிரமாண சமுசயம், பிரமேய சமு சயாதி நீக்கி, யகண்டாநந்தந் தருவ தென்பார், "சந்தேகந் தெளித" லெனவுங் கூறினர்.

(தா—ம்) குரு வரு ளுடையோர்க்கே சகலமு நன்ருய் விளங்கு மாதலால், தங் குருவை வணங்கிக் கொண்டு, இன் னூற் படல மிரண் டென, அவற்றின் நாமங் கூறிய தாம். 7

பாயிரம் முற்றிற்று.

## கைவல்லிய நவநீதம்.

### நூல்.

(அ—கை) இந்த முத லாவது தத்துவ விளக் கப் படலத்தில், தத்துவத்தை விளக்கும் பொருட்டு, முதற்க ணது கேட்கும் அதிகாரிக் குரிய சாதந சதுஷ் டய விலக்கணங் கூறுகின்றூர்.

8. நித்திய வநித்தி யங்க ணிண்ணயந் தெரிவி வேகம்,
மத்திய விகப ரங்கள் வருபோகங் களினி ராசை,
சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் ருறு கூட்டம்,
முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சா தநமின் னுன்கே.



(ப—ம்) திருக்கு அமூர்த்தம் நிரவயவம் அகண் டஞ் சூக்ஷாமம் உற்பத்தியற் றதான பிரம மென்பார் "நித்திய" மெனவும், திரிசியம் முகூர்த்தம் சாவயவம் கண்டம் தூல முற்பத்தி யுள்ள தான பிரகிருதி முதல் தேகம் வரை யென்பார், "அநித்திய" மெனவும், மயாந விவேகமும், துறவிகள் கேள்வி தரிச நத்தா லும், பற்றிய விடய நட்டத்தாலும், தத் சணத்தி லுண்டாவது மல்ல. நித்தியாநித்தியத்தை சதா காலமும் நாநா வித மாய்ச் சிந்தித்த லென்பார், "நிண்ணயந் தெரி விவேகம்" எனவும், சகல லோகத் தினு முள்ள பொன் ஞதி பெண் ணுதி யங்காதி யான அருந்தல் பொருந்த லென்பார், "இக பரங்கள் வரு போகங்க" ளெனவும், பிரசவ வைராக்கியமும், இஷ்டம் முடியாத போ துண்டாம் வெறுப்பு மல்ல. போகவஸ்துவின் மித்தையசுத்த துக்காநித்தியங்களை யெப்போதுங் கண்டு வெறுத்து நரக முதலானது போற், கண்டு விட்டு விடுவ தென்பார், "நிராசை" யெனவும், புண்ணிய லோகாதி சிவ சாயுசசியாந்தம் அடைவ தாயும், அங்நிய மாயும், அநித்திய மாயும் இருக்கின்ற சரீர முத்தி யல்ல. பிரஹ் மந் தானுகிற அநந்ய மாயும், நித்திய மாயும், இருக்கின்ற அசரீர முத்தி யென்பார், "முத்தி"யெனவும், புராண சிரவண, வியாதி, துறவிகள் தரிசந கேள்வியா லுண்டா மிச்சையும், புளிச்சேப்பகாரன் புசிப் பிச்சையும் போ லல்ல, சில தினப் பட்டினிக்காரன், அந்ந விச்சையும், நாக்கு வரண்டவன், தலையி னெருப்புப் பற்றிக் கொண்டவன், தண்ணீ ரிச்சையும் போ லென்பார், "விரும்பு மிச்சை" யெனவுங் கூறினர்.

(வி—ம்) 'நிண்ணயந் தெரி விவேக' மென்ற
பதத்துக்கு, நாநா வித மாய்ச் சிந்தித்த லாவதுகெற்
பந் தரிக்கும் போதே புழுத் தின்ற லாதி யாலும்
பத்து மாசத்திற் குள்ளே யிடை யிடையும், பிறந்த
பின்பு பசு பக்ஷி யாதியாலும், வியாதி யாதியாலும்'
சைசவ கௌமார யௌவந வார்த்திகத்தில், அடிக்
கடி நசித்தலைப் பார்த்தல், எழு வகைப் பிறவியிலும்,
முன் னிறந்ததையும், இப்போ திறக்கின்றதையு,
மினி யிறப்பதையும், ''பார்த்த''லெனவும், பிரளய
காலத்தில், பனி ரெண்டு ஆதித்த ருதித்துப், பஞ்ச
பூத பௌதிகங்கள் நசித்துப் பிரமாதி தேவர்கள்
நசித்தலை, ''சிந்தித்த''லெனவும் கொள்க.

மோக்ஷ அதிகாரிக்கு வேண்டு மென்னு மிச்
சாதநங்களுள், முதலாவது சாதந மேதுக் கெனில்,
திரிசியத்தின் அநித்தியமுந், திருக்கி னித்தியமு,
நன்ருத் தெரிய, அது போதாதோ வெனில், இரண்
டாவது சாதநமும் வேண்டும். அது ஏதுக் கெனில்,
வேத சாஸ்திரிகள் தெரிந்துந், திரிசியங்களை வெறுக்
காததால் வேண்டும். அவ் விரண்டும் போதாதோ
வென்னில், மூன்ருவது சாதநமும் வேண்டும். அது
ஏதுக் கெனில், தேகாதி திரிசியத்தை வெறுத்தவர்
களும், பொறுமை யின்றித் தவத்தை யிழக்கின்றதால்
வேண்டும். அம் மூன்றும் போதாதோ வெனில்,
நான் காவது சாதநமும் வேண்டும். அது ஏதுக்
கெனில், பொறுமை யாதி யுடைய யோகிகளுக்கும்
சற் குரு வேதாந்த சிரவணுதித் தேட்ட மின்மையால்,
வேண்டு மெனவும், இச்சாதந மில்லாவிடில், சற்குரு
லாபம், சிரவண மநந நிதித்தி யாசந சமாதி ஞாநம்,



அஞ்ஞாந நீக்கம், ஜெநந மரண நீக்கம் வரா தெனவுங்
கொள்க.

(அ—கை) இதுவும் அது.

சமந்தமம் விடல்ச கித்தல் சமாதாநம் சிரத்தை யாரும்,
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்டம்,
அமர்தரு கருமம் பற்று தருகலே விடலென் ருகும்,
மமர்செயுங் காம மாதி வரினடக் குதல்ச கித்தல். 9

(ப—ம்) கர்த்தா போக்தா பிரமாத்துரு வாய்,
திரி காலத்தையும் நினைத் தெழாநின்ற மநதைச்
சிரவண காலத்தி லாவது நிக்கிரகித்த லென்பார்,
''சமம் அகக் கரண தண்ட'' மெனவும், சுரோத்தி
ராதி வாக்காதி பத் திந்திரியமும், சத்தாதி வசநாதி
பத்து விடயங்களிலும், செல்லாது சிரவண காலத்தி
லாவது தடுத்த லென்பார், ''தமம் புறக் கரண
தண்ட'' மெனவும், மந வாக்குக் காயத்தாற் செய்யும்
பாவ, மிசிர கர்மத்தையும், புண்ணிய கர்ம பலனை
யும் விடுதலே யுபரதி யென்பார், ''அமர்தரு கருமம்
பற்று தருகலே விட''லெனவும், காமக் குரோத சுக
துக்கம் வரின் பிராரத்த மென்று பொறுத்தல்,
திதிக்ஷை யென்பார், ''காம மாதி வரி னடக்குதல்
சகித்த'' லெனவுங் கூறினர்.

(வி—ம்) சம தம மில்லாவிடில், குரு வசநங் கேளாது,
அர்த்தம் படாது, அநுபவ முண்டாகாது, தத்துவ
ஞாநம் வராது, அஞ்ஞாநம் நீங்காது, ஜெநந மரண நீங்
காது. துன்பம் நீங்காது, அகக் கரண புறக் கரணத்தால்

தீங் கடைந்தோர். மான் அசுணப் புள் யானை விட்டில் மீன் வண்டு சிசுபாலன் ராச ஸ்திரீ தண்டிகேசர் பிதா கொக்கு தேவேந்திரன் எனவும், நீக்க வுபாயம் = முந் தின காலச் செயலை நினைக்கிறதை, அதனுல் பிரயோசநம் இல்லை என்றும், பிந்தின காலச் செயலை நினைக்கிறதை அது வரை தேகம் நித்திய மல்ல வென்றும், தற் காலச் செயலை நினைக்கிறதை, வினைப்படி சிவன் தருவதென்றும், கருதி நீக்கல். தீங் குற்ற விடத்து ஆமையைந் துறுப்பையும் அடக்குகின்றது போலத், தீ தான விடயத்து, இந்தியங்கள் செல்லும்போது நிராசையினுல் தடுத்த லெனவும், 'விட'லென்ற பதத்துக்கு, பாவத்தால், முட் செடி முதல் பசுச் செநநம் வரையும், மிசிரத்தால், நீசன் முதல் பிராமணன் வரைச் செநந மும், புண்ணியத்தால், பிசாசாதி முதல் இரணியகர்ப்பாந்த சரீரமும் வரு மெனவும், நீக்காவிடில், சித்த சுத்தி, குரு லாபம் முதல்; துன்ப நீக்கம் வரை வரா தெனவும், 'சகித்த' லென்ற பதத்துக்கு — காம மாதி யடக்காது கெட்டோர். ராவணன், இரணியகசிபன் நரகாசுரன், பகாசுரன், துரியோதநன், தசரத மகாராசன், கார்த்தவீரியார்ச்சுநன், சிசுபாலன், அருணுட்சதன், பௌண்டரீக வாசுதேவன், நபூர்வ மகாராசா, சத முக ராவணன், மதுகைடவர்க ளெனவும், நீக்காவிடில், சித்த சுத்தி, குரு லாப முதல், துன்ப நீக்கம் வரை வாரா தெனவும் கொள்க,

9

(அ—கை) இதுவும் அது.

சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்கு மாறு,
சரதமா வைக்கு மித்தைச் சமாதாந மென்பர் மேலோர்,



பரமசற் குருநூ லன்பு பற்றலே சிரத்தை யாகும்,
வரமிகு சமாதி யாறு வகையின்சொற் பொருளி தாமே, 10

(ப—ம்) திரி காலத்தையும் நினையா தடக்கியிருக்கு மநது, வாதநா வசத்தால் விடயத்திற் செல்வதைத் தடுத்துச் சிரவணுர்த்தங்களைச் சத்திய மாய்க் கருதும்படி செய் தென்பார், "சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்கு மாறு சரதமா வைக்கு மித்தைச் சமாதாந" மெனவும், வயது முதலியதாலுயர்ந்தவ ரல்ல, அத்துவித ஞாந, அப்பிரதிபந்த அபரோக்ஷ ஞாநிக ளென்பார், "மேலோ" ரெனவும், தலைக்கண் போட்ட பசுப் போலவும், விட புருடன் போலவும், ஈசன், சற் குரு, ஞாந சாத்திரத்தினிடத்திற் பத்தி விசுவாசம் செய்த லென்பார், "பரம சற்குரு நூ லன்பு பற்றலே சிரத்தை" யெனவும், மற்றைச் சாதநங்கள் வலுக்கிறதற் கேது வான தான மேலான தென்பார், "வர மிகு" மெனவுங் கூறினுர்.

(வி—ம்) 'மேலோ'ரென்ற பதத்துக்கு — வயது முதலிய தாவது:— வயது செல்வம் சாதி யாச்சிரமம் வித்தை கன்மம் பத்தி யோகம் நித்தியாநித்தியாதி சாதநஞ், சிரவண மநந நிதித்தியாசநம் சமாதி யெனவும், 'பரம சற்குரு நூ' லென்னும் பதத்துக்கு — தநு வாதி கொடுத்து அவதாரங்களாற் சித்த சுத்தி முதல் மோக்ஷம் வரைக் கேதுவா யிருத்தலால், ஈசுவரனிடத்திலும், கொடிய பாவிகள் மத மூடர்கள் கூட ஈக்ஷணத்தாற் பிராந்தி நீங்கி, முத்தி யடைதலாலும், நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமாநந்தாத்துவித சொரூப மாயும்,

மோகாந்தகாரத்துக்கு ஞாந சூரியனாயும், மாயா மேகத்துக்குப் பிரசண்ட மாருத மாயு மிருப்பதால், சற் குருவினிடத்திலும், பவ சாகரக் கப்ப லாயும், தாப நீக்கு மமிர்த வருஷ மாயும், சமுசய நீக்கி மோக்ஷத்தைக் காட்டுவதாயு மிருப்பதால், வேதாந்த சாஸ்திரத்திலும், சிரத்தை வேண்டு மெனவுங் கொள்க.

*(தா—ம்) அநித்திய வஸ்த்துக்க ளிவை யெனக் கண்டு, நித்திய வஸ்துவை யடைதற் கேது வான குணங்களையே சாதந சதுட்டயமாகக் கூறின தாம்.* *10*

**(அ—கை) சற் குருவை யடைந்து, தத்துவ ஞாநம் பெறக் கூடாதோ, சாதநம் யாதுக் கெனில்?**

சாதந மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை,
ஆதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்,
நூதந விவேகி யுள்ள நுழையாது நுழையு மாகிற்,
பூதசந் மங்கள் கோடி புநிதனும் புருட னுமே. 11

(ப—ம்) பதி னைனு விந்திரியத்தாலு மறிந்து செய்யத் தக்க, வெட்டல் எழுதல் சமைத்த லாகிற தொழிலுக்கே, மண் வெட்டி, யெழுத் தாணி, நெருப் பாகிற ஒரு சாதநமு மில்லாமல் நடக்கமாட்டாததா யிருப்பதால், பதி னை லிந்திரியத்தினாலும் எட்டி யறியக் கூடாத சொரூபத்தை யறியு ஞாந, மின் னன்கு சாதநமு மில்லாவிடில் வாரா தென்பார், "சாதந மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை. ஆதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்" எனவும், இச் செந்மத்தில் சாதந அப்பியாச மின்மையால், புது



விவேகியாய்க் கர்மம் பத்தி யோகத்திற் சிரத்தை யுற் றிருப்பவனுக்குச், சற் குரு, கிருபையினா லநுக்கிரகஞ் செய்யினும், அவன் மநதில் ஞாந மேறா தென்பார், நூதந விவேகி யுள்ளம் நுழையா" தெனவும்,

**(அ-கை) சில பேருக் குண்டா யிருக்குதே யெனில்?**

(ப—ம்) பூமியில் மறை பட்டிருக்கும் வித்து, மழை பெய்தவுடன் முளைப்பது போலுங், கடன் வாங்கினவன், கொடுத்தவன் மறந்திருக்கும்போது கொடுப்பது போலும், பூர்வ செந்மங்களில் அப்பியாசித்த சாதநங்கள், பிரதிபந்தத்தால் மறைபட்டிருந்து, இச் செந்மத்திற் பிரதிபந்தம் நீங்கினவுடன் ஆசிரியருபதேசத்தால் ஞாந வுதய மா மென்பார், "நுழையு மாகிற் பூத செந்மங்கள் கோடி புநிதனும் புருடனுமே' யெனவுங் கூறினர்.

*(இ—ம்) இச் சாதந சதுட்டய முள்ளவர்க்கே, அப்பிரதிபந்த அபரோக்ஷ ஞாந முண்டாகு, மஃதில்லாதோர்க்கு அந்த ஞாந முண்டாகாதென்ப தாம்.* *11*

**(அ—கை) முற் கூறிய சாதநங்கள் நிறைந்த ஒருவனது அதி தீவிர பக்குவத்தைக் கூறல்.**

இவனதி காரி யானே னிந்திரி யங்க ளாலும்,
புவந தெய் வங்க ளாலும் பூதபவு திகங்க ளாலும், தவந
மூடன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்,
பவமறு ஞாந தீர்த்தம் படிந்திடப் பதறி னனே. 12

(ப—ம்) அக்கினியால் வெப்ப முற்ற வோர் புருடன் போலச், சரீரத்தை யநுசரித்துக் கொண்டு

வாராநின்ற க்ஷயரோகம், வயிற்று வலி. சுரம், சிரங்கு கண் வலி முதலான ஆதியாத்மீக துக்கத்தினாலும், மநுடர் புலி முதலான மிருகங், கழுகு முதலான பக்ஷி பாம்பு முதலான ஊர்வன, முதலை முத லான நீர் வாழ்வன, ஆகிற பிராணிகளால் வாராநின்ற ஆதி பௌதிக துன்பத்தினாலும், பனி மழை காற்று வெயி லாதியினாலும், கோபுரம், சுவ ரிடிந்து விழ்தல், மர முறிந்து வீழ்தல், கல் லிடறல், முள்ளுத் தைத்தலால் வாராநின்ற ஆதி தெய்விக துன்பத்தினாலும், தாபத் திரய முற் றென்பார், "இந்திரியங் களாலும், புவந தெய்வங்களாலும், பூத பௌதிகங்களாலும், தவந மூன் றடைந்" தெனவும், மாடு, குஞ்சா யிருக்கின்ற பறவை, தண்ணீர்ப் பாம்பு போலக், கொஞ்ச மாவது சகிக்க வில்லை யென்பார், "புழுப் போல் வெம்பி" யெனவும். அக்கினியா லுஷ்ண முற்றவன் மண்ணை யுஞ், சேற்றையும் விட்டு, இறங்கு துறையில் முழு கும்படி யான சலந் தேடி விரைகின்றவனைப் போல், அத் தாபத் திரய முற்றவன், கர்மம் பக்தியை விட்டுச் சம்சாரம் நீக்குவ தான அத்துவித ஞாநத்தை யடை யத் திவிர பக்குவம் உற்றான் என்பார், "பவமறு ஞாந தீர்த்தம் படிந்திடப் பதறினனே" யெனவுங் கூறினர்.

(வி—ம்) 'ஞாந தீர்த்த' மென்ற பதத்துக்கு, கேட்ட போதுங், கண்டபோது. மடைந்த போதுஞ், சுகங் கொடுத்தல், மா சகற்றல். திருப்தி செயத லாதி யெனக் கொள்க.

(இ—ம்) தாபத் திரயாக்கினி யாகிய துன்பங்களுக் காற்றாத உடனே, அவை நீங்கிப் பிரஹ்மாநந்தம் அடைய விரைவ னென்பதாம், 12



(அ—கை) தீவிர முற்ற அப் பக்குவ னென்ன செய்தா னெனில்?

13 ஆனவிம் மனைவி மக்க ளர்த்தவே டணைகள் மூன்றிற்,
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போற்,
போனவன் வெறுங் கையோடே போகாத வண்ணஞ் சென்று,
ஞாநசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே.

(ப—ம்) வேடர் வலையைத் தப்பி, நல்ல காடு நோக்கிச் செல்லு மான் போல். அருந்ததி போல், ஸ்ரீ சுப்பிரமணியர் போற், புத்திரன் குபேரன் போற், செல்வங்க ளான ஈஷணாத் திரயங்களைத் துறந்து, மற்றோர் கிரியை யாதியையும், சரியை யாதியையும், போதிக்கின்றவ ராயும், பொரு ளாதியைக் குறித்து ஞாந சாத்திரம் போதிக்கின்றவராயு மிருக்கின்ற அநாசாரியரையும் நீக்கிச் சென்றவ னென்பார், "ஆன விம் மனைவி மக்க ளர்த்த வே டணைகள் மூன்றிற் கானவர் வலையிற் பட்டுக் கை தப்பி யோடு மான் போல் போனவ" னெனவும், தெய்வ முதலானவ ரிடத் துக்கு சும்மா போகக்கூடா தாகையால், மநதி லன்பும் வாக்கிற் தோத்திரமும், கரத்தி லாராதனைக் குரிய புஷ்பாதியுங் கொண்டு சற் குருவைத் தேடிப் போனா னென்பார், "வெறுங் கையோடே போகாத வண் ணஞ் சென்" றெனவும், பிரம ஞாநாதி நான்குமே திருமேனியா யுடைத்தானவ ராய், மேகம் போற், கைமா றின்றி மகா வாக்கிய முபதேசிக்கின்றவரா யிருக்கின்ற ஞாநாசாரியரைத் தரிசித்து, சிவ சாக்ஷி குறியாமற், திரு வடி சாக்ஷி யாக, அட்டாங்காதி

யுடன் பணிந்தான் என்பார், "ஞான சற்குருவைக் கண்டு நன்றாக வணங்கினனே" எனவுங் கூறினர்.

(இ—ம்) ஈஷணாத் திரய மான துன்பங்களி னின்று நீங்கி, ஞாநாச் சாரிய ரைத் துதித்து வணங்கினு னென்ப தாம். 13

(அ—கை.) வணங்கிய, சிடன் பின் யாது செய்தா னெனில்?

14 வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ் வெனுஞ் சோ கத்தால், உணங்கினே னைய னேயென் னுள்ளமே குளிரும் வண்ணம், பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சிந்த மாக்க, இணங்கிய குருவே யென்னை யிரக்ஷிக்க வேண்டு மென்றான்.

(ப—ம்) பிறரா லடிபட்ட வெப்பத்துடன் வந்து, பிதாவைக் கண்டவுடன் அழுகின்ற குழந்தையைப் போலத், தாபத் திரயத்தால் வருத்த முற்று வந்தவன், அதை நீக்குஞ் சற் குருவைக் கண்டவுடன் துக்கக் கண்ணீர் சிந்தினு னென்பார், "அழு" தெனவும், நித்திய மான அகண்டாநந்தத்தை விட்டு, அநித்திய மா யநந்த துக்கத்துட னிருக்கும் பொய் வாழ்வைச் சத்திய மாகக் கருதி வாடினு னெனபார், மாய வாழ்வெனுஞ் சோகத்தா லுணங்கினே" னெனவும், வாக்கு மநதுக் கெட்டாத சொரூபந் தனக்குக் குருவாய் வந்த தென்பார், "அய்யனே" யெனவும், திரி கரணத்துள் முக்கிய மான மநங் குளிராவிடில், துன்பம் நீங்கா தென்பார், "உள்ளமே குளிரும் வண்ண" மெனவும், சுளுவா யவிழ்க்கக் கூடாத பின்னற் கட்டுக் குட்பட்டவன், அவிழ்த்துக் கொள்ளும் சுவாதீந



மின்றி வருந்தச் செய்யு மக் கட்டினை அவிழ்த்து விட்டுச், சுகஞ் செய்விக்கும் அரு ளுடையோர் போல, தத்துவ ஞாநம் வருகிற வரைக் கெடாத தாகிய பஞ்ச கோசத்தை, 'நா' னென்னும் புத்தி யாகிய பின்னலுக் குட்பட்டு, நீக்கிக் கொள்ளுஞ் சுவாதீந மின்றித் துன்புறுவேனை, அப் பின்னலி னின்று நீக்கி யகண்டாநந்தந் தரச் சம்மதித் திருக்கிற தேசிகரே யென்றானென்பார், "பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சிந்த மாக்க யிணங்கிய குருவே" யெனவும், கடலி லிருப்போனைக் கரையி லேற்றுவது போலப், பவ சமுத்திரத்தி லிருக்கும் என்னை, மோக்ஷ தீரத்தி லேற்ற வேண்டு மென்பார், "இரக்ஷித்தல் வேண்டு" மெனவும் கூறினர்.

(தா—ம்) அறி வின்மையால் வரும் பவத் துன்பத்தை நீக்கி, யறிவினல் வரும் இன்பத்தில் மூழ்கும்படி செய்விக்க ஆசாரியரை வேண்டிக் கொண்ட தாம். 14

(அ—கை) சீடன் வேண்டிக் கொண்ட பின், ஆசாரியர் யாது செய்தா ரெனில்?

15. அன்னைதன் சிசுவை யய்ய னுமைமீன் பறவை போலத், தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதியி ருந்தீ, உன்னது பிறவி மாற்று மூபாயமோன் றுண்டு சொல் வேன், சொன்னது கேட்பா யாகிற் றொடர்பவந் தொலையு மென்றார்.

(ப—ம்) மருந்து கொடுத்து வியாதியை நீக்கி, அமு தூட்டி உடலை வளர்க்குந் தாய் போல, மைத் திரியாதி குணங்களைக் கொடுத்து, ராகாதிகளை நீக்கி,

உபதேச மொழியால், அறிவை வளர்க்கப்பட்டவ
ரென்பார், "அன்னே" யெனவும், விஷயத்தை
நினைக்கு மாகாமியத்தைக் கெடுத்து, அறிவை யுண
ரும்படி சிந்தித்தா ரென்பார், "ஆமை போற் கருதி"
யெனவும், முன் பந்தப்பட்டிருக்கின்ற சஞ்சித
மொழிந்து, தனது சத்தா மாத்திர மான திருஷ்டி
வரும்படி பார்த்தா ரென்பார், மீன்போல் நோக்கி"
எனவும், பிராரத்த மாக வந்த பௌதிக வடிவம்
நித்தியாநந்த மாக விளங்கத், தனது பூரணாநந்த மாக
வியாபித்தா ரென்பார், "பறவை போற் றடவி"
யெனவும். வியவகாரத்திற் றனக் குண் டாகிய
அஞ்ஞானத்தை, ஞானத்தால் நீக்கியிருப்பதால், அந்த
ஞானாநுபவ மிருக்கிறது உபதேசிக்கிறே னென்று
ரென்பார், "உபாய மொன் றுண்டு சொல்வே".
னெனவும், கெருடத் தியாநம், மந்திராதி, நம்பிக்
கேட் டநுட்டித்தல், புலி யாதி மீது தற் சுதந்தர
மின்றி யேவினபடி செல்லல் போல, உபதேசித்த
படி நம்பியப்பியாசிக்க வேண்டு மென்பார், "சொன்
னது கேட்பா யாகி" லெனவும் கூறினர்.

(வி—ம்) ஆறு வித தீட்சையில், நினைத்தலுடன்
தியானித்தலைச் சேர்த்து, கருதல் நோக்கல் தடவ லாதிய
மூன்று மிதிற் கூறப்பட்ட தெனக் கொள்க.

(இ—ம்) மூ வகைத் தீக்ஷை செய்து. உபதேசிப்பதற் காக,
அகங்கார மறியாமைக ளுளவோ வென ஆராய்ந்தா ரென்பதாம், 15

**(அ—கை) ஆசாரிய வசநங் கேட்ட சீடன்,
யாது செய்தான் எனில்?**



**16. தொடர்பவந் தொலையு மென்று சொன்னதைக்
கேட்டப்போதே, தடமடு மூழ்கி னுன்போற் சரீரமுங் குளிர்ந்துள்
ளாறி, அடருமன் பொழுகு மாபோ லாநந்த பாஷ்பங் காட்டி.
மடன்மலர்ப் பாதம் மீண்டு வணங்கிநின் றீது சொல்வான்,**

(ப—ம்) புண்ணிய பாவ சுக துக்க செநந மரண
சமுசாரம் அநாதி யென்பார், "தொடர் பவ"மென
வும், தாக முற்றவன், தண்ணீ ரிருக்கிற தெனவும்,
ஸ்திரி, புருடன் வரவு கேட்டல், குளத்து மீன்,
கொஞ்ச மழையால் சுக முறல் போல, சாமாநிய சுக
முற் றென்பார், "சொன்னதைக் கேட்டப் போதே
தடமடு மூழ்கி னுன்போற் சரீரமுங் குளிர்ந்துள்
ளாறி" யெனவும், நிறைந்த மதுக் குடம் வெய்யிற்
பட்டால் பொங்கி வடிதல் போல, நிறைந்த அன்பா
னது, குரு உபதேசிக்கிறே மென்றதைக் கேட்ட
மாத்திரத் தாநந்தக் கண்ணீர் காட்டிய தென்பார்,
"அடருமன் பொழுகு மாபோ லாநந்த பாஷ்பங்
காட்டி"யெனவும், இச்சை மிகுதியா லிஷ்டம் நிறை
வேறக் குருவுக்குத் தய வுண் டாக அடிக் கடி வணங்
கினு னென்பார், "மீண்டும் வணங்கி" யெனவுங்
கூறினர்.

(இ—ம்) ஆசாரிய வசநத் தக மகிழ்ந்து வணங்கி விண்ணப் 16
பஞ் செய்யத் தொடங்கின தாம்.

**(அ—கை) சீடன் விண்ணப்பஞ் செய்த தியா
தெனில்?**

**சொன்னது கேட்க மாட்டாத் தொண்டனு னுலுஞ்
சுவாமி, நின்னது கருணை யாலே நீரென்னை யாள லாமே, உன்**

னது பிறவி மாற்று முபாயமோன் றுண்டேன் றீரே, இன்ன
தென் றதைநீர் காட்டி யீடேற்றல் வேண்டு மென்றான். 17

(ப—ம்) அகமு மடமு மின்றிக் கேட்கத் தக்கவ
னென்பார், "சொன்னது கேட்க மாட்டாத் தொண்
டனானு" மெனவும், உபாசித்த தெய்வம், உபாச
கன் மறந் திருந்தாலும், உதவி செய்தல் போலச்,
சீடனுக்கு வேண்டியதைக் கேளா திருந்தாலும்,
வலிய அநுக்கிரகஞ் செய்யுங் குரு வென்பார், 'சுவாமி'
யெனவும், வாழையைச் சுடல் போலவும், மண்ணை
வேவித்தல் போலவும், மரத்தை வளைத்தல்
போலவும், மேகம் போலக் கைமா றின்
றிய வுமது பேரருளால் என்னை யாளலாமே யென்று
னென்பார், நின்னது கருணை யாலே நீ ரென்னை
யாளலாமே" யெனவும், பசியா லந்நஞ் சிக்கிரங்
கேட்டல் போலத், தாபத் திரய மிகுதியா லுபதேசிக்
கிறே மென்று கூறியிருக்கவும், விரைந்து வேண்டிக்
கொண்டா னென்பார், "இன்னதென் றதைநீர்
காட்டி யீடேற்றல் வேண்டு மென்று" னென்வுங்
கூறினார்.

(வி—ம்) 'கேட்கமாட்டா' வென்றதனால், கேட்
பேன், கேட்கமாட்டே னெனவுங் கூற வில்லை யெனவும்,
"கேட்கமாட்டாத் தொண்டனானாலும்" என்றதனால்,
அகங்கார மறியாமை யின் றெனக் காட்டிய தெனவும்
அறிக

(தா—ம்) அக மட மின் றெனக் குறிப்பா லறிவித்து, உப
தேசிக்க வேண்டிக் கொண்டா னென்ப தாம். 17



(அ—கை) வேண்டிக் கொண்ட சீடனுக்கு,
ஆசாரியர் செய்தது யாதெனில்?

18. அடங்கிய விருத்தி யானென் றறிந்தபின் செறிந்த
மண்ணின். குடம்பையுட் புழுமுன் னாதுங் குளவியின்
கொள்கை போலத், தொடங்கிய குருவு மாந்ம சொருபமே
மருவ வேண்டி, உடம்பினுட் சீவ னைப்பார்த் துபதேச மோது
வாரே.

(ப—ம்) இராகாதி நீக்கஞ் சோதித்து அறிந்து,
உபதேசிக்க வேண்டு மென்பார், "அடங்கிய விருத்
தியா னென் றறிந்த பின்" னெனவும், குளவி
சோதித் தெடுத்த புழுவை நோக்கிச் சத்தித்தல்
போல, யுத்தி யின்மை குயுத்தி விட்டுச் சயுத்தி யுடை
யவ னெனச் சோதித் தறிந் தாட்கொள்ளப்பட்ட
சீடன், ஆத்ம சொரூபத்தை யடையும்படி சாக்ஷி
தேகத்தை விட்டுச், சிவனை நோக்கி யென்பார்.
"செறிந்த மண்ணின் குடம்பையுட் புழுமுன்
னாதுங் குளவியின் கொள்கை போலத் தொடங்கிய
குருவு மாந்ம சொரூபமே மருவ வேண்டி யுடம்பினுட்
சீவனைப்பார்த்" தெனவுங் கூறினார்.

(வி—ம்) ஆறு வித தீக்ஷையிற், பாடஞ் சொல்ல
லுட னுபதேசித்தலைச் சேர்த்து, ஓதலாய் இதிற் கூறப்
பட்டது.

(தா—ம்) சீடன் மனது யதார்த்த சொரூபத்தைப் பார்த தலி 18
தாக விளங்கும் பொருட் டநுக்கிரகிக்கத் தொடங்கின தாம்.

(அ—கை) அவ்வாசியர் பவமுண்டான காரணமும், அது நிற்குங் கால வளவையுங் கூறல்.

வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி
றந்து, தீராத சுழற்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்,
பேராத கால நேமிப் பிரமையிற் றிரிவன் போதம், ஆராயுந்
தன்னைத் தானென் றறியுமவ் வளவுந் தானே. 19.

(ப—ம்) எதிரே சிடன் கேட்டுக் கொண்டிருந்தாலும், விசேடமாய்க் கூறு முபதேசத்தை வேறு சிந்தை யற்றுக் கேட்கும்படி யாய் அபிமுகப்படுத்தும் பொருட்டுக் கேளாய் என்பார், "வாரா" யெனவும், தன் மநத்தின்படி நடக்கின்ற புத்திரனை யென் மக னென்பது போல, தன்னை யடைந் தநுகூல விருத்தி யாய் நடப்பவ னென்பார், "என் மகனே" யெனவும், செல்வத்தை மறந்தவன் பிச்சைக்காரனாய்த் திரிவது போல, அகண்டாநந்த சொரூபத்தை மறந்து, எழுவகைப் பிறவியிலும் செநித்து மரித்துச் சுழன் றென்பார், "தன்னை மறந்தவன் பிறந்திறந்து திராத சுழற் காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றி" யெனவும்; உற்பத்தி திதி லயங்களை யுடையதென்பார், "பேராத கால நேமி" யெனவும், சில வருடத்தின் முன் பிறந்தேன், சில வருடத்தின் பின் னிறப்பே னென்னும் பிராந்தி யென்பார், "பிரமையி லெனவும், கர்மம் பத்தியினு லன்றி, ஞாநத்தினுலறியுஞ் சரீரத் திரய விலக்ஷண மான சிவனை, சத்திய ஞாந அநந்தாநந்த சொரூப மென் றறிகிற வரைக்கு மென்பார், "போத மாராயுந் தன்னைத்தா னென் றறியு மவ்வளவு" மெனவுங் கூறினுர்.



(தா—ம்) அறிவின்மையா லுண்டான பவம், அறிவுதயமாய்த் தன்னைத் தானென வுணரு மட்டு மிருக்கு மென்பதாம். 19

(அ—கை) தன்னை யறியும் வகை யா தென்று கேட்பா யானுல்?

20. தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேற், பின்னையத் தலைவன் றுனைப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன், உன்னைநீ யறிந்தா யாகி லுனக்கொரு கேடு மில்லை. யென்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே,

(ப—ம்) சரீரத் திரய விலக்ஷண சிவனையும், சச்சிதாநந்த கூடத்தரையு மறிந்தால், அந்தச் சச்சிதாநந்த கூடத்தர் தா னுகு மென்பார், "தன்னையுந் தனக்கா தாரத் தலைவனையுங் கண்டானேற் பின்னையத் தலைவன் றுனு" யெனவும், சச்சிதாநந்த கூடத்தரே சர்வ சாக்ஷி யாகிய பிரம மாய்ச் சம்சார நீங்குவ னென்பார், "பிரம மாய் பிறப்புத் தீர்வன்" எனவும், தாபத் திரயாதி துன்பத்தி லொன்று மில்லை யென்பார், "ஒரு கேடுமில்லை" யெனவும், இது வலியக் கூறக் கூடாத ரகசியார்த்த மென்பார், "நீ கேட்கையா லுபதேசித்தே" னெனவுங் கூறினுர்.

(தா—ம்) பிரமத்தை யறியும் வகையும், அறிந்தாற் சம்சாரந் தீருமென்றுங் கூறிய தாம். 20

அ—கை) இவ்வுபதேசத்தினுற் சீட னுமை வுபெருது ஆசிரியனை வினுதல்?

21. என்னைத்தான சடனு வுள்ளத் தெண்ணியோ சொன்னீ ரையா, தன்னைத்தா னறியா மாந்தர் தரணியி லொருவ ருண்டோ, பின்னைத்தா னவர்க ளெல்லாம் பிறந் திறந் துழலு வானேன், நின்னைத்தா னம்பி னேற்கு நின் னைய மருளு வீரே.

(ப—ம்) ஆசாரியர் தன தநுபவப்படி, தேகத் திற் றனு யிருந்த தன்னை, அறிய வேண்டு மென்ன அஃ தநுபவ மாகாத சிடன், றேகமே தா னெனக் கருதி, யென்னை யா னறிய வில்லையா வென்று னென் பார், "என்னைத்தான் சடனு வுள்ளத் தெண்ணியோ சொன்னீ" ரெனவும், வருணாச்சிரமி யாதி யாகத், தன்னை யறிந்த யாவர்க்குஞ் செநந மரண மேன் நீங்க வில்லை யென்று னென்பார், "பின்னைத்தா னவர்க ளெல்லாம் பிறந்திறந் துழலுவானே" னென வும், தா னென்ப திஃ தென வுண்மை வெளி யாகத் தெரிவிக்க வேண்டு மென்று னென்பார், "நின்னைய மருளுவீ" ரெனவுங் கூறினர்.

(தா—ம்) தன்னை யறிய வேண்டு மென்பதைச் சர்வத்திர சாதாரண மாகக் கொள்ளுந் தேக மெனக் கருதி. யதை யறிந்தவர்கள் பவ நீங்காமையாற் றானென்ப தநுபவ மாகும் பொருட்டு அத னி யல்பை விசாரித்த தாம். 21

(அ—கை) தா னென்ப தநுபவ மாகும் பொருட்டு விசாரித்த சிடனுக்கு, ஆசிரிய ருத்தரஞ் சொன்னதைக் கூறல்

22. இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வான் யா வன், அன்னவன் றன்னைத் தானென் றறிந்தவ னாகு மென்



ரூர்? சொன்னபின் றேகி யாரித் தூலமல் லாம லென்றான், பின்னது கேட்ட வையர் பீடையும் நகையுங் கொண்டார்.

(ப—ம்) சர்ம மாதி தத்துவ மாறும், வாக் காதி கருமேந்திரியம் ஐந்தும், பிராணாதி வாயு ஐந்தும், சுரோத்திராதி ஞானேந்திரியம் ஐந்தும், மந மாதி யந்தக் கரணம் ஐந்தும், அவித்தை சீவன் இரண்டும் ஆகிய இருபத் தெட்டுத் தத்துவமு மென தென் றறி யப்படுவதாற் றேகி யல்ல தேகமே. இவைகட்கு விலக்ஷண மான சச்சிதாநந்த வாத்மாவே தேகி யென வபரோக்ஷ மா யறிந்தவ னென்பார், "இன்னது தேகந் தேகி இவனென வுணர்வான் யாவன் அன் னவ" னெனவும், கண்டாகண்ட, மூர்த்தாமூர்த் தத்து ளொருவித மா யாவது யித் தேகத்தை விட்டுத் தேகி யில்லையே யென்று னென்பார், "தேகியா ரித் தூல மல்லாம" லெனவும், இத் தேகந் தானு யிருப் பவனை யெங்ஙன முய்விக்கலா மென ஆலோசிக்கு மந வருத்தமும், தேகந் தா னென வறிந்தவன் றேகி யுந் தா னென் றறிகுவ னென்னு மகிழ்சியு, நம்மிடத் திலே வந்துந் தெரிய வில்லையே யென வருத்தமு, மிப்படியு மறியாமை யுளவோ வெனப் புன் சிரிப்புங் கொண்டா ரென்பார், "பீடையு நகையுங் கொண் டா" ரெனவுங் கூறினர்.

(தா—ம்) ஆசிரியர் தன தநுபவ மான சுத்த சைதந்நியத்தைத் தா னெனக் கூறச், சிடன் றனக் கநுபவ மான தேகந் தா னன்றித் தான் வே றுளதோ வென வினவினதற் காக ஆசிரியர் வருத்த முற் றிரங்கிய தாம். 22

**(அ—கை) வருத்த முற்ற வாசிரியர், சிடன் ரு னென்பதை யறியும் பொருட்டு அவனை வினுதல்?**

தேகமல் லாமல் வேறே தேகியார் காணே னென்ருய்,
மோகமாங் கநவில் வந்து முளைத்தவ னவனுர் சொல்வாய்,
சோகமாங் கநவு தோன்ருச் சுழுத்திகண் டவனுர் சொல்வா,
யாகநீ நநவி லெண்ணு மறிவுதா னேது சொல்வாய். 23

*(ப—ம்) மது பாநம் போல, வருணுச்சிரமா தியை மாறுபடுத்திக் காட்டு மயக்க வறி வென்பார், ''மோக மாங் கந'' வெனவும், பய சரீரத்தாற் றுன் பங் கொடுக்கப்பட்ட தென்பார், ''சோகமாங்கந'' வெனவும், சுபாவ வறிவு, மயக்க வறிவ், மின்றிய தென்பார், ''சுழுத்தி'' யெனவும், மூங்கிலாற் கட்டிச் சாத்தி யிருக்கும் பூதத்துட் புகுந் தாட்டும் புருடன் போல,நித்திரையிற்;பிரே தம் போற் கிடக்கு முடலைத், தூக்கிக் கொண்டு சாக்கிரத்தில், அதன் றத்துவ நிலை வருணுச்சிரமாதியைக் குறித்துச் சுபாவ வறி வுடன் கருதும் பிரஞ்ஞை யென்பார், ''நீ நனவி லெண்ணு மறி'' வெனவுங் கூறினுர்.*

(தா—ம்) இத் தேகத்தைத் தவிரத் தேகி யொருவ னுளா னென்பது சிட னறியும் பொருட்டு, அவத்தாத் திரயங்களை யறி கின்றவனு ரென, ஆசிரியர் வினுவித் தனக்குத் தானே தோன்ற அறிவித்த தாம். 23

**(அ—கை) இவ் வுபதேசத்தினுற் சிடன்றன தாத்ம சொரூபத்தை நன்ருய் தெரிந்து கொள்ளாமல் அஃதை விளக்க வேண்டு மெனல், 'ஒக்கும்' ஆனு, லவ் வநு பவத்தி லிருப்பாயெனில், தெரியவு மில்லை. ஆயின், ஒக்கு மென்ற தெங்ஙன, மெனின்?**

நநவுகண் டதுநான் கண்ட நநவுள நீனைவு நீங்கிக்,
கநவுகண் டதுஞ்சு முத்தி கண்டது வேருென் றேபோற்,
றிநமநு பவித்த வொக்குந் தெரியவு மில்லைச் சற்றே.
மநதினி லுதிக்கும் பின்னை மறைக்கும தருளு வீரே, 24

*(ப—ம்) அவத்தாத் திரயத்துக்கு விலக்ஷண மாய் தேகி யென்னுளு மிருப்பது சுவாமி யறிவிக்கத் தெரிந்த தென்ரு னென்பார், ''நநவுகண் டதுநான் கண்ட நநவுள நினைவு நீங்கிக், கநவுகண் டதுஞ்சு முத்தி கண்டதும் வேருென் றேபோற், றிநமநு பவிப்ப தொக்கு'' மெனவும், அருத்தப் பிராப்தி விவேக முடையவ னுதலால், மழை காலச் சூரியன் போலத், தேகியின் சொருபந் தோன்றி மறைகிற தென்ரு னென்பார், ''மநதினி லுதிக்கும் பின்னை மறைக்கு'' மெனவும் கூறினுர்.*

(தா—ம்) இத் தேகத்தின்கண் ணவத்தைகளை யறிகின்ற தேகி யொருவ னுள னென ஒரு வாற்ரு னறிந்த சிடன், அஃது மின்மினி போலத் தோற்றி மறைதலின், தன் யதார்த்த சொரூப மிஃ தென விளக்க வேண்டு மென வேண்டிக் கொண்ட தாம். 24

**(அ—கை) வேண்டிக் கொண்ட சிடனுக்கு, ஆசிரியர் விளக்குகின்ற விதத்தைக் கூறல்.**

தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போல்,
ஆலத்தி னுடுக்கள் காட்டி அருந்ததி காட்டு வார்போற்,
றாலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூப மான,
மூலத்தைப் பின்பு காட்ட முநிவரர் தொடஙகி னுரே. 25

(ப—ம்) ஆ றிந்திரியத்தால் அறியப்படார்ததாயும், அணு வாகிய சீவனுக்கு ளணு வாயு மிருக்குஞ் சொரூப மென்பார், ''சூக்கும சொரூப'' மெனவும், தேக முதற் பிரகிருதி வரைக்கும் காரண மல்ல, சத்திய ஞாந வநந்தாநந்தப் பிரமமே காரண மென்பார், ''மூல'' மெனவும், மேலான மகா மௌந முடையோ ரென்பார், ''முநிவர'' ரெனவும் கூறினர்.

(வி—ம்) முநிவர ரென்ற பதத்துக்கு, வாக்கு மௌநம், ஞாந இந்திரிய நிக்கிரக மாகிய கரண மௌநம், தேக மசையாமை யாகிய காட்ட மௌநம், யோகத்தால் லயிக்கிற தாகிய மந மௌநம், இவை பய னற்றது. இதற்கு மேலான மகா மௌந மாவது. சகலமும் பிரமமாய்க் காண லெனக் கொள்க.

(தா—ம்) ஆசிரியா தடத்த விலக்கணையால் முன்பு சட மான தேக விலக்கணங் கூறி, யதை நீக்கிப், பின் சித்தே தா னென தேகி யிலக்கணங் கூறத் தொடங்கின தாம். 25

(அ—கை) இதுவு மது. 'வேதாந்த மெல்லாம், ஆனு, லெதனுற் பந்தம், எதனுல் வீ டெனில்?

அத்தியா ரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லு,
முத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லாம்,
மித்தையா மாரோ பத்தாற் பந்தமா மபவா தத்தால்,
முத்தியா மிவ்வி ரெண்டின் முந்தியா ரோபங் கேளாய். 26

(ப—ம்) கரும பத்தி காண்டத்தில் விவர்த்தமா யுற்பத்தி கூறிப், பந்த மோக்ஷங் கூறு தென்பார், ''அத்தியா ரோப மென்று, மபவாத மென்றுஞ்



சொல்லு, முத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லா'' மெனவும், அறியாமையாற் பஞ்ச கோசத்தையும், சகத்தையுஞ், சத்திய மா யா னென தெனக் கருதும் மயக்கமே கட் டென்பார், ''பந்த'' மெனவும், ஞாநத்தினுற் பஞ்ச கோச சகவில க்ஷண மான சொரூபத்தைத் தா னென் றறிவதுவே வீ டென்பார், ''முத்தி'' யெனவுங் கூறினர்.

(தா—ம்) தா னுகிய சித்தைத் தனியே தரிசிப்பிக்கும் நிமித்தந் தன்னைச் சக சிவ பர மாய்த் தோற்றுவித்த வாரோப யுத்தியுங், கூடத்தப் பிரமாத்துவித மாகத் தோற்றுவிக்கும் அப்வாத யுத்தியு மாகிய விரண்டின், முந்தி யாரோப யுத்தியைக் கூறத் தொடங்கின தாம். 26

(அ—கை) ஆரோப வுத்தியைத் தெரிவித்த விதத்தைக் கூறல்.

ஆரோப மத்தி யாசங் கற்பனை யாவ தெல்லாம்,
ஓரோர் வத் துவினை வேறே யோரோர்வத் துவென வோர்தல்,
நாரொரு பணியாய்த் தோன்ற னரனுகித் தறியுந் தோன்றல், 27
நீரெனக் கான ருேன்ற னிறந்தலம் வெளியிற் ருேன்றல்.

(இ—ம்) அத்தியாரோபத்துக்குப் பரியாய நாமங் கூறி, யத னிலக்கணத்தைத் திட்டாந்த மாகக் கூறின தாம். 27

(அ—கை) நூட்டாந்தத்தில் அத்தியாரோப மானதைக் கூறல்.

இப்படிப் போலே நாம ரூபங்க ளிரண்டு மின்றி,
ஒப்பமா யிரன்டற் றெ ன்ரு யுணர்வொளி நிறைவாய் நிற்கும்.

அப்பிர மத்திற் றேன்று மைம்பூத விகார மெல்லாஞ்,
செப்புகற் பனையி னலே செநித்ததென் றறிந்து கொள்ளே. 28

(ப—ம்) உற்பத்தி நாச மில்லாத நித்திய மென்பார், "நாமரூப மிரண்டு மின்றி" யெனவும், சருவ சம மென்பார், "ஒப்பமாய்" எனவும், ஆநந்த மென்பார், "இரண் டற்று" எனவும், அத்துவிதம் என்பார், "ஒன்" றெனவும், சித் தென்பார், "உணர்" வெனவும், சுயம்பிரகாச மென்பார் "ஒளி" யெனவும் மூன்று பரிச்சேத மற்ற பூரண மென்பார், "நிறைவா" யெனவும், திரி காலத்து மிருக்குஞ் சத் தென்பார், "நிற்கு" மெனவும், பூத காரியமும், பிரகிருதி வரைக் காரணமு மென்பார், "விகார மெல்லா" மெனவுங் கூறினர்.

(தா—ம்) முற் கூறிய திட்டாந்தம் போ லுள்ள தான சுத்த சைதந்நியத்திற். சட மா யில்லாத தான சக சிவ பரந் தோன்றிய தெனச் சங்கிரக மாகக் கூறிய தாம். 28

(அ—கை) பிரமத்திற் கற்பித மாகச் சீவேசுர செகத் துண்டான முறையை, விஸ்தார மாய்க் கூறுகின் றூர்.

அதுதானெப் படியென் றக்கா லநாதியாஞ் சீவ ரெல்லாம்,
பொதுவான சுழுத்தி போலே பொருந்துமவ் வியத்தந் தன்னில்,
இதுகால தத்து வப்பே ரீசனுட் பார்வை யாலே,
முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்த மாமே 29

(ப—ம்) பிச்சைக்காரன் அரசன் முதலானவர்க், கேற்றத் தாட்சி யற்ற தென்பார், "பொதுவான சுழுத்தி" யெனவும், மெழு குண்டையிற் சொர்ண ரேணுவைப் போல், ஆதி யில்லாத சீவரனைவரும் பூர்வ சிருட்டி கர்ம வாசனையுடன் அடங்கி யிருப்பா ரென்பார், "அநாதி யாஞ் சீவ ரெல்லாம் பொதுவான சுழுத்தி போலப் பொருந்துமவ் வியத்தந் தன்னி" லெனவும், சத்திய ஞாந பூரண சொரூப மான தன்னிடத்தில், அத்தியாசைக்கியமா யிருக்கும் அவ்வியத்த சத்தியைப் பிரித்துப் பார்க்கக், கால தத்துவ மென்னும் பெயரை யடைந்தது என்பார், "கால தத்துவப் பே ரீச னுட்பார்வையா" லெனவுங் கூறினர்.



(தா—ம்) பரிபூரண மான பிரம சொருபத்தி னீக்ஷணையினுல், அவ்வியத்த சத்தி முக் குணங்க ளாய் வியத்த மாயின என்ப தாம்.

(அ—கை) அந்த முக் குணங்களின் நாமமாதி யா தெனில் ?

உத்தம வெளுப்புச் செம்மை யுரைத்திடு கறுப்பு மாகும்,
சத்துவ குணத்தி னேடு ரசோகுணந் தமோகு ணந்தான்,
சுத்தமோ டழுக்கி ருட்டாய்ச் சொல்லுமுக் குணமு மூன்றுய்,
ஒத்துள வெனினுந் தம்மு ளொருகுண மதிக மாமே. 30

(ப—ம்) படிகக் கல் போலப் பரிசுத்த மாய், ஆத்ம ஞாநத்தை விளக்கி யாநந்த முண்டாக்குவ தென்பார், "சுத்த" மெனவும், காவிக் கல் போல, மா சுள்ள தாய் ஆத்ம ஞாநத்தை மயக்கி ஆசை யுண்டாக்குவ தென்பார், "அழுக்" கெனவும், நீலக் கற் போ லந்தகாரமாய், ஆத்ம ஞாநத்தைப் போக்கிச், சகஞ் சத்திய மெனக் காட்டித் துன்பந் தருவ தென்

பார், இருட்'' டெனவும், பிரமமே நா மென்னும் ஞாநத்துடன், செகத் காரணமா யிருக்கின்ற ஈசுர னுக் கேதுவான சத்துவ குண மென்பார், ''ஒரு குண மதிக'' மெனவுங் கூறினர்.

(தா—ம்) முக் குணங்களின் நாமமு, நிறமும், சுபாவமுங் கூறிய தாம். 30

**(அ—கை) மற் றோர் வகைச் சிருட்டியின் மரபு கூறுகின்றார்.**

**ஒருவழி யிதுவா மித்தை யொருவழி வேருய்ச் சொல்வர்.**
**மருவுமவ் வியத்தந் தானே மகதத்வ மாகு மந்த,**
**வருண்மக தத்து வந்தா னகங்கார மாகு மென்றுங்,**
**கருவகங் கார மூன்ருய்க் காட்டிய குணமா மென்றும். 31**

(ப—ம்) மழை பெய்தபின் வித்தானது பொருமினது போல், அவ்வியத்தமு, மாங்காரமு மின்றி யிருக்கு மென்பார், ''மருவு மவ்வியத்தந் தானே மக தத்துவ'' மெனவும், பொருமின வித்தில் முளை கிளம்புவது போல, மக தத்துவத்தி லிருந்து நா னென்னுந் தோற்ற மாகிய மகத் அகங்கார முண்டா மென்பார், ''அருண்மக தத்து வந்தா னகங்கார மாகு'' மென்றும், செகத்துக்குக் காரண மான வகங் கார மென்பார், ''கரு வகங்கார'' மெனவும், அவ் வாங்காரம், வைகரி யகங்காரம் தைசத வகங்காரம், பூதாதி யகங்கார மாகு மென்பார், ''மூன் ருய்க் காட்டிய குணமா'' மெனவுங் கூறினர்.



(தா—ம்) முக் குணங்க ளுண்டாகு முன் வே ருெரு வித சிருட்டி யுண்டான கிரமத்தைக் கூறின தாம். 31

**(அ—கை) முற் கூறிய குணங்களிற் சக சீவ பர உற்பத்தியைக் கூறுவான் ருெடங்கி, முன்னர் பர னுற்பத்தியைக் கூறுகின்ருர்.**

**இக்குணங் களிலே விண்போன் றிருக்குஞ்சிற் சாயைதோன்றும்**
**முக்குணங் களினுந் தூய்தா முதற்குண மாயை யாகும்,**
**அக்குணப் பிரமச் சாயை யந்தரி யாமி மாயை,**
**யெக்குணங் களும்பற் ருதோன் நிமித்தகா ரணனு மீசன். 32**

(ப—ம்) செகத் காரண மென்பார், ''மாயை'' யெனவும், சர்வஞ் ஞத்வாதி சட்குண ஐசுவரிய சம்பந்த னென்பார், ''ஈச'' னெனவும், காரண சரீ ரத்தை யபிமாநித்துக் கொண்டு, சகல சரீர உள் ளீடா யிருந்து ஆட்டுகின்றவ னென்பார், ''அந்தரி யாமி''யெனவும், முக் குணத்திலும், முக் குணங்க ளின் காரியங்களிலும், பற்றற் றிருக்கப்பட்டவ ரென் பார், ''மாயை யெக் குணங்களும் பற்ருதோன்'' எனவும், கடத்துக்குக் குலாலன் போல, சிருட்டி யாதி தொழிலைச் செய்கின்றவ னென்பார், ''நிமித்த காரணனு'' மெனவுங் கூறினர். 32

**(அ—கை) ஈச னவத்தை யாதியும், சீவப் பிரதிபிம்ப நாமாதியுங் கூறல்.**

**ஈசனுக் கிதுசு ழுத்தி யிதுவேகா ரணசரீரங்,**
**கோசமா நந்த மாகுங் குணமிரா சதம வித்தை,**

தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவ கோடி,
நாசமா முயிர்க்கப் போது நாமமும் பிராஞ்ஞ னாமே. 33

(ப—ம்) சகலரையுந் தான் சிக்ஷித்து, ஒருவரா லுஞ் சிக்ஷிக்கப்படாதவ ரென்பார், ''ஈச''னெனவும், சகல பிரபஞ்ச வாசனையு மடங்கியிருக்கின்ற லய ஸ்தான மென்பார், ''சுழுத்தி''யெனவும், பசைப்படம் போல, ஈசுரன் றோன்றினதற்கு மேற், றோன்றுஞ் சகத்துக்கு மூல மென்பார், ''காரண சரீர'' மெனவும், பிரளய காலத்தி லானந்தத்தையுஞ், சர்வஞ்ஞத் வாதி குணத்தொடுங், கூடிக் கொண்டு இரணிய கர்ப்பாதி சுகத்தையும், அநுபவிக்கின்ற தென்பார், ''ஆனந்த மய கோச'' மெனவும், மூங்கிலிற் பிறந்த அக்கினி மூங்கிலைச் சுடுவது போல், வித்தையினாற் கெடுகின்ற தென்பார், ''அவித்தை'' யெனவும், ஆத்ம சொரூபத்தை மறைத்து, அநாத்மாகாரத்தைத் தோற்றுவித்து, அந்தகார மாயிருக்கின்ற தென்பார், ''தேசறு மவித்தை'' யெனவும், கர்த்தா போக்தா ஞாதா வாகச் சீவனம் பண்ணுகிறவர்க ளென்பார், ''சீவ கோடி'' யெனவும், கெடுவ தான சாக்கிரா வத்தை முதல் மோக்ஷம் வரைச் சீவனுக்குத் தொழி லென்பார், ''நாச''மெனவும், மன மாதி யிந்திரியங்களை யசைக்கின்றவ னென்பார் ''உயிர்'' எனவும், வியஷ்டி காரண சரீரத்தை யபிமானித்துக் கொண்டு சுழுத்தி யி லஞ்ஞானத்தையும், அதி லானந்தத்தையும் கரண சகாய மின்றி வறிகின்றவன் என்பார். ''பிராஞ்ஞ' னெனவுங் கூறினார்.
33



(அ—கை) சீவனது சுபாவ மாதியைக் கூறு கின்றார்.

அழுக்கொடு பற்றுஞ் சீவர்க் கதுவேயா நந்த கோசஞ்.
சுழுத்திகா ரணச சரீரஞ் சொன்னதிம் மட்டு மோக,
முழுக்குணத் திரண்டால் வந்த மூலவா ரோபஞ் சொன்னோம்.
வழுத்துசூக் குமவா ரோப வழியுநீ மொழியக் கேளாய். 34

(ப—ம்) படிகம் அடுத்த வர்ணஞ் சார்வது போல், அவித்தை, அவித்தை காரியங்களினாற். பொருந்திய வண்ண,மாவது சீவன் சுபாவ மென் பார், ''அழுக்கொடு பற்று' மெனவும், சுழுத்தியி லுண்டாகுஞ் சுகத்தையுஞ், சொற்பனாதி யவத்தை யிற், காமாதி விருத்திகளோடு கூடிப், பிரிய மோதப் பிரமோத மாக வுண்டாகுஞ் சுகத்தையு, ''நான் சுகிக்கிறே'' னென்கிற தென்பார், ''ஆனந்த மய கோச'' மெனவும், சாக்கிர சொற்பன வவஸ்தை யடங்கி யிருக்கின்ற லய ஸ்தான மென்பார், ''சுழுத்தி'' யெனவும், சீவன் தோன்றினதற்குந். தூல சூக்ஷம சரீர முண்டாவ தற்கும், மூல மென்பார், ''காரண சரீர'' மெனவுங் கூறினார்.

(தா—ம்) சிற் சாயை பொருந்திய சத்துவ ராசத குணம் மாயை யவித்தை யெனவும், அந்தப் பிரதிபிம்பங்களினாமம் ஈசன் சீவ னெனவும், அவர்களுக்கு அந்த மாயை யவித்தையே காரண சரீரமுஞ், சுழுத்தி யவஸ்தையும். ஆனந்த மய கோசமு மெனவும், அக் காரண சரீரங்களை யபிமானித்து, அதனா லவர்களுக் குண்டான நாம மந்தரி யாமி பிராஞ்ஞ னெனவும், அவர்களுக்குத் தொழில், சிருட்டி யாதியும் சாக்கிராதியு மெனவும், அவர்களுக்குச் சுபாவம், பற்றற் றிருக்கிறதும்

பற்றியிருக்கிறது மெனவும், இவை யனைத்துங் காரண வத்தியாச மென வுங் கூறிய தாம். 34

(அ—கை) ஜீவேசுரர்களுக்குச் சூக்ஷும சரீராதி யுண்டான முறையைக் கூறுவான் றொடங்கி, முன்பு சத்திகளின் றோற்ற முரைக்கின்றார்.

ஏமமா யாவி நோத வீசனு ரருளி னாலே,
பூமலி யுயிர்கட் கெல்லாம் போகசா தநமுண் டாகத்,
தாமத குணமி ரண்டு சத்தியாய்ப் பிரிந்து தோன்றும்,
வீமமா மூட லென்றும் விவிதமாந் தோற்ற மென்றும். 35

(ப—ம்) அமிர்தம் போலத், தானும் சுகமா யிருந்து கொண்டு, சகலருக்குஞ் சுகஞ் செய்விக்கின்ற மாயையை யுடையவ னாய்க் குழந்தையைப் போலச் சிருட்டி யாதிகளை, வருத்த மின்றிச் செய்கின்ற வ னென்பார், "ஏம மாயா விநோத ஈச" னெனவும், குழந்தை கூபத்தில் விழ, மாதா விழுதல் போல, பே ரருளா லச் சீவர்களை ரக்ஷிக்கும் நிமித்தம் பிரமாதி யவதார மெடுத்த லென்பார், "ஆரரு" ளெனவும், இராக் காலத்திற் றிருடர் முதலானவற்றால் துன்ப முண்டாவது போலப், பிரம சொரூபத்தை மறைத் துப், பிரபஞ்ச மாகத் தோற்றுவித்துப், பிறப் பிறப் புண்டாக்குவ தென்பார், "வீமமா மூட" லெனவுங் கூறினார்.

(வி—ம்) "உயிர்கட் கெல்லாம் போக சாதந முண் டாக" வென்பதனாற், சீவர்கள் சமட்டியே ஈசுர னாதலின், அவ் வீசுவரனுக்குங் கொள்க.



(தா—ம்) சிற்சாயை தங்கிய தமோ குணம், அறிவு விளங் காத தாகிய ஆவரண சத்தி யாகவும், அறிவு விளங்குவ தாகிய விக்ஷேப சத்தி யாகவும் தோற்றின வென்ப தாம். 35

(அ—கை) விக்ஷேப சத்தியிற் றன் மாத்திரை யான சூக்ஷும பூத உற்பத்தி கூறல்.

தோற்றமாஞ் சத்தி தன்னிற் சொல்லிய விண்ணும் விண்ணிற்,
காற்றதாங் காற்றிற் றீயாங் கனலினீர் நீரின் மண்ணும்,
போற்றுமிவ் வைந்து நொய்ய பூதங்க ளென்று பேராம்.
சாற்றுமற் றிவற்றிற் போக சாதந தநுவுண் டாகும். 36

(ப—ம்) தன் மாத்திரைகள் வாக்கு மாத்திர மென்பார், "போற்று" மெனவுங் கூறினார். 36

(அ—கை) தன் மாத்திரயின் சத்துவ குணத் தில், அந்தக் கரண ஞானேந்திரிய வுற்பத்தி கூறல்.

ஆதிமுக் குணமிப் பூத மடங்கலுந் தொடர்ந்து நிற்கும்,
கோதில்வெண் குணத்தி லைந்து கூறு ணர் கருவி யாகும்,
ஓதிய பின்னை யைந்து முளம்புத்தி யிரண்டா ஞாந.
சாதந மாமிவ் வேழுஞ் சற்குணப் பிரிவி னாலே. 37

(ப—ம்) அந்தக் கரண, ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியப் பிராணன்களைப் போலத், தொழிற் கேது வல்ல வென்பார், "ஞாந சாதநமா மிவ் வேழுஞ் சற்குணப் பிறிவினால்" எனவுங் கூறினார். 37

(அ—கை) தன் மாத்திரையின் ரசோ குணத் தில், வாயு கன்மேந்திரியங்களி னுற் பபத்தி கூறல்.

இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்து மைந்தும்,
பிராணவா யுக்க ளென்றும் பெருந்தொழிற் கருவி யென்றும்,
பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகஞ்,
சுராசுரர் நரர்வி லங்காய்த் தோன்றிய வுயிர்கட் கெல்லாம். 38

(ப—ம்) பிரமாதி ஸ்தம்பாந்த வுயிர்க் கெல்லா மேற்றத் தாட்சி யற்று, அடையாள மாயும், பிரகாச மாயுமிருக்கின்றது சூக்ஷம சரீர மென்பார், "லிங்க தேகஞ் சுராசுரர் நரர் விலங்காய்த் தோன்றிய வுயிர் கட் கெல்லா" மெனவுங் கூறினர்.

(வி—ம்) 'பதி னேழும் லிங்க தேக' மென்ற பதத் துக்குச் சில நூ லாசிரியர் சூக்ஷம தேகம் '25, 24, 20, 19 தத்துவ மென்றதை, விடய மைந்தையும், ஞானேந்திரி யத்தி லடக்கியும், சித்தத்தையும், அகங்காரத்தையும், மநம் புத்தியி லடக்கியும், உள்ளத்தைப் பொது வாக வைத்தும், பதி னேழு தத்துவ மாகக் கூறின ரெனக் கொள்க. 38

(அ—கை) சூக்கும தேகத்தினுற் சீவேசற்கு வரு மபிமாந நாமாதி கூறல்.

இவ்வுடல் மருவுஞ் சீவ னிலங்குதை சதனென் றுவன்,
இவ்வுடல் மருவு மீச னிரணிய கருப்ப னுவன்,
இவ்வுட லிரண்டு பேர்க்கு மிலிங்கசூக் குமச ரீரம்,
இவ்வுடற் கோச மூன்று மிதுகநா வவத்தை யாமே. 39



(ப—ம்) வியட்டி சூக்கும சரீரத்தை யபிமா நித்துக் கொண்டு, பிரகாசமா யிருக்கின்ற வந்தக் கரணத்துடன் சம்பந்தப்பட்டிருப்பவ னென்பார், "தைசத" னெனவும், சமட்டி சூக்கும சரீரத்தை யபி மாநித்துக் கொண்டு ஞாந சத்தியுடன் கூடிச், சகல வந்தக் கரணத்தையும் பிரகாசிக்கின்றவ னென் பார், "இரணிய கருப்ப"னெனவும், காரண சரீரத் தைப் போலத் தெரியா திராமலும், தூல சரீரத்தைப் போலப், பிரத்தியக்ஷ மாய்த் தெரியாமலும், லாஞ்சந படம் போல, அநுமாநத்தினு லறியப்படுகின்றது, சீவேசுரர்களுக்குச் சூக்கும சரீர மென்பார், "இவ் வுட லிரண்டு பேர்க்கு மிலிங்க சூக்கும சரீரம்" என வும், நான் கிரியாவா னு னிச்சாவா னுன் ஞாநவான் நான் பெலவா, னுன் சங்கற்பவா, னுன் மதிமா னென்பது, ஈசுரனுக்குஞ், சீவனுக்கும், பிராண மநோ விஞ்ஞாந மறைப் பென்பார், "இவ்வுடற் கோச மூன்று" மெனவும், வாசநா ரூப மாய்ச் சூக்கு மமா யிருந்து, மநோ ராச்சியஞ் செய்தல், சீவேசுரர் களுக்குச் சொப்பந அவத்தை யென்பார், "இது கநா" வவத்தை எனவுங் கூறினர்.

(தா—ம்) விக்ஷேப சத்தியி லுண்டான தன் மாத்திரைகள் சூக்கும மாதலின், அவத்தை சூக்கும பூத மெனவும், அவற்றின் சத் துவ ரசோ குண சமட்டி விமட்டியி லுண்டான சரீரத்தையே ஈசுர சீவர்களுக்குச் சூக்கும சரீரஞ், சொற்பநாவத்தை, பிராண, மநோ, விஞ்ஞாந கோச, மெனவும், அச் சூக்கும சரீரத்தை யபிமா நித்து, அதனு லவர்களுக் குண்டான நாமம், இரணியகருப்பன் தைச தன், எனவும். இவை யனைத்தும் சூக்கும அத்தியாச மாகவுங் கூறின தாம். 39

(அ—கை) பஞ்ச பூத பௌதிகமான சகத் துற்பத்தியைக் கூறுவான் ருெடங்கி, யஃ துண்டாதற்கு யேது கூறுகின்றுர்.

சூக்கும சடமிம் மட்டுஞ் சொல்லினே மிப்பாற் றுலம்,
ஆக்குமா ரோபந் தானு மடைவினின் மொழியக் கேளாய்,
தாக்குமிவ் வுயிர்க்குத் தூல தநுவும்போ கமுமுண் டாகக்.
காக்குமவ் வீசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் ருனே, 40

(ப—ம்) மூத்தவன் இளையவனுக்கு முதல் கொடுத்த லாதி போலத். தநு வாதி கொடுத்து ரக்ஷிக்கின்ற யிறைவ னென்பார், ''காக்கு மவ் வீசன்'' என்ருர். 40

(அ—கை) பஞ்சிகாணமும், அவற்றினு லாகிய காரியமுங் கூறல்.

ஐந்துபூ தமும்பத் தாக்கி யதிற்பாதி நந்நான் காக்கி,
நைந்துதம் பாதி விட்டு நாலொடு நாலுங் கூட்ட,
வந்தது நூல பூதம் மகாபூத மிதனி னின்றுந்,
தந்தது நான்காந் தூல தநுவண்ட புவந போகம், 41

(ப—ம்) சராயு ஜம் அண்ட ஜம் சுவேத ஜம் உத்பிஜ்ஜ மாகிய நால் வகை யோ நிற் பிறக்கின்றது தூல சரீர மென்பார், தூல தநு'' வென்ருர். 41

(அ—கை) தூல தேகத்தினுற் சீவேசுரருக்கு வரு மபிமாந நாமாதிகளைக் கூறல்.



தூலமே மருவுஞ் சீவன் சொல்லிய விசுவ னுகும்,
தூலமே மருவு மீசன் சூழ்விராட் புருட னுகும்,
தூலஞ்சாக் கிரவ வத்தை சொன்னதோ ரந்ந கோசம்,
தூலகற் பனையீ தென்றே தொகுத்தது மநத்திற் கொள்வாய்42

(ப—ம்) வியட்டி தூல சரீரத்தை யபிமாநித்துக் கொண்டு விசுவத்தைப் பற்றுகின்றவ னென்பார், ''விசுவ'' னெனவும், சமட்டி தூல சரீரத்தை யபிமாநித்துக் கொண்டு, விசுவாகார மாய்ப் பரிணமிப்பவ னென்பார், ''விராட் புருட'' னெனவும், இரஞ்சித படம் போலப், பஞ்ச பூத பௌதிக மாய்த் தோற்றுகின்றது, சீவேசுரர்களுக்குத் தூல சரீர மென்பார், ''தூல சரீர'' மெனவும், சகல இந்திரியங்களாலும், சகல விவகாரமும், செய்வது சீவேசுரர்களுக்கு நந வென்பார், ''சாக்கிர அவத்தை'' யெனவும், சீவேசுரர்களுக்குச் சராசரப் பிரபஞ்சங்களை நா னெனவும், சருமாதிகளை நா னெனவும், மறைப்பதென்பார், ''அந்ந மய கோச'' மெனவும், சீவேசுவர செகத்தைப் பிராந்தி யென் றறிந்து கொள் ளென்பார், ''தொகுத்தது மநத்திற் கொள்வா,, யெனவுங் கூறினுர்.

**(தா—ம்) தமோ குண தன் மாத்திரை, பஞ்சீகரண மானதை, 'தூல பூதங்க' ளெனவும், அவற்றின் காரிய மான சரீரத்தையே, சீவேசுரர்களுக்குத் தூல சரீரஞ், சாக்கிராவஸ்தை, அந்ந மய கோச மெனவும், அத் தூல சரீரத்தை யபிமாநித்து, அதனு லவர்களுக்குக் குண்டான அபிமாநி நாமம், விசுவன் விராட் புருட னெனவும். இவை யனைத்துந் தூல அத்தியாச மெனவுங் கூறின தாம்,** 42

(அ—கை) சீவேசுரர்களுக்குப் பேதந் தெரிய வினுதலுக் குத்தரங் கூறல்.

சீரிய வீச னூர்க்குஞ் சீவர்க்கு முபாதி யொன்றேல்,
ஆரிய குருவே பேத மறிவதெப் படியென் றக்கால்,
காரிய வுபாதி சீவன் காரண வுபாதி யீசன்,
வீரிய மிருச மட்டி வியட்டியாற் பேத மாமே, 43

(ப—ம்) பரிபூரண ஞானத்துடன் பல சீவர்க்குஞ் சுகத்தைப் பண்ணப்பட்டவ னென்பார், "சீரிய வீசனூர்க்" கெனவும், ஆடு கரும்பி னிலையைத்தின்று குட்டிக்குங் காட்டுவது போல், சரியை கிரியை யோகங்களை யப்பியாசித்து, அதை யுபதேசியாது, ஆனை கரும்பைத் தின்று, தன் குட்டிக்குக் காட்டுவது போலத், தத்துவ ஞானத்தைப் பெற்று, அதைச் சிடனுக்கு மநுக்கிரகிப்பவ னென்பார், "ஆரிய குரு" வெனவுங் கூறினர்.

(தா—ம்) சூக்கும தூல மாகின்ற வுபாதிகளின் காரண காரியத்தினுலும், சமட்டி வியட்டியினுலும், பேத மென்ப தாம். 43

(அ—கை) சமட்டி வியட்டியி னிலக்கணங் கூறல்.

மரங்கள்போல் வியட்டி பேதம் வநமெனல் சமட்டி பேதஞ்,
சரங்கள்தா வரங்கள் பேதத் தனியுடல் வியட்டி யென்பார்,
பரம்பிய தெல்லாங் கூட்டிப் பார்ப்பதே சமட்டி யென்பார்,
இரங்கிய பல சீவர்க்கு மீசர்க்கும் பேத மீதே. 44



(ப—ம்) அவித்தையினு லருந்தல் பொருந்தலைக் குறித் தெப் போதுங் வருந்துகின்றவர்க ளென்பார், "இரங்கிய பல சீவ" ரென்றூர்.

(தா—ம்) சீவேசுர பேதத்தை வற்புறுத்திக் கூறிய தாம். 44

(அ—கை) அத்தியாரோப வுத்தியினுற் றன்னிடத்தி லாரோப மாகத் தோன்றின சகு சிவ பரங்களை யிதுகாறுங் கூறி, யிச் செய்யுளில், அதத்வியா விருத்தி லக்கணையால், அவைக ளுண்டான கிரமப் படி, லயிப்பிக்கும் அபவாத வுத்தியைச் சங்கிரகமாகக் கூறத் தொடங்கல்.

கற்பனை வந்த் வாறு காட்டினேங் காண்ப தெல்லாம்,
சொற்பநம் போலு மென்றே துணிந்தவன் ஞாநி யாவன்,
செற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்தவா காசம் போல,
வற்புத முத்தி சேரு மபவாத வழியுங் கேளாய். 45

(ப—ம்) சொப்பநத்திற் கண்ட பிரிய மான பெண் முதலியனவும், அப்பிரிய மான புலி முதலான வையு மான நாம ரூப மநதிற்குத் தோற்றிக் கொண்டு, வாக்கினுற் சொல்ல வந்தாலும், அதில் விருப்பு வெறுப் பின்மை போல், சாக்கிரத்தில், நல்லது, பொல்லாத தாய்த் தோன்றுஞ் சராசரப் பிரபஞ்சத்தில், மித்தையா புத்தியினுலே, விருப்பு வெறுப்பில்லாதவனே, ஆத்ம சொரூபத்தை அநுபவ மாகக் கண்ட தத்துவ ஞாநி யென்பார், "காண்ப வெல்லாஞ் சொற்பநம் போலு மென்றே துணிந்தவன் ஞாநியாவ" னெனவும், தூளி மேக மின்றிய வாகாசம்போல்

சகல கேவல மற்றிருக்கும் அகண்ட சொரூபந் தானா கின்ற பர முத்தி யென்பார், "செற் புதை மழைக் காலம் போய்த் தெளிந்த வாகாசம் போல வற்புத முத்தி" யெனவுங் கூறினர்.

(தா—ம்) மித்தியா திருட்டியாற், சக சீவ பர மில்லை யென்று திட நிச்சய மா யறிந்தவனே ஞானி யென்ப தாம். 45

(அ—கை) அபவாத விலக்கணங் கூறல்.

அரவன்று கயிறென் றாற்போ லாளன்று தறியென் றாற்போற்,
குரவன்சொல் லுபதே சத்தாற் கூறுநூல் வெளிச்சங் கொண்டு,
புரமன்று புவந மன்று பூதங்க ளன்று ஞாநத்,
திரமென்னும் பிரம மென்றுந் தெளிவதே யபவா தங்காண் 46

(ப—ம்) ஆசாரிய ருபதேசமும், அத்துவித ஞாந சாத்திரமு மின்றித், தேகாதி முப் பத்தைந்து தத்து வமு மில்லை. சத்திய ஞாந மாய்ப் பிரத்தியக் கபிந்ந பிரம சொரூபமா யிருக்கின்ற நாமே யிருக்கிறோ மென்று அநுபவ மாக அறியக் கூடா தென்பார், "குரவன் சொல் லுபதேசத்தாற் கூறு நூல் வெளிச் சங் கொண்டு புர மன்று புவந மன்று பூதங்க ளன்று ஞாநத் திர மென்னும் பிரம மென்றுந் தெளிவ" தென்றார்.

(வி—ம்) புவந மென்பது, சகளீகரித்திருக்கும் கைலாச முதலிய ஸ்தாநமும், பூதங்க ளென்பது, விராட்டு ருவமு மெனக் கொள்க.



(தா—ம்) வாத திருட்டியாற், சுருதி மூலமா, யாரோபத்தை நீக்கி, யதிஷ்டாநத்தைத் தரிசிப்ப தென்ப தாம். 46

(அ—கை) அபவாத யுத்தி கூறல்.

படமுநூ லும்போற் செய்த பணியும்பொன் னும்போற் பார்க்கிற்
கடமுமண் ணும்போ லொன்றுங் காரண காரி யங்கள்,
உடமுதற் சுபாவ மீறா யொன்றிலொன் றுதித்த வாறே,
அடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத வுபாய மாமே. 47

(ப—ம்) பிரமத்தி லுண்டான வெல்லாம் பிர மந் தா னென்று தடத்த மா யறிதலினால், அநுபவ முண்டாகா தென்பார், "உடன் முதற் சுபாவ மீறா யொன்றி லொன் றுதித்த வாறே அடைவினி லொ டுக்கிக் காண்ப தபவாத வுபாயமா" மென்றார்.

(தா—ம்) பிரவிலாப திட்டியாற் றன்னிடத்திற் கற்பித மான சக சீவ பரங்களைத், தன துருவ மாக ஒடுக்கிக் காண்பதே, யபவாத யுத்தி யென்ப தாம். 47

(அ—கை) முற் கூறிய ஆவரண சத்தி யிலக் கணம் யா தென வினாதலுக் குத்தரங் கூறத் தொடங் கல்.

தூடண தமத்தில் வந்த தோற்றமாஞ் சத்தி செய்யும்,
ஈடணை விகாரஞ் சொன்னீ ரிரண்டுசத் திகளென் றீரே,
மூடலாஞ் சத்தி செய்யு மோகமுஞ் சொல்லு மையா, 48
கேடறக் குருவே யென்னக் கிருபையோ டருளு வாரே,

(ப—ம்) தீமை செய்தவனை யாவரும் நிந்திக்கின்றது போல, ஆவரணம், விக்ஷேப மென்னு மிரண்டு சத்தி யாகித் துன்பப் படுத்துவதால், யாவரும் நிந்திக்கப்பட்ட தென்பார், "தூடண தம" மெனவும், இச்சை யுண்டானாற் பிரபஞ்ச முண்டு, அது இல்லா விட்டாற், பிரபஞ்ச மில்லை யாகையால், இச்சாரூபமே பிரபஞ்சாகார மென்பார், "ஈடணை விகார" மெனவும், மிகுந்த மது பானம் பண்ணினவன் புத்தி மயங்கி, நன்மை தீமையைப் பகுத் தறியாதது போல, ஆத்ம ஞானத்தை மறைத்து, ஆத்மாநாத்மாக்களின் பேதந் தெரியாது மயக்குவ தென்பார், "மூடலாஞ் சத்தி செய்யு மோக" மெனவும், சம்சார நீங்கிச் சத்தா மாத்திர சொரூபமே தா னாகும்படி செய்ய வேண்டு மென்று னென்பார் "கேடற" வெனவுங் கூறினார்.

*(தா—ம்) பிரபஞ்ச முழுவதும் விட்சேப சத்தியே தோற்றிக் கொண்டிருப்பதால், அதைத் தவிர, ஆவரண சத்தி யெவ்விதமிருக்கிற தென் றறிய வேண்டு மெனக் கருதி வினவின தாம். 48*

**(அ—கை) ஆவரண சத்தியின் தன்மை கூறல்.**

தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட,
ஞானிகள் தமையு மன்றி நானத்தி னுபாதி யொன்றே,
ஊனிடை யுயிர்க ளுள்ளி லுணர்விழி குருடாம் வண்ணம்,
வானிலந் திசைகள் மூடு மழைநிசி யிருள்போல் மூடும். 49

(ப—ம்) சத்திய ஞான வனந்தானந்த சொரூபமேனா மென்னும் பரிபூரண ஞானத்துடன், சர்வஞ்ஞத்வாதி சட்குண ஐசுவரிய முடையவ னாய்ச், சகல சீவர்



களையும் இரக்ஷிக்கும் பொருட்டுச் சிருட்டி யாதி செய்கின்றதனா லிணை யற்றவ னென்பார், "தானிகர் தனக்கா மீசன்" எனவும், துவித, விசிட்டாத்துவித ஞான மின்றிப், பரிபூரண பரப் பிரம சொரூப மாயிருக்கின்ற தன்னை யறியும், பரமாத்துவித ஞானத்தை அப்பிரதிபந்த அபரோக்ஷ மா யடைந்தவர்க ளென்பார், "தங்களைத் தாங் கண்ட ஞானிக" ளெனவுங் கூறினார்.

*(தா—ம்) ஆவரண சத்தி யானது ஈசுவரனுந், தத்து வஞானியும் தவிர, மற்றைச் சீவர் களுடைய ஞான திட்டியை மறைக்கு மென்ப தாம். 49*

**(அ—கை) அவ் வாவரண சத்தி மறைக்கின்ற விதம் யா தெனில்,**

பூன்றமாம் பிரமத் துக்கும் புறத்துள விகாரங் கட்கும்,
ஆன்றகூ டஸ்த னுக்கு மகத்துள விகாரங் கட்கும்,
தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்றமல் மறைத்து மூடும்,
ஊன்றிய பவவி யாதி யுண்டாக்கு முபாதி யீதே, 50

(ப—ம்) நிரவயவ மாய், அமூர்தத மாய்ச், சூக்ஷம மாய், ஒரு தேசத்தில், ஒரு தேசமும், ஒரு காலத்திலொரு காலமும், ஒரு வஸ்துவி, லொரு வஸ்துவு மில்லாதது போ லன்றி, எல்லாத் தேசத்திலும், எல்லாக் காலத்திலும், எல்லா வஸ்துவிலும், நிறைவாய்ப் பெரிதுக் கெல்லாம் பெரிதா யிருக்கின்ற சொரூப மென்பார், "பூன்றமாம் பிரம" மெனவும், அடை கல்லுப் போல, வைராக்கியாதி, காமாதி, மயக்க மாதி தன்னிடத்திற் றோன்றி யொடுங்கவும், தானி

ருவிகாரியா யிருப்ப தாயும். ஞாந வைராக்கியாதி சற்குண மாகிற மலையி னுச்சியில் விளங்குவ தாயும், பிரத்தியக்ஷ மாயு மிருக்கின்ற சொரூப மென்பார், ஆன்ற கூடஸ்த"னெனவும், அசத்துச் சட துக்க மான முப்பத் தைந்து தத்துவங்களுக்கும், சச்சிதாநந்த சொரூப மான பிரம கூடத்தருக்கும், சிஞ்சித்தும் பேதந் தெரியாமல், ஒன்றி னுடைய லக்ஷணத்தை யொன்றின்மே லேற்றி, அத னதன் எதார்த்த சொரூபத்தை காட்டா தென்பார், "தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்ருமல் மறைத்து மூடும்" எனவும், தத்துவ ஞாநம் வருகிறவரையிற் கெடாதஜம் பெருந் துயராதி துன்ப வடிவ மான சம்சார நோயைக் கொடுக்கின்றது, ஆவரண சத்தியைத் தவிர, வே றல்ல வென்பார், "ஊன்றிய பவ வியாதி யுண்டாக்கு முபாதி யீதே" யெனவுங் கூறினர்.

*(தா—ம்) அதிட்டாந வாரோபங்களின், பேதந் தெரியாமல் ஒருமைப் பாடாக மறைக்கின்ற தாவரண சத்தியின் தன்மை யென்பதாம். 50*

**(அ—கை) அதிட்டாந, ஆரோபங்களின், பேதத்தை மறைக்கு மென்றதைச், சீடன், அதிட்டாநத்தை மறைக்கு மெனக் கருதிக் கொண்டு வினுக்குத்தரங் கூறல்.**

ஆதார மறைந்து போனு லாரோப மெங்கே தோன்றும்.
ஆதார மறையா தாகி லாரோப மிலையே யென்ருல்,
ஆதாரஞ் சமம் வி சேட மாமென விரண்டு கூரும்,
ஆதாரஞ் சமமா மெங்கு மாரோபம் விசேட மாமே. 51



(ப—ம்) அதிட்டாந மான பழுதை மறையினும், மறையா திருக்கினும், ஆரோப மான பாம்பு தோன்றற் கிட மின்மை போல, அதிட்டாந மான பிரமம் மறைந்து போனுலும், மறையா திருந்தாலும், ஆரோப சீவேசுர சகம் தோன்றற் கிட மில்லையே யெனக் கேட்பாயோ வென்று னென்பார், "ஆதார மறைந்து போனு லாரோப மெங்கே தோன்றும், ஆதாரம் மறையா தாகி லாரோப மிலையே யென்று" லெனக் கூறினர்.

(வி—ம்) அதிட்டாந சுத்த சைதந்நியம் சமமெனவும், அதனி லுதய மான நிச வடி வான பிரமமுங், கற்பித வடிவ மான சீவனும், ஒன்று விளங்கு மிடத் தோன்று மறைதலால், விசேட மெனவும், சுத்த சைதந்நிய வநுபவத்தி லிவ் விரண்டு மில்லாது, மித்தையாதலின், அவ் விசேடத்தை ஆரோப மெனவுங் கூறினதெனக் கொள்க

(தா—ம்) அதிட்டாநம் மறைபடும் போதும், மறைபடாத போதும், ஆரோபந் தோன்றக் கணக் கில்லையே யென்ற சீடனை நோக்கி, யவ்வதிட்டாந விலக்கணத்தை யிரண்டு விதமாகக் கூறின தாம். 51

**(அ—கை) இதுவு மது.**

சகமதி லிதுவென் சுட்டாஞ் சமாநந்தான் மறைந்தி டாது,
மிகவுரை கயிறு பாம்பாம் விசேடத்தின் மறைந்து போகும்,
அகமெனுஞ் சமாநந் தன்னை யஞ்ஞாந மறைத்தி டாது,
பகர்விசே டமதாஞ் சீவன் பரமெனு மதனை மூடும். 52

(பo—ம்) உபாதி ரகித மாய்ப் பிரமாதி யுயிர் களிடத்தில், நா னென்பது பேதப்படாமல், சமமா யிருக்கின்ற சுத்த சைதந்நிய மென்பார், "அக மெனுஞ் சமாந" மென்றார்.

(வி—ம்) காரிய மான ஆவரணத்தைக் காரண வஞ்ஞாந மென உபசரித்துக் கூறினா ரெனவும், அதிட் டாநத்தை மறையாது, மறைத் திருக்கையால், ஆரோ பந் தோன்று மெனவுங் கொள்க.

(தா—ம்) கற்பித ஆரோப மான சீவனைக் கொண்டு, எதார்த்த வாரோப மான பிரமத்தை யிவ் வாவரண மறைக்குமே யன்றி, யதிட்டாந மான சுத்த சைதந்நியத்தை மறைக்கமாட்டா தென்ப தாம். 52

(அ—கை) ஆத்ம ஞாநத்தை விக்ஷேப சத்தி யானது, அந்ந மய முதலிய தாய்த் தோற்றி மறைத் ததே யன்றி, யாவரண மெங்கே மறைத தென்கின் ற வினாதலுக் குத்தரங் கூறத் தொடங்கல்,

கேவல நிலைதோன் றுமல் கெடுத்தது பஞ்ச கோசம்,
சீவனுஞ் சகத்து மாகிச் செநித்தவிட் சேப மன்றோ,
ஆவர ணந்தா னேபா முநர்த்தமென் றுரைத்த தேதோ,
மேவருங் குருவே யென்று வினவின மகனே கேளாய். 53

(ப—ம்) ஆத்ம ஞாநத்தைச் சூநியம் பண்ணிச் சம்சார துன்பங் கொடுப்ப தென்பார், "பாழ் அநர்த்த" மெனவும், முமுக்ஷுக்க ளடைதற் கெளி தாயினும், மஞ்ஞாநிக ளடைதற் கரிய குரு வென்பார், 'மே வருங் குரு" வெனவுங் கூறினர்.



(வி—ம்) ஆநந்த மய கோசமும், சிவனும், விக்ஷேப காரியங்க ளல்லாதனவா யிருக்க, அங்ஙனங் கூறியி தென்னை யெனின், அவித்தையா காரிய மான அவையி னநுபவம். விக்ஷேப காரிய மான வந்தக் கரணத்தில், வெளிப்பட்ட தா லங்ஙனங் கூறிய தெனவும், நாற் பத் தொன்ப தாவது கவியில், "உணர்விழி குருடாம் வண் ணம் வான் நிலந் திசைகண் மூடு மழைநிசி யிருள்போன் மூடு" மென்றதைப், 'பா' ழென்றும், ஐம்ப தாவது கவி யில், "பவ வியாதி யுண்டாக்கு முபாதி யீதே" யென் பதை, 'அநர்த்த' மென் றுங் கூறிய தெனக் கொள்க.

(தா—ம்) ஆவரண சத்தியின் தீங்கை நன் காகவும், விக்ஷேப சத்தியின் நன்கைத் தீங்காகவுங், கருதிக் கொண்டு வினவினா னென்ப தாம். 53

(அ—கை) விக்ஷேப சத்தி, யாவரண சத்திகளி னன்கு தீங்கைக் கூறல்.

தோற்றமாஞ் சத்தி தானுந் துன்பமாம் பவமா னாலும்,
ஆற்றலான் முத்தி சேர்வார்க் கநுகூல மாகுங் காணீ,
ஊற்றமாம் பகற்கா லம்போ லுபகார நிசியா லுண்டோ,
மாற்றமென் னுரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப். பொல்
லாதே. 54

(ப—ம்) பகற் கால மானது, துர்ப்பிரவிர்த்திக்கு ஏதுவா யிருந்து, துன்பஞ் செய்வதா யிருந்தாலும், நற் பிரவிர்த்திக்கு ஏதுவா யிருந்து, சுகஞ் செய்வதா யிருப்பது போல,விக்ஷேப சத்தியானது, ஆத்ம ஞாந மடைய முயற்சி செய்யாத அஞ்ஞாநிகளுக்கு, இக

பரத் தொழிற் கேதுவா யிருந்து சம்சார துன்பங் கொடுத்தாலும், முமூக்ஷுக்களுக்கு சிரவணாதிக் கேதுவா யிருந்து, முத்தி யின்பங் கொடுக்கும். இராக் காலமானது பிரவிர்த்திக்கு உபயோகப்படாத நித்திரைக் கேதுவா யிருப்பது போல், ஆவரண சத்தி யானது மறைப்புக் கேதுவா யிருந்து, துன்பங் கொடுக்குமே யன்றிச், சிரவணாதிக் கேதுவா யிருந்து, முத்தி யின்பங் கொடுக்கா தென்று னென்பார், "தோற்றமாஞ் சத்தி தானுந் துன்பமாம் பவமா னாலு, மாற்றலான் முத்தி சேர்வார்க் கநுகூல மாகுங் காணீ, ஊற்றமாம் பகற்கா லம்போ லுபகார நிசியா லுண்டோ" வெனவும், ஆவரண சத்தி போல், விக்ஷேப சத்தி தீய தல்லவென்பார், "மறைப்பது மிகப் பொல்லா" தெனவுங் கூறினர்.

(தா—ம்) விக்ஷேப சத்தி அஞ்ஞாநிகளுக்குச் சம்சார துன்பமும், முமூக்ஷுக்களுக்கு மோக்ஷ வின்பமும், ஆவரண சத்தி யவ்விருவருக்கும், துன்பமுங், கொடுக்கு மெனச் சுருதி யுத்தியா லறிவித்த தாம். 54

(அ—கை) இன்னு மதனை வற்புறுத்தல்.

சுழுத்தியிற் பிரள யத்திற் றோற்றமாஞ் சகங்கண் மாண்டும்,
அழுத்திய பவம்போய் முத்தி யடைந்தவ ரொருவ ருண்டோ,
முழுத்தவிட் சேப மெல்லாம் முத்தியிற் கூட்டு விக்குங்,
கொழுத்தவா வரண முத்தி கூடாமற் கெடுத்த கேடே. 55

(ப—ம்) திநப் பிரளய மான சுழுத்தியிலும், பிரளயத்திலும், விட்சேபத் தோற்றம் மறைந்து போயும், அச் சுழுத்தியினால் இன்ன காரியங் கெடுத



லாயிற் றென்று, விழித்த பின் துன்புடன் சொல்வதனாலும், அந்தப் பிரளயத்தில் நின்று சராயுசாதி நால்வகை யோநியிற் செநித்திருப்பதனாலும், ஆவரண சத்தியில், முத்தி பெற்றோ ரில்லை யென்பார், "சுழுத்தியிற் பிரளயத்திற் றோற்றமாஞ் சகங்கள் மாண்டும், அழுத்திய பவம்போய் முத்தி யடைந்தவ ரொருவருண்டோ" வெனவும், தேகாதி சாதநங்களா யிருந்து பரம சுகத்தைக் கொடுக்கு மென்பார், "முழுத்த விக்ஷேப மெல்லா முத்தியிற் கூட்டுகிற்கு" மெனவுங் கூறினர்.

(தா—ம்) அறிவு விளங்கும் விக்ஷேப, முத்தி யின்பத்துக்குச் சாதநம், அறிவு விளங்காத ஆவரணம், பவத் துன்பத்துக்குச் சாதநமு மா,மென அநுபவத்தினாலும், அறிவித்த தாம், 55

(அ—கை) மித்தை யான விக்ஷேப சத்தியினால் வெளிப்படு முத்தி, மித்தையா மெனில்?

சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்ற மான,
சத்தியும் பொய்யே யென்றாற் சத்திசா தநமாய் வந்த,
முத்தியும் பொய்யா மென்னில் மோகநித் திரைவி லங்கால்,
நித்திரை தெளியு மாபோ னிருவாண நிலைமெய் யாமே. 56

(வி—ம்) "மோக நித்திரை விலங்கா னித்திரை தெளியுமா போ, னிர்வாண நிலை மெய்யாமே" யென்ற பதத்துக்குச், சொற்பநத்தில் ஸ்திரியைக் கூடுதல், பொய்யா யிருக்க, இந்திரிய கலிந மாவது மெய்யா யிருத்தல் போலவும், சொர்ண வயிரவன் பிரத்தியக்ஷ மில்லாதிருக்க, சொர்ணங் கிடைப்பது பிரத்தியக்ஷமா யிருப்பது

போலவும், திரவியம் கொடு வென்ற வசநம் பிரத்தியக்ஷ மில்லா திருக்க, கொடுக்கின்ற திரவியம் பிரத்தியக்ஷமா யிருப்பது போலவும், எனத் திட்டாந்தமாகச் சேர்த்துக் கொள்க.

(தா—ம்) மித்தையான சொப்பந சிம்மத்தினு லுண்டான சாக்கிரஞ். சத்திய மானது போல், தேகாதி களாய்த் தோற்றிய மித்தை யான விக்ஷேப சத்தியாலு ண்டான வீடுஞ், சத்தியமேயா மென்ப தாம். 56

(அ—கை) இச் சத்திகளை நீக்குகின்ற வடைவைக் கூறல்.

இம்பரி னஞ்சை நஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யும்,
அம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்,
வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்.
தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே, 57

(ப—ம்) தினந் தோறுங் குறைந்து வருகின்ற படியால்,நழுவுதல் சுபாவ மான அஞ்ஞாநாதி யசுத்த மாயையைச், சிரவணாதி சுத்த மாயையாற் கெடுப்பா ரென்று ரென்பார், "வம்பியன் மாயை தன்னை மாயை யான் மாய்ப்ப" ரெனவும், சொரூபத்தை மறைத்தவஞ்ஞாத்தை கெடுத்த ஞர்நமு, மேற் கெடுப்பதற்கு வேறொன் றின்மையால், அச் சொரூபாகார மாகு மென்பார், "தம்பமா மதுவுங் கூடச் சவஞ் சுடு தடிபோற் போமே" மெனவுங் கூறினார்.

(தா—ம்) அறியாமை யாயும், மறைப் பாயும், பெண் ணாதி பொன் னாதி யாயு மிருக்கின்ற அசுத்த மாயையைக். குரு சாஸ்தி



ராதி யாயுஞ், சிரவணாதி யாயு மிருக்கின்ற, சுத்த மாயை, கெடுத்துத் தானு நீங்கு மென்ப தாம். 57

(அ—கை) சீவாத்மாக்களுக்கு. அவ் விரு வித மான மாயைகளால், சத்தாவத்தைகள் வரு மாறும், அவற்றி னாமமுங், கூறல்.

இந்தமா யையினாற் சீவர்க் கேழவத் தைகளுண் டாகும்,
அந்தவே ழவத்தை தம்மை யடைவினின் மொழியக் கேளாய்,
முந்தவஞ் ஞாந மூடல் முளைத்தலகா ணாதை ஞாநஞ்,
சந்ததங் கண்ட ஞாநந் தழல்கெடல் குளிர்மை யாதல். 58

(ப—ம்) ஆவரணாதி யவித்தைகள், அஞ்ஞாநத்தி லுண்டாகியது போல், அஞ்ஞாநம், அவைகளி லுண்டாகாமையால், "முந்த வஞ்ஞாந" மென்றார்58

(அ—கை) அச் சத்தாவத்தைகளின் தன்மையைக் கூறல்.

பிரமமாந் தனைம றந்த பேதமை யேயஞ் ஞாநம்,
பரனிலை காணோ மென்று பகர்தலா வரண மூடல்,
நரனொரு கருத்தாற் சீவ னானென முளைத்த றோற்றங்,
குரவன்வாக் கியத்தாற் றன்னைக் குறிக்கொளல் பரோக்ஷ ஞாநம் 59

(ப—ம்) சச்சிதாநந்த பரிபூரணப் பிரமந் தானாயிராமலும், ஆவரணத்தினால், தேகாதி தானென்று வாராமலும், மத்தியில் மௌடடிய மான நிலையே யறியாமை யென்பார், "பிரம்மாந் தனை மறந்த பேதமையே யஞ்ஞாந" மெனவும், விவேகிக்கும், அவிவே

சிக்கும். ஆத்மப் பிரசங்கம் வந்த விடத்தில், 'ஆத்மா யில்லை. யெனக் கூறுகின்ற தசத்தாவரணம், பகிர்முகத்தில் விசாரித்து, "இருந்தாற் றோற்றுரோ" வென்று கூறுகின்றது, அபநாவ்ரண மென்பார், "பரனிலை காணே மென்று பகர்த லாவரண மூட" லெனவும், தாரித்திரி யாதி துன்ப நீங்க, உழ வாதி இக லோக கிருத்தியமும், நரக துன்ப நீங்க, மது பாநாதி நீக்கி, யாகாதி பர லோக கிருத்தியமுஞ், செய்ய வேண்டு மென்னும் கவலையினல், ஞாதா வா யறிந்து, கர்த்தா வாய்ச் செய்து, போக்தா வாய்ப் புசிக்கும் மனித னென சிவ னென உண்டாகுந் தோற்றம் விக்ஷேப மென்பார், "நர னொரு கருத்தாற் சிவனு னென முளைத்தல் தோற்ற" மெனவும், பூர்வ செங்ம புண்ணிய பரிபாகத்தால், சித்த சுத்தி, சாதந சதுட்டயம் பெற்றுச், சற் குருவை யடைந்து உபதேசம் பெற்று, அஞ்ஞாநிகளி, லாஸ்திகன் சொர்க்க முண்டெனக் கேட்டு நம்புவது போல். ஆத்மா வுண் டென வறிதல் காணுத ஞாந மென்பார், "குரவன் வாக்கியத்தாற் றன்னைக் குறிக் கொளல் பரோக்ஷ ஞாந" மெனவுங் கூறினர்.

(வி—ம்) சிந்தா மணி. 59

(அ—கை) இதுவு மது.

தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேக மும்போய்.
அத்துவி தந்தா னுத லபரோக்ஷ ஞாந மாகும்.
கர்த்தானும் சீவ பேதங் கழிவதே துக்கம் போகல்,
முத்தனு யெல்லாஞ் செய்து முடிந்ததா நந்த மாமே. 60



(ப—ம்) தற்பத தொம் பத வாச்சிய லக்ஷியங்களை விசாரித்துச், சீவாதி யீசுவராதி வாச்சியங்களை நீக்கி, லக்ஷிய மான கூடஸ்தப் பிரம ஐக்கியத்தை, அசம்பாவனை, சம்சய பாவனை. விபரீத பாவனை யின்றி யறிந்து, அவ் வைக்கிய சொரூபந் தா னுதல், பிரத்தியக்ஷ ஞாந மென்பார், "தத்துவ விசாரஞ் செய்து சகல சந்தேகமும் போ யத்துவிதந் தா னுதை லபரோக்ஷ ஞாந மாகு" மெனவும், போக போத்திருவின்றிச் சாக்ஷி யான் என்னு ஞாநத்தால், அத்தூல தேகத்தில், வயிறு வலி முதலிய வியாதியுஞ், சூக்ஷ்ம தேகத்திற் காமாதியுங், காரண தேகத்தில் வாசனையு மாகிய, இக லோக துக்கமும், நெருப்பில் கட்டை யில்லாதது போலவும், பாலை நிலத்தில் மான் செல்லாதது போலவும், புண்ணிய பாவ கருமப்பற்றின்றிச், சின்மாத்திர சொரூப மா யிருக்கின்ற அநுபவத்தால், "புண்ணிய மென்று வரும். பாவ மென்று போ" மென்னுஞ் சிந்தனை யாகிற பர லோக துக்கமும் நீங்குதலே. துன்ப நிவிர்த்தி யென்பார், "கர்த்தனுஞ் சீவ பேதங் கழிவதே துக்கம் போக" லெனவும், உழ வாதி யிக லோக கிருத்தியமும், யாகாதி பர லோக கிருத்தியமும், சிரவணுதி மோக்ஷ கிருத்தியமும், செய்து முடிந்த கிருத கிருத்தியத்தினுலும், பிரமாநந்த சாகரத்தி னோர் திவலை யாகிய பதினொரு வகை யாநந்தமும், "இத்தனை பேரா யிருந்து புசிக்கின்றது, நா மொருவன் றனே" யென்னும் சருவ காமாப்தியினுலும், புண்ணிய பரிபாக முதனிசாநந்தப் பேறு வரை யடைந்த, பிராப்த்தப் பிராப்பித்தயத்தினுலும், உண்டான சந்தோட மென்பார்,

"'முத்தனு யெல்லாஞ் செய்து முடிந்த தாநந்தமாமே''
எனவுங் கூறினர்.

(தாம்) அஞ்ஞாந மாவரண விக்ஷேப மூன்றும், அசுத்தமாயா சம்பந்தமும், பரோக்ஷ ஞாந முதலிய நான்கும், சுத்த மாயா சம்பந்தமு மாம். அவைகளிற். பரோக்ஷ ஞாநத்தினுல், அசத்தாவரணமும், அபரோக்ஷ ஞாநத்தினுல் அபாநாவரணத்துடன் மூலாஞ்ஞாநமும் துக்க நிவிர்த்தியினுல், விக்ஷேபமும் நீங்கும், அவைகள் நீங்கவே, யிவைகளின் நாமங்களும் நீங்கித் தடையற்ற வாநந்த மாகிய நிரதிசயாநந்தந் தானே விளங்கு மென்ப தாம். 60

(அ—கை) ஒரு புருடனுக்கே அஞ்ஞாநமும், ஞாநமும், பரோக்ஷமும், அபரோக்ஷமும், துக்கமும், ஆநந்தமும், எங்ஙன முண்டா மெனில்.

இதுநினக் கறியும் வண்ண மிப்படி யொருதிட் டாந்தம்,
புதுமையாங் கதைகேள் பத்துப் புருடரோ ராற்றை நீந்தி.
யுதகதீ ரத்தி லேறி யொருவனென் பதுபே ரெண்ணி,
யதனெடு தான்பத் தானேன் றறியாமல் மயங்கி னுனே 61

(ப—ம்) அஞ்ஞாநாதி யேழவத்தையு மொரு புருடனுக்கே யுண்டான வாச்சரிய மான கதை யென்பார், ''புதுமையாங் கதை'' யென்ருர்.

(தா—ம்) ஒருவனுக்கே யஞ்ஞாநாதி யுண்டா மென விளக்கு நிமித்தம், தச புமான் கதையைத் திட்டாந்த மாக் கூறின தாம். 61

(அ—கை) திட்டாந்த தாட்டாந்தங்களுக்கு ஒப் புவமைகாட்டல்.



அறியாத மயலஞ் ஞாந மவனில்லை காணு மென்றல்,
பிறியாவா வரண மாகும் பிடைகோன் டழல்வி க்ஷேபம்,
நெறியாளன் றசம னுண்டு நிற்கின்ரு னென்ற சொல்லைக்
குறியாக வெண்ணி நெஞ்சிற் கொள்வது பரோக்ஷ ஞாநம், 62

(ப—ம்) அபரோக்ஷ ஞாநம் வருகின்ற வரை நீங்காத மூட லென்பார், ''பிறியா வாவரண'' மெனவும், ஐயந் திரி பின்றி யாதார்த்தத்தைக் கூறும் ஆப்தன் வாக்கியத்தை நம்புகின்றது காணுத ஞாந மென்பார், ''நெறியாளன் றசம னுண்டு நிற்கின்ரு னென்ற சொல்லைக் குறியாக வெண்ணி நெஞ்சிற் கொள்வது பரோக்ஷ ஞாந'' மெனவுங் கூறினர். 62

(அ—கை) இதுவு மது.

புண்ணிய பதிகன் பின்னும் புருடரோன் பதின்மர் தம்மை.
யெண்ணிய நீபத் தானு மென்னவே தன்னைக் காணல்,
கண்ணினிற் கண்ட ஞாநங் கறைநல்போ வதுநோய் போகல்,
திண்ணிய மநதி லையம் தெளிதலா நந்த மாமே. 63

(ப—ம்) எண்ணிக்கை ''தெரிந்தவ னுயும், தன் காரியம் பிரதாநம் பண்ணுதவனுயும், வருத்தம் பாராத கிருபை யுடையவ னுயு மிருக்கின்ற மார்க்கஸ்த னென்பார், ''புண்ணிய பதிக'' னென்ருர்.

(தா—ம்) தசமனுக்குத் தன்னை மறந்ததனுல் வந்த வுபாதிகளையுந். தத் தரிசநத்தி லவைக ளீக்கத்தையும் கூறி, ஆத்மாவுக்கே ஞாநாஞ்ஞாநாதி வரலா மென வற்புறுத்திக் கூறிய தாம். 63

(அ—கை) தன்னைத் தரிசிப்பிக்க வேண்டு மென்று சிடன் விணுதலுக் குத்தரம்.

(அ—கை) ஆத்மா இவ் வாச்சிய லக்ஷியங்களி லெங்ஙனம் விளங்குகின்ற தெனில். 'கலந் தோன் ரும்'' 65

(அ—கை) ஒன்று யிருக்கி, னெனது நிச சொரூபத்தை யறிவ தெங்ஙன மெனில்?

(ப—ம்) கையினாற் பிறிக்கப்படாது கலந்திருக் கின்ற நெய்யைக் கடைந் தெடுகின்றது போல, வாச் சியத்திற் கலந்து, கர்மம் பத்தியினாற் பிறிக்கக் கூடா திருக்கும் லக்ஷியார்த்த சொரூபத்தை சிரவணாதியாற் பிறித் தறிய வேண்டு மென்பார், ''காச்சிய பாலி னெய் போல் கலந் தொன்றுங் கடைந் தெடுக்கும் ஆச்சிய மென்ன வுன்னை யறிந்து நீ பிறிந்து கொள்'' ளென்றார்.

(தா—ம்) தற் பத தொம் பதங்களின் வாச்சியார்த்தம் பர சீவ ரெனவும், லக்ஷியார்த்தம் பிரம கூடஸ்த ரெனவும், அத்தியாசத்தி னால் இரண்டு வாச்சியார்த்தமும், இரண்டு லக்ஷியார்த்தத்தில் கலந் திருக்கு மெனவும், வாச்சியார்த்தத்தில் உள்ள விரோதத்தை நீக்கி லக்ஷியார்த்தத்தை யறிந்து கொள் ளெனவுங் கூறின தாம். 66

(அ—கை) வாச்சியார்த்தத்தில் உள்ள விரோ தத்தை நீக்குகின்ற விதம் யா தென விறுதலுக் குத் தரங் கூறல்.

பிறிவதெப் படியென் றக்காற் பிணமாகு முடனா னென்னும்,
அறிவினைக் கொல்ல வேண்டு மைம்பூத விகார மன்றோ,
வெறியதோர் துருத்தி மூச்சு விடுவது போலுன் மூக்கா,
லெறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம். 67



(ப—ம்) தன்னைச் சூழ்ந்த பதார்த்தங்களை தேக மே யறிகையாலும், சிருக்கு சந்தந வநிதாதி போகங் கள், தேகத்தினிடத்திற் பிரயோசந மாகித், தேகமில் லாவிட்டாற் பிரயோசந மில்லாதபடியினாலும், சரீ ரத்தை விட வேறே யாத்மா வில்லாதபடியினாலும், நான் பருத்தே னிளைத்தே னென்கையாலும், தூல சரீர மாகிற அந்ந மய கோசமே யாத்மா வென்கிற புத்தியை, மரண மூர்ச்சை யாதி காலத்தில், தன்னைச் சூழ்ந்த பதார்த்தத்தை யறியாமையினாலும், அக் காலத்திற் றேக மிருக்கவும், சிர்க்கு சந்தந வநிதாதி கள் பிரயோசநப்படாமையாலும், பூதத்துள் ளிருந்து ஆட்டுகிறவன், பூதத் துக் கந்நியமா யிருத்தல் போலும் ரதத்தை யிழுக்குங் குதிரை, யதற் கந்நிய மா யிருத் தல் போலவும், உடலை யாட்டும் பிராண னாகிய வாத் மா, வந்நியமா யிருத்தலினாலும், தேகத்தி லிருந்து நீங்குகிற உயிர், அதற் கன்னியமா யிருத்தலினாலும் ''என் வீடு யென் மாடு'' யென்பவன், அதற்குப் புறம்பா யிருக்தல் போல, 'என் தேகம் பருத்த திளைத்த' தென்கையினாலும், பஞ்ச பூதத்தி லுற்பத்தி யானதனாலும், தேகம் அசத்து சடம் துக்கம் அநித்தம் கண்ட மா, யசுத்த மாய்க், கடத்தைப் போலத் திரிசிய மாய்ச், சட் பாவ விகார முடைய தாய், நம்மா லறியப்பட்ட தாயும் நம்மை யறியாத தாயு மிருத்தலாலும், தூல தேக மாகிய அந்ந மய கோசம் 'நா னல்ல' வென்று நீக்கவேண்டு மென்பார், ''பிறிவ தெப்படி யென்றக்காற் பிணமாகு முடல் நா னென்னு மறிவினைக் கொல்ல வேண்டு மைம்பூத விகார மன்றோ'' வெனவும், பிராணன், எல்லா

மிறந்த சுழுத்தியி லிருப்ப தனாலும் காற் றுண்டானால் தா னியமித்த விடத்துக்குக் கப்பல் செல்வதும் அஃதில்லாவிடில், அது செல்லாததும் போலப், பிராண னுண்டானால், சிர்க்ந சந்தந வநிதாதிகள் பிரயோசநப்படுகிறதாயும், உழ வாதி தொழில் நடக்கிற தாயும், பிராண னில்லாவிடில், சிர்க்கு சந்தந வநிதாதி பிரயோசநப்படாமலும், உழ வாதி தொழில் நடவாமலும், இருப்பதனாலும், பிராணன் நீங்கில் உடல் பிண மாகிறதனாலும் இதற் கயலாய் ஆத்மா யில்லாதபடியினாலும், ''நான் பெலவான், பெல வீநன், பசி தாக முடையவன் பேசினேன், கொடுத்தேன்'' என்கிறதனாலும் ராண மய கோசமே ஆத்மா வென்னும் புத்தியைபி மந தடங்கிய சுழுத்தியில், உடலுக்குக் காவலாய்ப் பிராண னிருக்கவும், மூட்டை. கடித்தல், மூக்குத்தி கழற்றல் முதலியவற்றை வறியாத தனாலும், அக் காலத்திலே கப்பலிலே பாய் கட்டு மா னில்லாத போது, காற் றிருந்தாலும், பிரயோசந மின்மை போல், சிர்க்கு சந்தந வநிதாதி பிரயோசநப் படாமலும், உழ வாதி தொழி னடவாமலும் இருப்பததனாலும், யோக மூர்ச்சை காலத்திற் பிராண னில்லாத போது, உடல் பிண மாகாமையாலும், போகின்ற யிடந் தெரியாது, ரதத்தை யிழுத்துச் செல்லுங் குதிரையை யோட்டுகிறவன், அதற் கந்நிய மாயிருத்தல் போல், வசநித்த லாதியும், மூச்சோடு மிடமு மறியாது, மநமாகிய வாத்மா நினைத் தாட்டிய படி யசைக்கின்ற பிராணாதிக்கு, ஆட்கின்ற வவ் வாத்மா அந்நியமா யிருத்தலினாலும். ''என் தேக'' மென்பவன், அதற்குப் புறம்பா யிருத்தல் போல், ''என் பிராணன் பெலமா



யிருக்கிறது, பெலயீநமா யிருக்கிறது, பசி தாகமா யிருக்கிறது. என் வாக் காதி, வசநித்த லாதி செய்கின்றது'' என்கிறதனாலும்; பிராண மய கோசம், பஞ்ச தன் மாத்திரை ரசோ குண சமட்டி வியட்டியி லுற்பத்தி யானதனாலும், அசத்துச் சட துக்காதி யாய் நம்மா லறியப்பட்டதாயும், நம்மை யறியாத தாயு மிருப்பதனாலும், பிராண மய கோசம் நா மல்ல வென்று நீக்க வேண்டு மென்பார், ''வெறிய தோர் துருத்தி மூச்சு விடுவது போலுன் மூக்கா லெறி பிராணனு நீ யல்லை யிராசத குண விகாரம்'' எனவுங் கூறினார். 67

(அ—கை) இதுவு மது.

கரணமா மநது புத்தி கருத்தவா மவையாந் மாவோ,
தரமுள விரண்டு கோசஞ் சத்துவ குணவி காரம்,
வரமறு துயிலா நந்த மயனையு நானென் றதே,
விரவிய தமவஞ் ஞாந விருத்தியின் விகார மாமே. 68

(ப—ம்) மநது தேகேந்திரியப் பிராணாதியை யறிந் திரக்ஷிக்கையினாலும், ஆட்டுகிறவன் உண்டானால் சூத்திரக் கயி றுள்ள பாவை யாடுகின்றதும், அவ னில்லாவிட்டால் ஆடாததும் போல், மந துண்டானாற் சிர்க்கு சந்தந வருதாதி பிரயோசநப் படுவ தாயும், உழ வாதி யாகாதி தொழில் நடப்ப தாயும், இம் மந தில்லாவிடில், சிர்க்கு சந்தந வநிதாதி பிரயோசநப்படாமலும்; உழ வாதியாகாதி தொழில் நடவாலும், இருப்பதனாலும், மநது தியாநித்த பிர காரம் ஆகின்றபடியினாலும், இதற் கந்நிய மாய்

ஆத்மா வில்லாதபடியினாலும், "நான் காமி குரோதி லோபி" யென்கின்றதனாலும், மனோ மய கோசமே யாத்மா வென்கிற புத்தியை, பித்த மாதியாற், புத்தி, நிச்சய மில்லாத காலத்தில், மன திருக்கவும், ஒன்றையு மறிந்து ரக்ஷிக்காமையினாலும், பாவைக் கூத்துக்குத் தலைவனா யிருக்கிறவ, னேவிடாத போது, ஆட்டுகின்ற ஆ ளிருந்தாலும், பாவை யாடாதது போலச், சிர்க்கு சந்தன வனிதாதி பிரயோசனப் படாமலும், உழ வாதி, யாகாதி, தொழில் நட வாமலும், இருப்பதனாலும், நிலையா யொன்றைத் தியானித்தற் கிட மின்மையினாலும், எவ் விடத்துக்குக் குதிரையை நடத்த வேண்டு மெனத் தெரியாத சஞ்சலத்துடன் சுதந்தர, மின்றி யிருக்கும் சாரதிக்கு யசமான, னங்கியமா யிருத்தல் போல, நினைவு முதலிய வற்றை யறியாது புத்தி யாகிய வாத்துமா நிச்ச 'யித்து ஏவினபடிக்கு, நினைத்தல் முதலிய செய்கின்ற மனதிற்கு, ஏவுகின்ற வாத்மா, வங்கியமா யிருத்தலினா லும், "என் பிராண" னென்கின்றவ, னதற்குப் புறம்பா யிருத்தல் போல, "என் மனஞ் சங்கற்பிக் கிறது, இச்சித்த லாதி செய்கிற" தென்கின்ற தனாலும், மனோ மய கோசம், பஞ்ச தன் மாத்திரை யின் சத்துவ குணத்தி லுற்பத்தியானதனாலும், அசத் துச் சட துக்காதி யாய் நம்மா லறியப்பட்ட தாயும், நம்மை யறியாத தாயு மிருப்பதனாலும், மனோ மய கோசம், நா மல்ல வென்றும், புத்தியே, சலனப்படு மனதை யுறுதிப்படுத்துவிக்கையினாலும், இக பர காரியங்களிற் கர்த்தா வாய் நிருபிக்கையினாலும், ஏவும்வாத்தியா ருண்டானாற், சட்டாம் பிள்ளை பாடஞ் சொல்லுவித்துப், பிள்ளைகள் படித்தல், அவ ரில்லா விடில், அஃது வின்மை போற், புத்தி யுண்டானாற் சிர்க்கு சந்தன வனிதாதி, பிரயோசனப்படுவதாயும், உழ வாதி, யாகாதி, யுபாசனை யாதி நடப்ப தாயும், இப் புத்தி யில்லாவிடிற், சிர்க்கு சந்தன வனிதாதி பிர யோசனப்படாமலும், உழ வாதி யாகாதி, யுபாசனை யாதி நடவாமலும், இருப்பதனாலும், இதற் கய லாத்மா வில்லாதபடியினாலும், "நான் புத்திவந்தன்" கர்த்தா, பண்டிதன்" என்கிறதனாலும், விஞ்ஞான மய கோசமே யாத்மா வென்கிற அறிவை, வியாதி முத லானதாற் பிரிய மில்லாத காலத்தில், அப் புத்தி நிச்சயஞ் செய்து கொண்டிருக்கவும், சலன முள்ள மனதை யுறுதிப்படுத்தாமலும், இக லோக பர லோக காரியங்களி லொன்றையும் நிருபிக்காமலு, மிருப்பதனாலும், சம்பளப் பணத்திற் பிரிய மில்லா விடில், வாத்தியா ரிருந்தாலும், பிள்ளைகள் படித்த லின்மை போல், சிர்க்கு சந்தன வனிதாதி பிரயோசனப் படாமலும், உழ வாதி, யாகாதி, யுபாசனை யாதி நடவாமலு மிருப்பதனாலும், சாரதியை யேவத் தற் சுதந்தர மில்லாத யசமானுக்குப் பிரயோசன மின்றி யிருத்தல் போல், நிச்சயஞ் செய்ய தற் சுதந்தர மின்றி, ஆநந்த மாதிய வான்மா, ஏவினபடி நிச்சயஞ் செய்கின்ற புத்திக்கு, அவ் வாத்மா வங்கியமா யிருத்தலினாலும், "என் மன" மென்பவ னதற்குப் புறம்பா யிருத்தல் போல், "என புத்தி நிச்சயிக்கிறது, என் புத்தி தீக்ஷணமா யிருக்கிறது, என் புத்தி கலங்குகின்றது, என் சுரோத் திராதி, சத்தாதியை யறிகின்றது," என்கிறதனாலும், விஞ்ஞான மய கோசம், பஞ்ச தன்மாத்திரையின்

சத்துவகுண சமட்டி வியட்டியி லுற்பங்க மானதலும், அசத்துச் சட துக்காதி யாய் நம்மா லறியப்பட்ட தாயும், நம்மை யறியாத தாயு மிருப்பதனாலும், விஞ்ஞாந மய கோசம் நா மல்ல வென்று நீக்க வேண்டு மென்பார், "கரணமா மநது புத்தி கருத் தாவா மவை யாங்மாவோ, தரமுள விரண்டு கோசம் சத்துவ குண விகார,, மெனவும், அறிகின்ற புத்தி முதலியவை, சுழுத்தியில், நசித்துச் சூநியமும், சுகமும் இருக்கின்றதாலும், சமபளத்திற் பிரிய முண்டானாற், பிரதாநியாற் சிமைக் காரிய நடக்குதல், அது இல்லா விடில் நடக்காமை போல, ஆநந்த முண்டானாற் சிர்க்குச் சந்தந வநிதாதி பிரயோசநப்படுவதாயும், உழ வாதி, யாகாதி, யுபாசனை யாதி தொழில் நடப்ப தாயும், பிரிய மாதி யுண்டாவ தாயும், இவ் வாநந்த மில்லாவிடில், சிர்க்குச் சந்தந வநிதாதி பிரயோசநப் படாமலும், உழ வாதி, யாகாதி, யுபாசனை யாதி நட வாமலும், பிரிய மாதி யுண்டாகாமலு மிருப்ப தனாலும், இவ் வாநந்தத்துக் கந்நிய மாய், ஆத்மா வில்லையாகையாலும், "நான் சுகி, யான் அஞ்ஞன், பிரிய" னென்கிறதனாலும், ஆநந்த மய கோசமே யாத்மா வென்னும் புத்தியைச், சுழுத்தி யுள்ள சூநியமு, மஞ்ஞாந சுகமும், துரிய முதலிய வவஸ்தையி வில்லாமையினாலும், சமபளங் கொடுக்கும் அரச னில்லாவிடில், பிரதாநியாற் காரியம் நடவாமை போலப், பரமாநந்த வாத்ம சொரூப மின்றிச், சிர்க்குச் சந்தந வநிதாதி பிரயோச நப்படாமலும், உழ வாதி, யாகாதி, யுபாசனை யாதி தொழில் நடவாமலும், பிரிய மாதி யுண்டாகாமலும்,



இருப்பதனாலும், இரதத்திற் செல்வோன், குறித் துள்ள பிரயோசநத்துக், கத்தைக் கொடுப்போன் அந்நியமா யிருத்தல் போலப், புத்தியாதி தொழிலுக் கேதுவான பிரியத்துக்கு, அத னதிட்டாந வாத்மா அந்நியமா யிருத்தலாலும், "என் அஞ்ஞாந, மென் சுக" மென, நன்றாய்க் காணப் படுகிற" தென்கிறதனா லும், ஆநந்த மய கோச, மவித்தையி லுற்பங்க மான தனாலும், அசத்துச் சட துக்காதியா யிருப்பதனாலும், நம்மாலே யறியப்பட்டதாயும், நம்மை யறியாததாயு மிருப்பதனாலும், ஆநந்த மய கோசம் நா மல்ல வென்று நீக்க வேண்டு மென்பார், "ஆநந்த மயனையு நா னென்னாதே விரவிய தம வஞ்ஞாந விருத்தியின் விகாரமாமே" யெனவுங் கூறினார்.

(தா—ம்) மூன்று தேகமும், மூன் றவத்தையும், மூன் றபிமாநியு மாகிய பஞ்ச கோசங்களையும், தா னன் றென நேதி களைந்த தாம் 68

**(அ—கை) இப் பஞ்ச கோசங்கள் யா னன் றெனில்? யான் யா ரெனில்?**

**சத்தொடு சித்தா நந்தஞ் சமந்திரஞ் சாக்ஷி யேகம்,**
**நித்தியம் வியாபி யாத்மா நீயது வாய றிந்து,**
**பொத்தொடு சடந்துக் காதி பொருந்துபே தங்க ளான,**
**குத்திரப் பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியி லாவாய்.** 69

(ப—ம்) ஆரோப மாய்ப் பாம்பு தோன்றுங் காலத்தும், அதற்கு முன்னும், பின்னும், அதிட்டாந மாகத் தானு மிருந்து, அதற்கு மிருக்குந் தன்மை கொடுக்கின்ற பழுதையைப் போலப், பஞ்ச

கோசந் தோன்றுங் காலத்தும், அதற்கு முன்னும்,
பின்னும், அதிட்டாந மாகத் தானு மிருந்து, அவை
களுக்கு, மிருக்குந் தன்மை கொடுக்கின்ற வுண்மை
யென்பார், ''சத்'' தெனவும், தானும் பிரகாசமா
யிருந்து கொண்டு, கட முதலானவைகளை விளக்கு
விக்கின்ற சூரியனைப் போலத், தானும் பிரகாசமா
யிருந்து கொண்டு, பஞ்ச கோசத்தையும் பிரகாசம்
பண்ணுவிக்கின்ற அறி வென்பார், ''சித்'' தெளவும்,
தா னின்ப வடிவா யிருந்து கொண்டு, தன்னைக்
கிட்டினவைகளுக்கு மின்பங் கொடுக்கின்ற தேவா
மிருதத்தைப் போலத், தானுஞ், சுக சொரூபமா
யிருந்து கொர்ண்டு; தன்னைக் கிட்டின பஞ்ச கோசங்
கட்கும் சுகத்தைக் கொடுக்கின்ற இன்ப மென்பார்,
''ஆநந்த'' மெனவும், சாதுர்ப் பூதங்களிலும்,
ஒன்றிற் ருழ்ச்சியும், ஒன்றி லுயர்ச்சியு, மற்று, ஒரு
படித்தா யிருக்கின்ற வாகாசம் போலச், சாக்கிர
சொப்பநத்தி லுயர்ச்சி யாயும், சுழுத்தியிற் ருழ்ச்சி
யாயும், விளங்காமல், மூன் றவஸ்தைகளிலும், ஒரு
படித் தாய் விளங்குகின்ற நடு வென்பார், ''சம''
மெனவும், கானற் சலம் பொய்யாய்த் தோற்றுங்
காலத்திலும், அதற்கு முன்னும், பின்னும், நிசமா
யிருக்கின்ற சூரியனைப் போலச், சரீரத் திரயம்.
பொய் யாய்த் தோற்றிகொண்டிருக்கும் காலத்தும்,
அதற்கு முன்னும், பின்னும், தோற்றிக்கொண்டி
ருக்கின்ற மெய் யென்பார், ''திர'' மெனவும்,
சண்டைக்காரரோடு கூட நின்று, மவர்கள் செயகிற
தொழிகளில் சேராமல், பக்ஷ பாத மின்றி அவற்றை
யறிந்திருக்கின்ற சாக்ஷிக்காரனைப் போலச், சாக்



கிராதி யவஸ்தைகளிற், விசுவாதி யபிமாநிகளோடு
கூடி நின்றும், அவர் செய்யும் வியாபாரங்களுக்கு
விலக்ஷண மாய் நின்று, அவற்றைத் தார தம்மிய
மின்றி அறிகின்ற கரி யென்பார், ''சாக்ஷி'' யெனவும்,
கட கலசங் குதிர் முதலான உபாதிகளினுல், அநேக
மாகாச மாகத் தோற்றினும், ஆகாச மொன்றே
யன்றி வே றில்லாதது போல, அவித்தை யந்தக்
கரண முதலிய வுபாதிகளினுல், அநேக வறி வாகத்
தோற்றினும், அறிவு பல வல்ல வொன்றே யென்
பார், ''ஏக'' மெனவும், கட கலசாதி தோன்றி
நின் றழியவும், அங்ஙனந் தோன்றி யழியா திருக்கின்ற
மண் போலப், பஞ்ச கோசங்கள் தோன்றி நின் றழியவும்,
அங்ஙனங் தோன்றி யழியா திருக்கின்ற தான், நிலை
யுள்ள தென்பார், ''நித்திய'' மெனவும், சாதுர்ப் பூதங்
களுள், தான் வியாப்பிய மின்றித், தன்னு ளவற்றை
வியாப்பிய மாக வுடைய வாகாசம் போலத், தூலாதி
தேகம், சாக்கிராதி யவஸ்தை, விசுவாதியபிமாநிக்குள்
தான் வியாப்பிய மின்றித், தன்னுள் அவைகள் வியாப்பி
ய மாக வுடைய விபு வென்பார், ''வியாபி'' யெனவும்,
அசத்தாதி ஒன்பது லக்ஷணமு மில்லா தாய்ச், சத்தாதி
ஒன்பது லக்ஷண முடைய தாய், அகம் பதத்துக்கு
அர்த்தமா யிருக்கின்ற தென்பார், ''சத்தொடு சித்தா
நந்தம் சமந் திரஞ் சாக்ஷி யேகம் நித்தியம் வியாபி,
யாத்மா'' வெனவும், பழுதையிற் ருேன்றும் பாம்பானது.
தோன்றுங் காலத்தும், அதற்கு முன்னும், பின்னும்,
தானு மில்லாது, மற் ருென்றிற்கு மிருக்குந் தன்மை
கொடாதது போல, தூல சரீர மாதி 9-ம்ஆன பஞ்ச

கோசங்கள், சங்கற்ப முதிக்கும் போதும் அதற்கு முன்னும், பின்னும், தானும் இல்லாது, மற்றொன்றிற் கும் இருக்கும் தன்மை கொடாத அசத் தென்பார், "பொத்" தெனவும், தானும் விளங்காமல், மற்றொன்றை யும் விளக்குவிக்காமலு மிருக்கின்ற கடாதிகளைப் போலப், பஞ்ச கோசங்க ளாத்மாவை யறியாமல், அவ் வாத்மாவினால் அந்ந மயம், பிராண மயம், மநோ மயம், விஞ்ஞாந மயம், ஆநந்த மயம் என்று மறியப்படு கின்ற மூட மென்பார், "சட" மெனவும் விஷ மானது, தானுந் துக்க மயமா யிருந்து கொண்டு, தன்னை யடுத் திருக்கின்றவைகளுக்கும், துன பஞ் செய்வது போலக், இப் பஞ்ச கோசங்கள், தானும், ஆதி வியாதி யாகிற துக்க ரூபமா யிருந்து கொண்டு, தன்னை யடுத்திருக்கின்ற வைகளுக்குந் துன்பஞ் செய்யு மிட ரென்பார், "துக்க" மெனவும், சா துர்ப் பூதங்களும் ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்ச்சியா யிருப்பது போலப்' பஞ்ச கோசங்க ளொன்றுக் கொன்று உயர்வு தாழ்வை யுடைய விஷமமும், கானற் சல மானது முன் பின் னில்லாம, லிடையிலும் பொய்யாத் தோன்றுவது போல, இப் பஞ்ச கோசங்கள் முன் பின் இன்றி, மத்தியில் பொய் யாய்த் தோற்றும் அத்திரமும், சண்டைக் காரன் ஒருவனுக் கொருவன் வாதம் செய்து, அவ் வாகாரமா யழுந்திப் போது போலப், பஞ்ச கோசங்கள் ஒன்றின் தர்மத்தை ஒன்றின்மே லேற்றிய முந்துகின்ற சாட்டி யமும், கட கலசாதி பலவா யிருத்தல் போல், இப் பஞ்ச கோசங்கள் பலவா யிருத்தலால், அநேகமும், மண்ணிற் கட கலசாதி தோற்றி யழிதல் போல், ஆத்மா



வினிடத்திற் றோற்றி யழியும் பஞ்ச கோசங்கள், அநித் தியமும், சாதுர்ப் பூதமும், ஆகாசத்தினால் வியாபிக்கப் பட்டிருப்பது போ, லிந்தப் பஞ்ச கோசங்க ளாத்மா வினால் வியாபிக்கப்பட்டிருப்பதால் வியாப்பியமும், ஆதலால், "ஆதி" யெனவும், அநாத்மா வாக விருந்து மாத்துமாப் போற் றோற்றுகின்ற பொய் யான அந்ந மயாதி யாதலால், "குத்திரப் பஞ்ச கோச" மெனவும், ஆந்மா வசிக்கும் தாந மாதலால், "குகை" யெனவுங் கூறினார்.

(தா—ம்) சத்தாதி இலக்ஷண முடைய வாத்மா தா னென் றறிந்த, அசத்தாதி இலக்ஷண முடைய பஞ்ச கோசத்துக்கு விலக்ஷண னவா யென்ப தாம். 69

**(அ—கை) ஆசாரிய ருபதேசித்தபடி யநுஷ் டித்து, அதற்கு மேல் சிடன் வினாதலைக் கூறல்.**

**பஞ்சகோ சமும்விட் டப்பாற் பார்க்கின்ற பொழுது பாழே,**
**விஞ்சிய ததுவல் லாமல் வேறொன்றுந் தெரியக் காணேன்,**
**அஞ்சந விருளை யோநா னகமென வநுப விப்பேன்,**
**வஞ்சமில் குருவே யென்ற மகன்மதி தெளியச் சொல்வார். 70**

(ப—ம்) நேதிகளைந்த தா னிருக்க, நேதிகளையப் பட்ட பஞ்ச கோசத்தைப் போல, நாம ரூபந் தோற்றா மையைக் குறித்துச் சூநியத்தையா நா னென்கின்ற பதத்துக்கு அர்த்த மாய் அநுபவிப்பே னென்றா னென்பார், "அஞ்சந விருளையோ நான் அக மென வநுபவிப்பே" னெனவும், ஆத்ம சொரூபத்தை மறைத்து, அநாத்ம சொரூபத்தைத் தோற்றுவிக்கின்ற

அஞ்ஞானத்தைக் கெடுத்திருக்கு மாசிரியரே யென்று னெனபார், ''வஞ்ச மில் குருவே'' யெனவுங் கூறினர்.

(வி—ப்) 'அஞ்சந விரு' ளென்பது, அவித்தை யெனக் கொள்க.

(தா—ம்) பஞ்ச கோசங்களையும் நீக்கி, யவ் விடத்துத் தோற்றிய வவித்தியா வந்தகாரத்தைப் பார்த்து, அஃது தா னுகுமோ வெனக் கலங்கி வினவினு னென்ப தாம. 70

**(அ—கை) ஆசியர், திட்டாந்த மூல மாய்ச் சிடன் தெளியும்படி கூறுதல்.**

மூன்புக நசமன் புத்தி மோகத்தா லெண்ணி யெண்ணி,
ஒன்பது பேரைக் கண்ட வொருவனுந் தனைக்கா ணுத,
பின்பவ னிடையிற் கண்ட பெரியபா மூவனே பாராய்,
அன்புள மகனே காண்ப தடங்கலுங் காண்பா னீயே. 71

(ப—ம்) மோக்ஷத்தி லிச்சையுங், குருவினிடத்தில் சிரத்தையும், மாறு துள்ளவ னெனபார், ''அன்புள மக'' னெனவும், தூல முதலிய ஒன்பதினையும், அவைகள் நீங்கிய விடத்துத் தோற்றிய சூநியத்தையும், அறிகின்ற வனே நீ யென்பார், ''காண்பான் நீ'' யெனவுங் கூறனர்.

(தா—ம்) அவித்தையை நீக்கிச், சுத்த சைதந்ய னுன தன்னைத் தரிசிப்பிக்கும் பொருட், டவ் வீரு ளாகிய அறியாமை நீ யன்று, அதனையும், அதன் காரியத்தையும், கண்ட சித்தே நீ யென் றறிவித்த தாம். 71

**(அ—கை) இப் போது சுவாமி தெரிவிக்க, இப்**



**பஞ்ச கோச சூநியத்தை யறிந்தேனே தவிர, வேறே யாதை யறிந்தே னெனில்?**

தூலஞ்சூக் குமவஞ் ஞானந் தோன்றுமுன் றவத்தை தாமும்,
காலமோர் மூன்றுஞ் சந்மக் கடலெழுங் கல்லோ லங்கள்,
போலவே வந்து வந்து போனதெத் தனையென் பேனுன்,
ஆலமர் கடவு ளாணை யதற்கெலாஞ் சாக்ஷி நீயே. 72

(ப—ம்) கடலினிடத்தி லலை யாதி தோற்றி யொடுங்குவதே யன்றிக், கட லவற்றிற் றேற்றி யொடுங்காமை போல, வியாபக மான ஆத்மா வினிடத்தில், வியாப்பிய மான தேகாதி தோற்றி யொடுங்குவதே யன்றி, ஆத்மா அவைகளிற் றேற்றி யொடுங்குவ தில்லை யென்பார், ''தூல சூக்கும வஞ்ஞானந் தோன்று மூன் றவத்தை தாமும், கால மோர் மூன்றுஞ் சந்மக் கட லெழுங் கல்லோலங்கள் போலவே வந்து வந்து போன வெத்தனை யென்பே'' னெனவும், ''தேகாதியை யறியுஞ் சாக்ஷி நீ'' யென் னுங் குரு வுபதேசத்தால், அதை நம்பி யாத்மாவை யறிந்துகொள்பவனுக்கும், ஆணை யிடத் தேவை யில்லை, அங்ஙனம், அறிந்துகொள்ளாதவனுக்கும், அரைத்த மாவை யரைத்தலாற் பய னின்மை போல். ஆணை யிடலாற் பய னின் றெனில், நித்திரை செய் பவன், கூப்பிடுவதால் விழிக்காவிடில், விழிக்கும் பொருட்டு வலு வாய்க் கூப்பிடல் போல், சிட னஞ்ஞான நித்திரையி லிருப்பதால் அவ னுத்ம சொரூ பத்தை நன் ருய் அறிந்துகொள்ளும் பொருட்டு. ஆசிரிய ருபதேசித்தது மன்றிச், சகலருக்குங் குரு வாகிய தெக்ஷிணு மூர்த்தி மீது சத்தியஞ் செயதா

ரெனபார், "ஆலமர் கடவு ளாணை யவைக் கெலாம் சாக்ஷி நீ" யெனவு கூறினர்.

*(தா—ம்) செந்மங்கள் தோறும் அநந்த தேகாதி தோன்றி நசித்ததை, நசியாது கண்டு கொண்டிருக்குஞ் சாக்ஷி நீ யென ஆசியர் தனக்கு ஆதி குரு வான தெக்ஷிணா மூர்த்தி மீது பிரதிஞ்ஞை வைத் தறிவித்த தாம்,* 72

(அ—கை) எல்லா மறிந்த தன்னை, யாதினு லறித லெனும் வினுவிற் குத்தரம்.

எல்லாங்கண் டறியு மென்னை யேதுகொண் டறிவே னென்று,
சொல்லாதே சுயமாஞ் சோதிச் சுடருக்குச் சுடர்வே றுண்டோ,
பல்லார்முன் றசமன் றன்னைப் பார்ப்பதுந் தனைக்கொண் டேதான்.
அல்லாமற் பதினென் ருனு மவனிடத் துண்டோ பாராய். 73

(ப—ம்) சுழுத்தி சொப்பந மநோ ராச்சியத்தில், சூரியாதிப் பிரகாசங்க ளின்றி யிருக்கவும், விளக்குகின்ற சைதந்நியமே, சாக்கிரத்திலும், விளக்குகின்றதனுல், சுயம்பிரகாச மென்பார், "சுயமாஞ் சோதி" யெனவும், ஒன்பது பேரை யறிந்த புருடனே, பத்தாவா னுனதே தவிர, பதி னென்ரு மவன், பத்தாவானுகதது போலத், தூலாதி ஒன்பதை யறிந்த யறிவே, கூடத்த ராகின்றதே தவிர, வே றென்று கூடத்த ராகின்ற தல்ல வென்பார், "அல்லாமற் பதினென் ருனு மவனிடத் துண்டோ பாரா" யெனவுங் கூறினர்.

*(தா—ம்) சட மான அனைத்தையுங் காணச் சித்துத் தேவை*



*யானுலும், சித்து ரூப மான தன்னை யறிய வோர் சித்துத் தேவை யில்லாதபடியினுலும், தன்னை விட வேறு சித் தில்லாதபடியினுலும், தன்னைத் தானே யறிய வேண்டு மென்ப தாம்* 73

(அ—கை) அறிவுக்குா. அறிவு கொடுக்கும் வேறே அறிவு ண்டோ வெனில், 'தீரும், (அ-கை) என்னை யெப்படி யறித லெலனில்,

அறிவுக்கு மறிவு செய்யு மறிவுவே றுண்டென் றெண்ணும்,
அறிவற்ற குதர்க்க மூடர்க் கநவஸ்தை பலமாய்த் தீரும்,
அறிபடும் பொருள்நீ யல்ல யறிபடாப் பொருள்நீ யல்ல,
வறிபொ ருளாகு முன்னை யநுபவித் தறிவாய் நீயே. 74

(பத சாரம்) உத்தம பக்குவர்களுக் காக உபநிடதங்களில், அத்துவித மாய்ப் பூரணமா யிருக்கின்ற வறிவே, சட மான சகலப் பிரபஞ்சங்களையும், விளக்குவித் தறிகின்ற தென்று சொல்லாநின்ற சித்தாந்தத்தைக் கைவிட்டுப், பிரபஞ்சத்தை யறியு மறிவுக்கு, அறிவு கொடுக்கிற வேறு அறிவு இருக்கு மெனக் கருதும் அதமர்களுக்கு, "மேலும் மேலும் வேறு அறிவு இருக்கு" மெனச் சுருதிக் கநுகூல மில்லாத தர்க்கத்துடன் சிதைம் அமைவு பிறவாமையே பிரயோசந மென்பார், "அறிவுக்கு மறிவு செய்யு மறிவு வே றுண் டென் றெண் ணு மறி வற்ற குதர்க்க மூடர்க் கநவஸ்தை பலமாய்த் தீரு" மெனவும், கோர மூட மாதிற்கும், அவாந்தர வாக்கியத்திற்கும், எட்டா தென்பார், "அறிபடும் பொருள் நீ யில்ல" வெனவும், சத்துவ மாதிற்கும், மகா வாக்கியத் திற்கும், எட்டு மென்பார், "அறிபடாப் பொருளு மல்ல" வெனவும் கூறினர்.

(வி—ம்) "அறிதற் கறிவு கொடுக்கும் அறிவு, அதற்கு அறிவு கொடுக்கும் அறிவு" என்று, வருவதை அநவஸ்தை யெனக் கொள்க,

(தா—ம்) கூடத்த ராகிய சித்தே, தா னென்றும், தனக்கு வேறாக வோ ரறிவு இன் றென்றுந், தன்னைச் சுவாநுபவத்தா லறிய வேண்டு மென்றும் அறிவித்த தாம். 74

(அ—கை) ஆத்மா வாகிற தான் ஞாந சொரூப மென்ப தெங்ஙன மெனில்.

மதுரமாங் கட்டி சுட்ட மாப்பணி யார மெல்லாம்,
மதுரமாக் கியவதற்கு மதுரந்தன் சுபாவ மன்றோ,
அதுவிது வெனுஞ்ச டங்க ளறிவாக வறிவைத் தந்தே,
அதுவிது விரண்டு மாகா வகம்பொரு ளறிவாய் நீயே. 75

(ப—ம்) தேகேந்திரியாதிகளுக்கு அறிவு (விளக்கம்) கொடுத்து, அவைகளின் விகாரத்தை யடையாது, நிருவிகாரியாய், நிருபாதியாய், நிருமல மாய்ச், சைதந் நியமே சுபாவ மான பிரத்திய காத் மாவே, அகம் பதத்துக் கர்த்த மென்பார், "அது இது இரண்டு மாகா வகம் பொரு" ளென்றார்.

(தா—ம்) அநாத்மா வான தேகேந்திரியாதிகளை விளக்குவிக் கின்றபடியால், ஆத்மா, ஞாந சொரூப மெனவும், அவ் வாத்மாவே அகம் பதார்த்த மெனவும், அறிவித்த தாம். 75

(அ—கை) ஆரோப மான வாச்சியார்த்தங் களுக்கு, ஐக்கிய மின் றெனுங் கூறல்.



இந்தநீ துவம்ப தத்தி லிலக்கியப் பொருளா மென்றும்,
பந்தமில் பிரம மேதற் பதந்தனி லிலக்கி யார்த்தம்,
அந்தமாஞ் சீவனீச னவர்களே வாச்சி யார்த்தம்,
சந்ததம் பேத மாவார் தமக்கயிக் கியம்கூ டாதே. 76

(ப—ம்) சரீரத் திரய விலக்ஷண ராய், அவத் தாத் திரய சாக்ஷி யாய்ப், பஞ்ச கோச வெதிரித்த ராய்ச், சச்சிதாநந்த மாய், 'நா' னென்னுஞ் சொல்லுக் கர்த்தமா யிருக்கின்ற பிரத்திய காத்மாவே, 'நீ' யென்னும் பதத்தின் இலக்ஷியார்த்த மென்பார், "இந்த நீ துவம் பதத்தி னிலக்கியப் பொருளா" மெனவும், விராட்டாதி விலக்ஷண ராய்ப், பெரிதுக் கொல்லாம் பெரி தாய்ச், சருவ சாக்ஷியா யிருக்கின்ற சொரூபமே 'அது' வென்னும் பதத்தின் லக்ஷியார்த்த மென்பார், "என்றும் பந்தமில் பிரமமே தற் பதந் தனி லிலக்கியார்த்த" மெனவும், தூல தேக முதலிய ஒன்பதும், விராட்டாதி யொன்பதும், தானு யிருந்து தள்ளப்படுவ தாகிய சீவேசுரர்களே, "நீ யது" வென்னும் பதங்களின் வாச்சியாரத்த மென்பார், "அந்தமாஞ் சீவ னீச னவர்களே வாச்சி யார்த்த" மென்வும், அபேத மாகிய கூடத்தப் பிரமத்துக்கு ஐக்கிய மாகு மென்பார், "சந்ததம் பேத மாவார் தமக் கயிக்கியங் கூடா" தெனவுங் கூறினர்.

(தாற்பரியம்) மகா வாக்கியத்தி னிலக்கியார்த்த மான கூடத்தப் பிரம மபேத மாகலின், அவர்கட் கயிக்கியம் கூடு மென்ப தாம். 76

(அ–கை) சீவேசுர பேதத்தைக் கூற வில்லையே யெனில்.

பேதமா னதுவுங் கேளாய் பெயராலு மிடங்க ளாலும்,
ஓதரு முபாதி யாலு முடலாலு முணர்வி னலும்,
பாதலம் விசும்பு போலப் பலதூர மகன்று நிற்பார்,
ஆதலா லிவர்க்கென் னுஞ மய்க்கியமென் பதுகூ டாதே. 77

(ப—ம்) ஒன்பது விதத்தினலும் நிச்சயித்துச் சொல்லக் கூடாத அவித்தை மாயை யென்பார், "ஓ தரு முபாதி" யென்ருர்.

(தா—ம்) வாச்சியார்த்த மான சீவேசுரர்களுக்கும் நாம மாதியாற் பேத மிருக்கின்றமையில் அபேதங் கூடா தென்ப தாம். 77

(அ—கை) கூடத்தப் பிரமத்துக் கிலக்கணை யினல், ஐக்கியஞ் செய்யும் பொருட்டு, இச் செய்யுளிற் சாஸ்திரங்களிற் கூருநின்ற மூ வித விலக்கணையைக் கூறுகின்ருர்.

வடநூல்வல் லவர்கள் சொல்லின் வாசகப் பொருன்சே ராமல்,
இடராகிற் பொருளாம் வண்ண மிலக்கண முறையாற் கொள்
திடமான வதுவு மூன்ருச் செப்புவார் விட்ட தென்றும், [வார்,
விடலிலா தென்றும் விட்டு விடாததென் றும்பே ராமே. 78

பத சாரம்: அருத்தம் பொருந்தாததைப் பொருந்தச் செய்தலால் "திட மான" வென்ருர்.

(தா—ம்) அருத்த யாகாத பதங்களை மூன் றிலக்கணையா லருத்தம் பண்ணிக்கொள்ளப்படு மெனவும், அவைகளின் நாமமுங் கூறிய தாம். 78



(அ—கை) அவற்றிற் குதாரணைங் கூறல்.

கங்கையிற் கோஷ மென்றுங் கருப்புச்சேப் போடு தென்றும்,
தங்கிய சோயந் தேவ தத்தனென் றுஞ்சொல் வார்கள்,
இங்குதா ரணங்க ளாக்கி யிந்தமூன் றுரைக ளாலே,
துங்கநூல் விரோத மான சொல்லெலாம் பொருளாந் தானே. 79

(ப—ம்) இவ் விலக்கண வாக்கியப்படி பொருள் கோடலே நூல்களனைத்தினு முள்ள அவிரோத மான பொருள் கோட லென்பார், "இந்த மூன் றுரை களாலே துங்க நூல் விரோத மான சொல் லெலாம் பொருளா" மென்ருர்.

(தா—ம்) மூ வித விலக்கணையின் திட்டாந்தங்களுக்கு அருத்தங் கொள்ளுகிறபடி, யெந்த நூல்களினும், அருத்த மாகாத பதங்களுக் குரை கொள்ளினும், அப் பதங்களுக் கருத்த மாகு மென்ப தாம் 79

(அ—கை) மூ வித விலக்கணையில். இவ் விடத்திற் றேவையான விட்டு விடாத லக்கணையின் திட்டாந்தத்துக் கருத்தங் கொள்ளுகின்றதைக் கூறல்.

பன்னிய சோய மென்னும் பதங்களின் வாச்சி யார்த்தம்,
அன்னிய தேசங் கால மவனிவ னென்ப தெல்லாம்,
சொன்னதிவ் விரோதம் விட்டுத் தொகையிலக் கியம்விடாமல்,
உன்னிடிற் றேவ தத்த னெருவனை வெளியாய்க் காட்டும். 80

(ப—ம்) அவிசாரத்தில் வேருய்த் தோற்றினும், விசாரத்தி லேக மாய்த் தோற்று மென்பார், "உன்னிடிற் றேவதத்த னெருவனை வெளியாக் காட்டு" மென்ருர்.

(தா—ம்) இத் திட்டாந்தத்திற் கூறிய புருட னொருவ னுகு மெனத் தெரிவித்த தாம். 80

(அ—கை) இத் திட்டாந்தப்படி மகா வாக்கியத் திற்கு அருத்தங் கொள்ளுகின்றதைக் கூறல்.

தத்துவ மெனும்ப தங்கள் சாக்ஷியாய்ப் பிரம மான,
வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு,
நித்தமு மதுநீ யாகும் நீயது வாகு மென்னும்,
அர்த்தமு மகண்ட மென்றே யசிபத வைக்கியங் காட்டும். 81

(ப—ம்) சிரவணுதி ஆரம்பத்துக்கு முன்னும், சிரவணுதி காலத்திலும், சிரவணுதி முடிந்த பின்னும், தான் ஏக மென மகா வாக்கியங் தெரிவிக்கின்ற தென்பார், "நித்தமு மது நீ யாகு நீ யதுவாகு மென்னும், அர்த்தமு மகண்ட மென்றே யசி பத வைக்கியங் காட்டு" மென்ருர்.

(தா—ம்) ஆசியர் தா னுபதேசித்தபடி ஆரண நிச்சய மிருப்பது தோன்ற, வதன் முடி வான மகா வாக்கியத்தி னிலக்கியார்த்த மான கூடஸ்தப் பிரமத்தி னொருமையை யுணர்த்திய தாம். 81

(அ—கை) அத்துவித சொரூபத்தை யநுபவத் தினுலும், அறியும்படி கூறல்.

கடநீரின் மேக நீரிற் கண்டவா னிரண்டும் பொய்யே,
குடவானும் பெரிய வானுங் கூடியொன் ருமெப் போதும்,
இடமான பிரமஞ் சாக்ஷி யிரண்டுமெப் போது மேகம்,
திடமாகச் சுவாநு பூதிச் சிவோகமென் றிருந்தி டாயே. 82

(ப—ம்) சுருதியினுலும், யுத்தியினுலும், ஆத்மாவை யறிந்து, அதனு லசம்பாவனை யாதி நீங்கச், "சுவாநுபூதிச் சிவோக மென் றிருந்திடா" யென்ருர்.



(தா—ம்) யுத்தியினுலும், வாச்சியார்த்தங்களை நீக்கி, லக்ஷியார்த்தத்தை யேக மெனக் காட்டி, யவ் வைக்கிய சொருபத்தைத் தானுகக் காமாதி வாசனை யின்றி, நன் ருக அநுபவத்தினுல் அறிந்திருக்கும் படி யாசிரியர் அநுக்கிரகித்த தாம். 82

(அ—கை) குரு வுபதேசித்தபடி சிட னத்துவித சொருபத்தை சமாதியிற் றெரிசித்ததைக் கூறல்.

தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமல்,
பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளி யுள்ளிற்.
கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடத்தர் பிரம மென்னும்,
நெஞ்சமு நழுவி யொன்ருய் நின்றபூ ரணத்தைக் கண்டான். 83

(ப—ம்) உயிரானது உடலுக்கு வரும் வியாதி முதலிய துன்ப நீக்கி, யின்பஞ் செய்விக்கின்றது போலச், சிட னுடைய அஞ்ஞாந துன்ப நீக்கி, மோக்ஷ யின்பங் கொடுக்கு மாசிரிய ரென்பார், "தஞ்ச மாங் குரு" வெனவும், கூடஸ்தர் தா, னென்கிற சாக்ஷி விருத்தியை நீக்கி யென்பார், "உள்ளிற் கொஞ்சமா மிருப்பும் விட்டு" எனவும், கூடஸ்த ராகிய தானே பிரம மென்கிற அகண்டாகார விருத்தியு நீங்கி யென்பார், "கூடஸ்தர் பிரம மென்னும் நெஞ்சமு நழுவி" யெனவும், அகண்டைக ரச விருத்தியினுற் பாலிற் கலந்த சலம் போல, மூன்று பரிச்சேத ரகித மாய், அத்துவிதமா யிருக்கின்ற சொருபாகார மானு னென்பார், "ஒன்ருய் நின்ற பூரணத்தைக் கண்டா"

னெனவுங் கூறினார்.

(தா—ம்) சுருதி குரு வாக்கியப்படி பஞ்ச கோசத்தையும், சூனியத்தையும். நீக்கி. கூடஸ்தாநுபவமும் விட்டுப். பிரமத்தைத் தரிசித்ததையுங் கடந்த, பூரண சொரூபத்தை தரிசித்தா னென்ப தாம். 83

**(அ—கை) இதுவு மது.**

அநுபவா நந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்.
தநுகர ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்,
மநதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண,
நநவினிற் சுழுத்தீ யாகி நன்மகன் சுபாவ மானான். 84

(ப—ம்) திரிபுடியுடன் கூடிய பதி னொரு வகை யாநந்தமும், ஓர் நிலை யாகத் தக்க பிரமாநந்த சாகரத்திற் படிந்து, அவ் வாகார மானா னென்பார், ''அநுபவாநந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகி'' யெனவும், தேகாதி முப்பத் தைந்து தத்துவமும் நீங்கி யென்பார், ''தநு கரணங்க ளாதி சகலமு மிறந்'' தெனவும். மநது, ஊசியை நினைக்கில், ஊசி யாகார மும், மகா மேருவை நினைக்கில், அவ் வாகாரமு மாதல் போல, முன் தேகத்தை நினைத் தவ் வாகார மான மநது, பூரண சொரூபத்தை நினைத்து, அவ் வாகாரம் ஆயிற் றென்பார், ''மநது பூரணமா'' யெனவும், சலம் ஆலாங் கட்டி யாய்த் தடித்தது போலப், பரிபூரண மான சொரூபமே மாநுடச் சட்டை சாத்தி யெழுந் தருளிய தென்பார், ''தேக மான சற் குரு ''வெனவும், இந்திரியங்கள், தம் தம் கோளகையி லிருக்க, வியாபார மற்ற தென்பார், ''நனவினிற் சுழுத்தி யாகி'' யெனவும், அநுக்கிர



கித்தபடி அநுட்டித்து, ஆநந்த வநுபவத்துடன் அகண்ட சொரூப மானா னென்பார், ''நன் மகன் சுபாவ மானா'' னெனவுங் கூறினார்.

(தா—ம்) பிரமாநந்தத் தழுந்திப் பிரபஞ்சத்தை நீங்கிப் பெரி தான சுபாவ நிலையைப் பெற் றிருந்தா னென்ப தாம். 84

**(அ—கை) சுபாவ நிலை பெற் றிருந்த சீடன் பின் யாது செயதா னெனில்.**

அளிமகன் நெடும்போ திவ்வா றுனபின் மநது மெள்ள,
வெளியில்வந் திடவு ணர்ந்தான் விமலதே சிகனைக் கண்டான்,
றுளிவிழி சோரியப் பாதந் தொழுதுவிழ்ந் தெழுந்து சூழ்ந்தான்
தளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான். 85

(ப—ம்) வெய்யிலால் நொந்து, மேய்ச்சல் சல மின்றி யிருந்த பசு வானது, குளிர்நத சோலையும், தெளிந்த சலமும், மிகுந்த புல்லு முள்ள விடத்திற் சென்று, புசித்துத் திருப்தி யடைந்து கொண்டி ருக்கின்றது போல், மிகுந்த தாபத் திரயத்தினாற் றுன் புற்று. அவை நீங்கும்படி ஞாந சமாதி கூடிப், பிரமாநந்தம் பெற் றிருந்தவ னென்பார், ''அளி மக'' னெனவும், அவ் வருத்த முண்டா மெனப் பசு வானது அவ் விடத்தை விட்டு நீங்காம லிருந்தது போல், அத் தாபத் திரயங்களால் வருத்த முண்டா மென இச் சமாதியில் மிகுந்த கால மிருந்தா னென்பார், ''நெடும் போ திவ் வாறுன பின்'' னெனவும், அப் பசுவை யன் னிழலை விட்டு வெய்யிலி லிழுத்தாற் ஜல்தியாய் வாரா மற் பையப் பைய வருதல் போல, மற்றை யோகாதி

மார்க்கங்களால், தாமத ராசத குணத்துடன் அடங்கிய மநது போ லின்றிச், சுத்த சத்துவ மாய் ஞாநாநுபவத்தால் அடங்கிய மநது, ஆநந்தா நுபவத் தில் நின்று மிருது வாக வெளிப்பட்ட தென்பார், ''மநது மெள்ள வெளியில் வந்திட'' வெனவும், அவித்தை மல, மாயா மல மற்றுத், தான் பிரகாச மான ஆத்ம சொரூப மாகவு மிருந்து கொண்டு, முமுக்ஷுக்களி னுடைய அவித்தியா மல, மாயா மலங்களை நீக்கிப், பிரகாச மான வாத்ம சொரூப மாகச் செய்கின்றவ ரென்பார், ''விமல தேசிக'' ரெனவும், மந மானது வாசை முதலிய வனைத்தும் நீங்கிப் பிரமாநந்த மய மாய் நிறைந் திருத்தலால், வாக்குக் குளிர்ந்த வசநத்துடனும், முக மிகவு மலர்ச்சியுடனும், விளங்குகின்ற ஆசிரிய னென்பார், ''குளிர் முகச் சுவாமி'' யெனவுங் கூறினர்.

(தா—ம்) சகசாநுபவம் வரும் பொருட்டுச், சமாதி யநுபவ சமஸ்காரத்தோடு வெளிப்பட்டுச், சற் குருவைத் தரிசித்து வணங்கினு னென்ப தாம். 85

**(அ—கை) சீடன் றனக்கு அநுபவங் வரும்படி அநுக்கிரகஞ் செய்த ஞாநாசாரியரைத் தோத்திரஞ் செய்தல்.**

**அய்யனே யெனதுள் ளேநின் றநந்தசெந் மங்க ளாண்ட,**
**மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி,**
**உய்யவே முத்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன்.**
**செய்யுமா றென்றுங் காணேன் றிருவடி போற்றி போற்றி, 86**



(பத சாரம்) நெடுங் காலத் தநந்த செந்மத்தி லெனது உள்ளத்தின்கண் அறிவு சொரூப மாய் நின்று, சரியை கிரியை யோகங்களிற் செலுத்தித், தடுத் தாட்கொண்ட சநநங்கள் நசித்தும், நசியா திருக்கின்ற சத்திய சொரூபனே யென்று னென்பார், ''என துள்ளே நின் றநந்த செந்மங்க ளாண்ட மெய்யனே'' எனவும், வடிவ மின்றிய வாகாசம், வடிவ மாகத் தடித்தது போல், நிராகார சொரூபமே யோ ருரு வாய்த் தடித்து ஞாநத்தை அநுக்கிரகம் பண்ணும்படி வெளிப்பட வந்த ஆசிரியனே யென்று னென்பார், ''உபதேசிக்க வெளி வந்த குருவே'' யெனவும், தநு கரண புவந போகம் நான்கும் விகாரத்திலு முடையதா யிருந்தாலும், விசாரிக்கி லவைகள் பொய்யா யிருப்பதாலும், நீர் செய்தது இணை யற்ற உதவியா யிருத்தலாலும், கைமா றில்லை யென்று னென்பார், ''உதவிக்கோ ருதவி காணே'' னெனவும், சுரர் முதற் ருவர மீரு யுள்ள எழு வகைப் பிறவித் துன்பங்களையுந் துடைத்து, மோக்ஷ வின்பத்தைக் கொடுக்கப்பட்ட பாத மென்று னென்பார், ''திரு வடி'' யெனவுங் கூறினர்.

(தா—ம்) தருமார்த்தகாமங்களைக் கொடாது, கருணையினுற் பிரிய மோக்ஷங் கொடுத்தற்கு கைமாறு காணே' னென்று துதித்த தாம். 86

**(அ—கை) கைமாறு காணே னென்ற சீடனை நோக்கி, ஆசியர் அருளிச் செய்ததைக் கூறுதல்.**

**சிட்டனிவ் வாறு சொல்லத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிச்,**
**சிட்டவா வெனவி ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்,**

துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடராமற் சொரூப ஞாந,
நிட்டனா யிருக்கி னீதே நீசெய்யு முதவி யாமே. 87

(ப—ம்) முன் தேகமே தானென் றறிதிருந்த சீடன், ருனநுக்கிரகித்ததை வீணாக்காமல், அந்தப் படி யநுட்டித்து ஆத்ம ஞாநத்தால் ஆநந்தம் பெற்றானென, ஆசிரியர் சந்தோட மடைந் தென்பார், ''தேசிகர் மகிழ்ந்'' தெனவும், அபரோக்ஷ ஞாநத் தையும், பேதிக்கத் தக்க வலி யுள்ள பிரதிபந்த மென் பார், ''துட்டமாந் தடைக'' ளெனவும், மேகம் போற் பொருளாதி குறியாது, சீடன் பிழைப்பதேயே கருதிய பேரருளுடைய வாசிரிய ராதலின், ''சொரூப ஞாந நிட்டனா யிருக்கி னீதே நீ செய்யு முதவியாமே'' யெனவும் கூறினார்.

(தா—ம்) சமாதி யநுபவம் பெற்ற சீடனை நோக்கித் தானெனை அநுபவமான சுக போதத்தைத் தவிர, அவன் வேறு கருதாம லிருக்கும் பொருட்டு, வுன தநுபவந் தடை யின்றி விளங்கு மெனில். அஃதே கைமாறெனக் கூறின தாம். 87

(அ—கை) அத்துவித் சொரூபத்தை அறிந்த ஞாநம் பிரதிபந்தத்தினால் நீங்குமோ வென்ற சீடனுக் குத்தரங் கூறல்.

நீனானென் றிரண்டி லாமல் நிறைந்தபூ ரணமா யெங்கும்,
நானாகத் தெளிந்த ஞாநம் நழுவுமோ குருவே யென்றான்,
தானாகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் றோன்றும்,
ஆனாலுந் தடைக ளுண்டே வநுபவ முறைத்தி டாதே. 88

(ப—ம்) கூடத்த பிரம மென்னும் வேறுபா



டின்றி, யெவ் விடத்திலும் இருக்கின்ற பரிபூரண சொரூபமே நானாகத் தரிசித்த அபரோக்ஷ ஞாநத்துக்குந் தடைகளுளவோ வென்றானென்பார், ''நீ நானென் றிரண்டிலாமல் நிறைந்த பூரணமா யெங்கு நானாகத் தெளிந்த ஞாந நழுவுமோ குருவே யென்றா'' னெனவும், மகா வாக்கிய வுபதேசத் தினாலும், வேதாந்த சாஸ்திரத்தினாலும், ஆத்ம ஞாந முண்டானாலும், பிரதிபந்த முண் டென்பார், ''தானாகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் றோன்று மானாலும் தடைகளுண்டே லநுபவ முறைத்திடா'' தெனவுங் கூறினார்.

(தா—ம்) அநுபவம் வராது, பிரதிபந்த முண்டானால், அந்த ஞாநந் திரப்படா தென்ப தாம். 88

(அ—கை) பிரதிபந்தங்களின் நாமம் யா தெனில், 'விபரீதங்கள்,' இவை யாதினா லுண்டாகு மெனில், 'உடனுடன் வரும், இவைகளுண்டானால், ஆநி யா தெனில், 'கெடும்?' இப் பிரதிபந்தங்களைக் கெடுக்கு முபாயம் யா தெனில்,

தடைகளே தெனிலஞ் ஞாந சந்தேக விபரீ தங்கள்,
படர்செய்யு மிந்த மூன்றும் பலசந்மப் பழக்கத் தாலே.
உடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞாநங் கெடுமி வற்றைத்,
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே. 89

(ப—ம்) ஆத்மாவை மறைத்து, அநாத்மாவைத் தோற்றுவித்துத், தாபத் திரய துன்பங் கொடுப்ப தென்பார், ''படர் செய்யு'' மெனவும், துவித, விசிட்டாத்துவித ஞாந மின்றி, யத்துவித அபரோக்ஷ

ஞாந மென்பார், ''உயர் ஞாந'' மெனவும், அசம்பாவனை யாதி மீள மீளத் தோற்றினும், அதைரியப் படாம லிவற்றை எவ் விதத்திலும் கெடுத்துப் போடுவோ மென்னு முச்சாகத்தினால், அத்தியந்த நீங்கும் வரைச் சிரவணாதிகள் செய்து, நீக்குவா யென்பார், ''திட முடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளிலாலே'' யெனவும் கூறினார்.

*(தா—ம்) பிரதிபந்தங்களி னுமம், அசம்பாவனை யாதி யென்றும், அவைகள், அநாதி வாசனையா லுதிக்கு மென்றும், அதனால், ஞாநம் நீங்கு மென்றும், அவைகளைச் சிரவணாதியால் நீக்க வேண்டு மென்றும், கூறிய தாம்.* *89*

**(அ—கை) பிரதிபந்தத்தை நீக்காவிடி னும் அந்த ஞாநத்தாற் பவ நீங்காதோ வெனில், 'வேகாது', அவ் வசம்பாவனை யாதியை நீக்கிச் சிரவணாதிகளைக் கொஞ்சம் அப்பியாசித்தாற் போதாதோ வெனில்.**

அக்கிநி கட்டுப் பட்டா லற்பமுமுஞ் சுடமாட் டாது,
மக்கிந ஞாநத் தாலே வந்தபந் தமும்வே காது,
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே,
விக்கிந மடஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே. 90

*(ப—ம்) அசம்பாவனை யாதி பிரதிபந்த முடைய ஞாந மென்பார், ''மக்கிந ஞாந'' மெனவும், ஆரோப மாய்த் தோற்றிய சம்சாரம் நித்தியம் போ லிருக்கு மென்பார், ''வந்த பந்தமும் வேகா'' தெனவும், நெடுங் காலம் நிரந்தரம் நேசத்துடனே அப்பியாசித் தென்பார், ''சிக் கெனப் பழகி'' யெனவும் கூறினார்.*



*(தா—ம்) திட்டாந்த முகத்தாற் பிரதிபந்த முள்ள ஞாநம் சம்சாரத்தை நீக்கா தென்றும், அப் பிரதிபந்தத்தை நீக்கும் பொருட்டுச் சிரவணாதியைத் தான் நிரந்தரம் நெடுங் காலம் நேசத்துடனே அப்பியாசிக்க வேண்டு மென்றுங் கூறிய தாம்.* *90*

**(அ—கை) ஆத்ம ஞாநத்திற்குத் தடை யான அசம்பாவனை யாதிகளின் றன்மையைக் கூறல்.**

பிரம்பா வனையை மூடவப் பேதங்காட் டுவதஞ் ஞாநம்,
குரவன்வாக் கியநம் பாமற் குழம்பின மநஞ்சந் தேகம்,
திரமறுஞ் சகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே,
விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர். 91

*(ப—ம்) சத்திய ஞாந அநந்தாநந்த மென்கிற சிந்தனையை மாற்றிச், சீவேசுரச் செகத்துச் சிந்தனையைத் தோற்றுவிப்ப தசம்பாவனை யென்பார், ''பிரம பாவனையை மூடிப் பேதங் காட்டுவ தஞ்ஞாந'' மெனவும், ஆசிரியர் வாக்கியத்திற் சிரத்தை யில்லாமல், தான் கர்த்தாவோ? சாக்ஷியோ? சாக்ஷி யென்றாலும், கர்த்திருத்துவாதி யுண்டோ? வில்லையோ? கர்த்திருத்துவாதி யில்லாவிட்டாலும், அவருக்குப் பூரணத்துவ முண்டோ? வில்லையோ? பூரணத்துவ முண்டானாலும், அவரை யறியலாமோ? வறியக் கூடாதோ? வென இவை முதலாய் வருகின்ற சித்த விருத்திகளே, சம்சய பாவனை யென்பார், ''குரவன் வாக்கியம் நம்பால் குழம்பின தாம் சந்தேகம்'' எனவும், பழுதையினிடத்திற் றோற்று நின்ற பாம் பெப்படி யில்லையோ, அப்படிப் போலத், தன் னிடத்தில் விவர்த்த மாய்த் தோற்றின சீவேசுர செகத் தில்லாம லிருக்கவும், அதைச் சத்திய*

மெனவும், "நான் மநுடன் நான் பிராமணுதி வர்ணத்தை யுடையவன், நான் பிரமசரி யாதி யாச்சிரமத்தை யுடையவன், யான் உழ வாதி, யாகாதி செய்பவன், நான் அந்நாதி புசிப்பவன், நான் கடாதி யறிபவன்," என் றிவை முதலாய் வருகின்ற சித்த விருத்திகளே, விபரீத பாவனே யென்பார், "திர மறு சகம் மெய் யென்றும் தேக நா னென்று முள்ளே விரவிய மோகந் தானே விபரீத" மெனவுங் கூறினர்.

*(தா—ம்) ஆத்ம சிந்தனையை மறைப்ப தசம்பாவனே யெனவும், "ஆத்மாவோ! அநாத்மாவோ? தான்" என்று, தாம் கலங்குவது சம்சய பாவனே எனவும், "அநாத்மாவே தான் பிரபஞ்சஞ் சத்திய" மெனத் தோன்றுவது விபரீத பாவனே யெனவுங் கூறிய தாம். 91*

**(அ—கை) அத் தடைகளைக் கெடுக்குஞ் சிரவணுதிகளின் றன்மையைக் கூறல்.**

தத்துவ வநுபோ கந்தான் சாதித்தல் கேட்ட லென்பார்,
ஒத்துள பொருளு கத்தா லுசாவல்சிந் தித்த லென்பார்,
சித்தமே காந்த மான தெரிசநந் தெளித லென்பார்,
நித்தமிப் படிசெய் தக்கால் நிர்வாணம் பெறுவாய் நீயே. 92

(ப—ம்) குரு முக மாய் ஆறு லிங்கத்திறுலும், கூடஸ்தப் பிரம ஐக்கியத்தைப் பிரதிபாதிக்கின்ற வேதாந்த சாஸ்திரத்தைச் சிரத்தையுடன் அவதி பரியந்தம் அப்பியாசஞ் செய்தலே சிரவண மென்பார் "தத்துவ வநுபோகந் தான் சாதித்தல் கேட்ட" லெனவும், சிரவணத்தால் அத்துவித மென்றும், மநநுக்குச் சம்மத மான அருத்தத்தைச் சூக்ஷம



புத்தியினுல், சாக்கிராவத்தை முதலாயின சட மாயும், பல வாயும், ஒன்றினி லொன் றில்லாமற் றேற்றி யழிகின்ற தென்றும், அவற்றை யறிகின்ற வாத்மா, சித் தாய், ஏக மாய்ப், பூரண மாய், நித்திய மா யிருக்கின்ற தென்றும், இவை முத லாகிய நாநாப் பிரகார மான சயுத்தியினுல் விசாரிக்கின்றது, மநந மென்பார், "ஒத்துள பொருளு கத்தா லுசாவல் சிந்தித்த" லெனவும், "சுத்த சத்துவ விருத்தியினுல், அகண்ட பரிபூரண சச்சிதாநந்தப் பிரமமே நான் நானே அந்த அகண்ட பரிபூர்ண சச்சிதாநந்தப் பிரஹ்ம" மென்று விச்சிந்ந மின்றிச் சந்ததந் தியாநித்து, வாகியாந்தரத்தில் சத்தாதி விடயந் தோற்ருது, தியாநமும், தியாநிக்கின்றவனு மிறந்து, பாலிற் கலந்த சலம் போல், அவ் வஸ்துவில், அவ் விருத்தி யடங்கி, அவ் வாகாரமா யிருத்தல், நிதித்தியாசந மென்பார், "சித்தமேகாந்த மான தெரிசநந்தெளித" லெனவும், எப் பொழுது மிகுந்த முயற்சியால், இவ் வண்ணஞ் சிரவணுதி செய்து, அசம்பாவனே யாதியை நீக்கி னன்றி, மற்றைச் சரியை யாதி ஒரு ஏதுக்களாலும், பரமோக்ஷம் கிட்டா தென்பார், "நித்த மிப்படி செய்தக்கால் நிர்வாணம் பெறுவாய் நீ யே" யெனவுங் கூறினர்.

*(தா—ம்) ஞாநாசாரிய ரிடத்தில், ஆத்மாநாத்மாக்களின் றன்மையைக் கேட் டப்பியாசித்தல் 'சிரவண' மெனவும், அவ் அபியாசப்படி யுக்திகளுடன் விசாரித்து. "அநாத்மா தா னல்ல, ஆத்ம சொருபமே தா" னென்று நிச்சயித் தறிவது 'மநந' மெனவும், அங்ஙனம் நிச்சயித் தறிந்த பிரகாரம் ஆத்ம சொருபமே தா னென்று, அநவரதந் தியாநித்து, பாலிற் கலந்த சலம் போல, ஆத்ம சொருபத்திற் கலந்து ஏக ரச மா யிருப்பது 'நிதித்தியாசந' மெனவுங் கூறிய தாம். 92*

(அ—கை) இச் சிரவணாதி யப்பிபாச மெது வரைக்குஞ் செய்ய வேண்டிய மெனில், 'வேண்டாம்'

**இங்ஙனம் செய்ய வேண்டிய தெல்லாஞ் செய்து முடிந்து ஞாநிக ளடையும் முத்தியா தெனில்?**

**எத்தனை நாண்ஞா தாவு ஞாநமு மிருக்கு முன்பால்,**
**அத்தனை நாளும் வேண்டு மப்பாலோர் செயலு வேண்டா.**
**நித்தமும் வெளிபோற் பற்ரு ஞேயமாத் திரமாய்ச் சீவன்,**
**முத்தரா னவர்வி தேக முத்திபெற் றிருப்பா ரென்றும். 93**

(ப—ம்) விடயங்களை யறியாநின்ற ஞாநமும், அவ் விடயங்களை யபிமாநிக்கின்ற ஞாதிருவும், உள்ள பரிபந்தம், அசம்பாவனை யாதி நீங்காமையால், சிரவணாதிகளைப் பண்ணத் தக்க தென்பார், ''எத்தனை நாள் ஞாதாவு ஞாநமு மிருக்கு முன்பால் அத்தனை நாளும் வேண்டு'' மெனவும், சிரவணாதிகளைக் குறித்துக், கர்மத்தை விட்டிருக்கின்றதே, யாகும். அச் சிரவணாதிகளையும் விடின், கர்மப் பிரஷ்டத்துவமும், பிரமப் பிரஷ்டத்துவமும் வருமே யெனில், செய்ய வேண்டிய தெல்லாம் செய்து முடிந்து, தான் பிரம மானபடியினாற் சிரவணாதியும், தேவை யில்லை யென்பார், ''அப்பா லோர் செயலும் வேண்டா'' மெனவும், பிரபஞ்ச விவகாரஞ் செய்யுங் காலத்தும், நிரவயவ மாய்ச் சூக்ஷும மாய் வியாபக மா யிருக்கின்ற சின் மாத் திரமே தா னென் றறிந்திருப்ப னென்பார், ''நித்தமும் வெளி போற் பற்ரு ஞேய மாத்திர மாய்த் சீவன் முத்த ரானவர்'' எனவும், சிவ சாயுச்சியம் வரைச் சரீர முத்தியை யடைந்தோர் திரும்பிப்



பிறப்பது போல் இன்றி, யசரீர முத்தி பெற்ருேர் அவ் வண்ணமே எப்பவு மிருப்பா ரென்பார், ''விதேக முத்தி பெற் றிருப்பா ரென்றும்'' எனவுங் கூறினர்.

*(தா—ம்) மித்தை யான திருசியத்தைச் சத்திய மாக ஈ தென்று சுட்டி யறியும் உணர்வும், சுட்டி யறிந்த விஷயத்தை யபிமாநிக்கின்ற வரைக்கும், சிரவணாதி செய்ய வேண்டு மென்றும், சிரவணாதி செய்து முடிந்தவர், சீவன் முத்தரா யிருந்து, பின் விதேக முத்த ராவா ரென்றும் சங்கிரக மாகக் கூறிய தாம். 93*

**(அ—கை) அச் சீவன் முத்தர், எத்தனை விதமா யிருப்ப ரெனில்? 'கேளாய், அவர்களின் நாமம் யா தெனில்? நாம மீ தாம். அவர்களின் இயல்பு யா தெனில்?**

**ஞாநமார் சீவன் முத்தர் நால்வகை யாவர் கேளாய்,**
**வானிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்டன்,**
**ஆனவர் நாம மீதா மவர்களிற் பிரம வித்தின்,**
**ருநமும் மற்றை மூவர் தாரதந் மியமுஞ் சொல்வேன். 94**

(ப—ம்) லோகாயுதன் முத லான வாதிகள் சொல்லுஞ் சீவன் முத்தி யுடையவ ரல்ல வென்பார், ''ஞாந மார் சீவன் முத்த'' ரெனவும், பிரபஞ்சத்திற் பொருந்தியும், பூரிப்பு வாட்டமற் றிருக்கும் பிரம ஞாநிக ளென்பார், ''வானிகர் பிரம வித்'' தெனவுங் கூறினர்.

*(தா—ம்) சீவன் முத்தர் நால் வகை யெனவும், அவர்களின் நாமம் பிரமவித் தாதி யெனவுங் கூறி, அவர்களின் றன்மையைக் கூறத் தொடங்கின தாம். 94*

(அ—கை) சீவன் முத்தர்களிற் பிரமவித்தி னியல்பு கூறல்.

தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னம்,
வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன,
பாரகா ரியமா னுலும் பலர்க்குப கார மாக.
நேரதாச் செயவர் தீர்ந்த நிலைவிடார் சீவந் முத்தர். 95

(ப—ம்) ஆற்றி னெதிர்த்து நீந்துவது போலக், காமாதி யுண்டாகும், விவகாரத் திருந்தே; மைத்திரி யாதி சம்பாதிக்கும் வல்லபமும், செலத்தை யடைத்துத் திருப்பிப் பயிர் செய்து அநுபவித்தல் போலப், பகிர் முக மாய்ச் சிருட்டிக்கபட்ட இந்திரி யங்களை மறித். தக முகப்படுத்தி, ஆத்ம தரிசநஞ் செய் தாநந்த மநுபவிக்கும் வல்லபமு முடையவரா யிருந் தென்பார், "தீரரர்" எனவும், மண் சேர்ந்து கலங்கி யிருந்த சலந், தேற்ரும் வித்தால் தெளிந்தது போற், ருமத ராசத விருத்தியாற் ருேற்றிய சீவேசுர சகத்தைச், சத்துவ விருத்தியாற் சிவாகார மாய்க் கண்டோ ரென்பார், "தெளிந்தவ" ரெனவும், பிரம சொரூப மான தங்களுக்குக் கருமஞ் செய்யத் தேவை யில்லா திருக்கவும், செய்தாற் றுன்பம் வருகிறதா யிருக்கவும், கருமஞ் செய்யாத வஞ்ஞாநிகள், தங்களைப் பார்த்துச், செய்து, பரம்பரையாய் முத்தி யடையும், பொருட்டும், தங்கள் வருணுதிக் குரிய கருமத்தை, மந்திர லோபங், கிரியா லோபங், தந லோப மின்றிச் செய்வா ரென்பார், "தெளியு முன்னம் வாரமா யிருந்த தங்கள் வருண மாச்சிரமஞ் சொன்ன பார காரியமாலுைம் பலர்க் குபகார மாக நேர தாய் செய்வா" ரெனவும், பெண் வேடம் போட்டோ னுக்கு என்ன செய்யினும், தான் புருட னென்னு நிச்சயம் நீங்கா திருத்தல் போலப், பிரபஞ்ச விவகாரம் என்ன செய் யினும், தாங்கள் பிரம மென முடிந்த நிச்சயம் நீங்கா திருப்பா ரென்பார், "தீர்ந்த நிலை விடா" ரெனவுங் கூறினர்.



*(தா—ம்) பிரம வித்து லோகோபகார நிமித்தம் சற் கரும மறுட்டிப்பா ரெனவும், அக் கரும மநுட்டிக்குங் காலத்தும் அவிகார, அமல, அக்கிரிய மான அத்துவித சொரூபந் தா னென்னு மநுபவ ஞாநம் விட்டு நீங்கா திருப்ப ரெனவுங் கூறிய தாம்.* 95

(அ—கை) அந்தப் பிரம வித்துக் கன்மஞ் செய் யிற் காமாதி யுண்டாகாதோ வெனில்?

காமமா திக்ள்வந் தாலுங் கணத்திற்போ மநத்திற் பற்றர்,
தாமரை யிலைத்தண் ணீர்போல் சகத்தொடுங் கூடி வாழ்வார்,
பர்மா ரெனக்கர்ண் பிப்பார் பண்டிதத் திறமை காட்டார்,
ஊமரு மாவா நுள்ளத் துவகையாஞ் சீவந் மூத்தர். 96

(ப—ம்) பிராரத்த மநுபவித்துத் திரும்படி யான இச்சை யாதிகள் ஒரு பொழு தேக தேச மாக வுதிக்கினு, மவைக ளாத்ம சுகத்தை வியஞ்சக மாக நின்று விளக்கி உடனே நசித்தலினுலும், ஆகாயத்திற் ருேன்றின தூளி யும், மேகமும், காற்ருற் றுலைவது போற், சத்துவ மநதிற் காமாதி அசுத்த வாசனைகள், யேக தேச மாகத் தோன்றினும், முற் பழகி யிருக்கின்ற வைராக்கியாதிக ளான சுத்த வாச னையால், அக்ஷணமே நசித்தலாலும், காற் ருனது தனக்கு, நற் கந்தம், துர்க் கந்தம், சுபாவ மன்றி யிருந்தும், செல்லு மிடத்திற், கந்தங்களை, அங்ஙனம் பற்றி, அங்ஙனம் விட்டு விடுவது போல, ஞாநிக்குக் காமாதிகள் சுபாவ மில்

லாம லிருந்தும், தொழில் செய்யு மிடத்து, அவைக ளுதிக்கில், அந்த வந்த க்ஷணத்தில், நீங்கிப் போ மாதலாலும், " காம மாதிகள் வந்தாலும் கணத்திற் போ'' மெனவும், ஞாநிகளினது ம ந து சகலத்தையும் பூரணாநந்த மாய்த் தெளிந் திருத்தலாலும், ஆகாயத்தில், வெய்யிலி னுடைய சூடும், நிலவி னுடைய குளிர்ச்சியும், ஒட்டாதது போல, ஞாநிகளின் சத்துவ மநத்திற், காமாதியி னின்ப துன்பம் தாக்கா, தாதலாலும், "மநத்திற் ப ற் றா'' ரெனவும், தாமரை யிலையிற் சலம் பொருந்தியும், பொருந்தா திருப்பது போல, உலகத்தாருடன் ஞாநிகள், வாக்குக் காயத்தால் சேர்ந்தும், மநத்தாற் சேரா ரதஃதைச் சொரூபத்தினிடத்தில், வைத்திருப்பா ராதலால், "தா ம ரை யிலைத் தண்ணீர் போல் சகத்தொடுங் கூடி வாழ்வார்'' எனவும், யானையைப் பார்த்த குருடர், ஒவ் வோ ரவயவத்தை யானையெனக் கூ றி னு ம், கண் ணுடையோர்க் கவை யாவும் யானையே யெனத் தெரிவது போல, எவர் எங்ஙன? மெங்ஙனம்? வஸ்து நிச்சயம் கூறினும், அவை யனைத்தும், பரமாத்துவித மான த ன து சுவாநுபவத்திற் கொத்தலினாலும், அந் நிச்சயங்களை மறுத்துக் கூறி, னதனாற் றனது அநுசந்தாநத்துக்கு விரோத முண்டா மாதலினாலும், அவைகளை மறுக்கத் தெரி வின்றிய பேதையர்கள் போலக், காட்டுதலாற், "பாமர'' ரெனவும், முமுட்சுத்வ மில்லாத வாதிகளுக் கந்நிச்சய மனைத்தும். தன த நு ப வ வியாபகத்திற் கங்க மாகத், தான் அவைகளின் அங்கி யாக விளங்கு மநுபவத்தை யறிவித்தா, லினைப்பு மாத்திரம் மிச்ச மாமே தவிர, அவர்கள் புத்தியி லேறா தென் றறிவிக்கா திருத்தலாலும், ஆநந்தாநுபவத்துக்குத் தடை வரு மென்று, வாக்கு மௌந மா யிருத்தலினாலும், 'பண்டிதத் திறமை காட்டா' ரெனவும், மகா மௌந மா யிருத்தலினால், "ஊமரு மாவா'' ரெனவும், செய்ய வேண்டிய தெல்லாம் செய்து முடிந்து, அடைய வேண்டிய தெல்லாம் அடைந்தோ மென்னும்



நித்திய ச ந் தோ ஷ மந முடையவ ராதலால், "உள்ளத் துவகையாஞ் சீவந் முத்த'' ரெனவுங் கூறினார்.

*(தா—ம்) பிரம வித்துப் பிராரத்த வச மாய் தொழிற் செய்யு மிடத்து, அவனுக்கு ராகாதிகள் ஏக தேச முண்டாயினும், உடனே நசிக்கு மெனவும், இராகாதி யுண்டாதற் கேது வில்லாதபடி யிருப்பனெனவும், அவ னநுபவ விலாசத்தைக் கூறின தாம்.* 96

**அ—கை) பிரம வித்துக்க ளிங்ஙனம் இராது, நாநா விதமா யிருப்பானே னெனில்?**

பேதகன் மத்தால் வந்த பிராரத்த நானா வாகும்,
ஆதலால் விவகா ரங்க ளவரவர்க் கான தாகும்,
மாதவஞ் செயினும் செய்வார் வாணிபஞ் செயினும் செய்வார்,
பூதலம் புரப்பா ரையம் புகுந்துண்பார் சீவந் முத்தர். 97

(ப—ம்) தனக்கும், பிறருக்கும், தேக வருத்தமும், துன்பமும், கொடுக்கும், பஞ்சாக்கிநி மத்திய தவ முதலிய தாமத தவமும், ஆசையுடன் செய்யும் சிரவணாதி யாகிய ராசதத் தவமு மின்றி, தனக்கும், பிறருக்கும், தேக வருத்த மின்றி யின்பங் கொடுப்ப தாய், நிராசையுடன் செய்யத் தகுந்த சிரவணாதி யாகிய சத்துவ தவ மாகையால், 'மா தவ, மென்றார்.

*(தா—ம்) பிரம வித்துக்களுக்குப் பிரம ஞாந முண்டாகு முன், சஞ்சித கன்மத்தா லுண்டா யிருக்கின்ற பிராரத்த கன்மம் நாநா வாகையால், அவர்கள் நாநா விதமா யிருப்ப ரென்ப தாம்.* 97

**(அ—கை) அந்தப் பி ர ம வித்துக்கள், கருத்து எங்ஙன மிருக்கு மெனில்?**

சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்,
நின்றது புசிப்பார் வெய்யி னிலவாய்விண் விழது வீழ்ந்து,
போன்றின சவம்வாழ்ந் தாலும் புதுமையா யொன்றும் பாரார்,
நன்றுதீ தென்னார் சாட்சி நடுவான சீவந் முத்தர். 98

(ப—ம்) பரமார்த்தத்திற், சக சீவ பரம் மித்தையாகலாலும், விவகாரத்திற், சென்றதை நினைக்கிற் பயனின்மை யாயும், வருவதை நினைக்கிற் சரீர மநித்திய மாயுமிருப்பதாலும், நிகழ் காலத்திற், பிராரத்த வசத்தால் சாதிவர்ணாச்சிரமத்துக் குரித் தான போகத்தை நிராசையுடன் புசிப்பராதலாலும், வீணை, தீண்டுவதற்கு முன்னும், பின்னும், சத்தியா திருந்து, தீண்டு மிடத்திற் சத்திக்கின்றது போலப், பணிவிடைக்காரர், காரியக்காரர், வருவதற்கு முன்னும், பின்னும், மொன்று நினையாது சுட்டடற் றிருந்து, அவர்கள் வந்தவிடத்தில் அவர்களுக்குத் தகுந்த உத்தரங் கூறித், தொழிற் செய்து அருந்துவ ராதலினாலும், "சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன் நின்றது புசிப்பா" ரெனவும், சகல விசித்திரமும், தனது சத்தியினது லீலை யாகக் கருதி, அவைகளில் வியப்புறு ரென்பார், "வெய்யி னிலவாய் விண் விழுது வீழ்ந்து பொன்றின சவம் வாழ்ந்தாலும் புதுமையா யொன்றும் பாரா" ரெனவும், வெல்லத்தினாற் செய்த குமுட்டிக் காயையும், மாம் பழத்தையும், அவ் வெல்ல மயமா யிருத்தலால், நன்று தீ தென்னாதது போலச், சருவமு மாநந்தாகார மாய் விளங்குதலால், "நன்று தீ தென்னா" ரெனவும், சர்வத்துக்கும் விலக்ஷணமாயிருந் தறிபவராயும், அவைகளிற் சமத்துவ மாயும், முன் மூன்று பூமியு மின்றிப், பின் மூன்று பூமியு மின்றி, மத்தியாகிய சத்துவாபத்தியை யுடையவ ராயு மிருப்பவ ரென்பார், "சாட்சி நடுவான சீவந் முத்த" ரெனவுங் கூறினார்.

(விசேடம்) இன்னான்கு செய்யுளில், முந்தின பிரம வித்தின தியல்பைக் கூறின தெனக் கொள்க.

*(தா—ம்) பிரம வித்துக் கோர மூட மாக மடங்கி, யநுபவமாய் நிற்றலின், ஒன்றைக் கருதலும், வியப்புறுதலும், இல வென்பதாம.* 98

(அ—கை) மற்றை மூவ ரியல்பு யா தெனில்?



பின்னைழ வரிலி ரண்டு பேர்களுஞ் சமாதி யோகந்
தன்னையுற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தந் தானாய்,
உன்னுவோன் வரன்வேற் றோா லுணர்பவன் வரியா னாதம்,
அந்நியர் தம்மால் தன்னா லறியாதோன் வரிட்ட னாமே. 96

(வி—ம்) பிரம வித்து வரிட்டன், சமாதியில் அதீதமானவ னெனக் கொள்க.

*(தா—ம்) உண வாதியைக் குறித்துத் தானே யுண்டாகின்ற நினைப்புடையவன், பிரம (வித்து) வர, னெனவும், தானே யுண்டாகாமல் அந்நியரால் உண்டாகின்ற நினைப் புடையவன், பிரம (வித்து வரியா) னெனவும், தன்னாலும், அந்நியராலும், நினைப்பில்லாதவன், பிரம (வித்து) வரிட்ட னெனவுங் கூறின தாம்.* 99

**(அ—கை) தார தம்மிய மான இந்நால்வகைச் சீவந் முத்தர்க்கு, மோட்சமும், தார தம்மிய மா யிருக்குமோ வெனில்?**

அரிதாது மிவர்க ளிவ்வா றநேகரா னாலு முத்தி,
சரியாதும் பாடு பட்ட சமாதிக்குப் பலனே தென்றல்.
பெரிதான திட்ட துக்கம் பிரமவித் தநுப விப்பன்,
வரியானும் வரனு மற்றை வரிட்டனுஞ் சுகமாய் வாழ்வார். 100

(ப—ம்) சகத்தி லுள்ள வுயிர்களுக்கு மற்றைய விருப்பம் நீங்கி, மோக்ஷ விருப்பம் வருகிறது அரிது. வரினும், கன்ம சாத்திர முதலியவற்றை விட்டு வேதாந்த சாத்திரத்தில் விருப்பம் வருகிறது அரிது. வரினும், அச் சாத்திர சிரவணஞ் செய்த லரிது. அங்ஙனம் செய்யினும், அதிற் கூறிய பிரகாரம் அநுசந்தாநம் பண்ணுத லரிது. அங்ஙனம் பண்ணினும், சுகாநுபவம் வருதல் மகா துல்லபமாதலால், இவ் வநுபவம் பெற்றவர்கள் திரி லோகத்திலும் துல்லப மென்பார், "அரி தாகு மிவர்க" ளெனவும், அவ் வறிஞர்கள், நாநா பேத மான நடையை யுடைத்தா யிருந்

தாலும், பல நாமமும், பல நிறமும், கோணலும், நேருமாயிருக்கிற கங்கை முதலிய பல நதிகளும், சமுத்திரத்தி லேகமாதல் போல், மோட்சத்தி லொரு தன்மைத்த ராகுவரென்பார். "இவ் வா றநேக ராளுலும் முத்தி சரியாகு" மெனவும், நித்திரையோடும் வழிச் செல்லுவோனுக்கு, முள் கல் வேர் முதலியவைகளால், நினை வுண்டாகி, அச் சுகத்துக்கு விக்கிந முண்டாவது போல், பிரம ஞாநிக்கும் பிராரத்தத்திலுலே வருகிற தொழில்களினுல், விருத்தி யுண்டாகின்றதால், தன தாநந்தத்துக்கு விக்கிந முண்டாகின்றமையால், "பெரி தான திட்ட துக்கம் பிரம வித் தநுபவிப்ப" னெனவும், துக்கத்தை கொடுப்ப தாகிய பிரவிர்த்தி யில்லாமையால், "வரியானும் வரனு மற்றை வரிட்டனுஞ் சுக மாய் வாழ்வா" ரெனவுங் கூறினுர்.

*(தா—ம்) இச் சீவந் முத்தர்கள் பிராரத்த வசத்தால் நாநா விதமா யிருக்கினும், மோட்சம் வேறுபாடன்னியில், ஒன் ருகவே யிருக்கு மெனவும், விவகார முள்ள பிரம வித்துக்குத் துன்ப மெனவும், விவகார மற்று மிகுந்த வாசநாட்சயம், மனோ லய முள்ள, பிரம (வித்து) வர ஞதி மூவருந், துன்ப மின்றிப் பிரமாநந்தத்தை யடைந்து சுகித்திருப்ப ரெனவுங் கூறின தாம்.* 100

**(அ—கை) பிரம வித்துக்கள் அஞ்ஞாநிகளைப் போல், விவகாரஞ் செய்து கொண்டிருந்தால், சம்சார மெவ்வித நீங்கு மென்ற வினுதலுக் குத்தரங் கூறல்.**

பிரமஞா நிகளுங் கன்மப் பேதையர் போலே வாழ்ந்தால்,
திரமுறு மஞ்ஞா நம்போய்ச் சேநியாத வழியே தென்றல்,
பாவுமா காச மொன்றிற் பற்றது மற்றை நாலும்,
விரவின தோடுங் கூடும் விதமிரு வோரு மாமே.

(ப—ம்) ஞாநிகளைத் தவிர, முமுட்சுக்களுக்கு ஞானோதய மாகும் பரியந்தம், கேடின்றி யஞ்ஞாநந் தோற்றிக் கொண்டிருக்கு மென்பார், "திர முறு மஞ்ஞாந" மென்ருர்.



*(தா—ம்) ஞாநி யஞ்ஞாநிகளின் கிரியை யொன் ருயினுங் கருத்து வேரு யிருக்கு மாதலாற், பிரம வித்து அஞ்ஞாந நீங்கி மோட்ச மடைவ னென்ப தாம்.* 101

**(அ—கை) கன்மத் திரயம் நீங்குவ தெவ் விதமெனில்?**

பஞ்சினை யூழித் தீப்போற் பலசந்ம விவித வித்தாஞ்,
சஞ்சித மெல்லா ஞாநத் தழல்சுட்டு வெண்ணீ றக்குங்,
கிஞ்சிதா காமி யந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்,
விஞ்சின பிராரத் தத்தின் வினையநு பவித்துத் தீரும். 102

(ப—ம்) அக்கிநி யானது பிரகாசமும், பரிசுத்தமும், சகல பதார்த்தத்தையும் தகிக்குந் தன்மையு, முடையது போலப், பிரகாசமும், பரிசுத்தமும், சஞ்சித கன்ம பலத்தை நாசஞ் செய்யும் தன்மையு முடைய ஞாநத்திலுலே, சர்வமுந் தனது சித்து ரூப மாய் விளங்கிச், சஞ்சித கன்மங்க ளென வே ருெரு பொரு ளில்லாமல் போய்விடு மென்பார், "பஞ்சினை யூழித் தீப் போற் பல சந்ம விவித வித்தாஞ் சஞ்சித மெல்லா ஞாநத் தழல் சுட்டு வெண்ணீ ருக்கு" மெனவும், சீவத்துவம் வீய்ந்து, சிந்மாத்திர மாயிருத்தலால், அப் புண்ணிய பாவத் தொடக் கற்றிருப்பா ரென்பார், "கிஞ்சிதா காமியங்கள் கிட்டாமல் விட்டுப் போகு" மெனவும், புலி யென்று விட்ட பாணம், பசு வெனத் தெளிந்த பின், னெப்படி நிற்காதோ, அது போல, ஞாநம் வருவதற்கு முன்னம் நியமித்த பிராரத்த கன்மம், ஞாநம் வந்தவுடனே நிறுத்தக் கூடாம, லிச்சை யநிச்சை பரேச்சை யாகப் புசித்துத் தீரு மென்பார், "விஞ்சின பிராரத்தத்தின் வினை யநுபவித்துத் தீரு" மெனவுங் கூறினுர்.

*(தா—ம்) சஞ்கித கன்மம் பரஞாநத்தாலும், ஆகாமியம் சீவத்துவ நட்டத்தாலும், பிராரத்த கன்மம் அநுபவித்தும், நீங்கு மெனக் கூறிய தாம்.* 102

(அ—கை) சீவந் முத்தர் செய்யும் இரு வினை யெவ் வித நீங்கு மென்ற வினுவுக் குத்தரங் கூறல்.

போறுமையாற் பிராரத் தத்தைப் புசித்துநாட் செய்த கன்மம்,
மறுமையிற் றொடர்ந்தி டாமல் மாண்டுபோம் வழியே தென்றற்,
சிறியவ ரிகழ்ந்து ஞாநி செய்தபா வத்தைக் கொள்வார்,
அறிவுளோ ரறிந்து பூசித் தறமெலாங் கைக்கோள் வாரே. 103

(ப—ம்) குழந்தை யானது, பழங் கொடுக்க வழைத்த போது, விரைந்து முற் செல்வதுங், தக்கை போட வழைத்த போது, விரைந்து பிற் செல்லுவதும் போல, வின்றிப், பிராரத்த கன்மத்தாற், புலி யாதி துக்க விடயம் வரில், விரைந்து பிற் செல்லாமற், சிவிகை யாதி சுக விடயம் வரில், விரைந்து முற் செல்லாம, லவ் விரு விடயங்களையும், சமத்துவ புத்தியோடு அநுபவிக்குங் காலத்தி லென்பார், 'பொறுமையாற் பிராரத்தத்தை புசிக்குநா'' ளெனவும், சாரத்தை விட்டுச் சக்கையைக் கொள்ளுகின்ற பன்றுடை போல், மூடர்கள் மிகுதி யான குணத்தை விட்டு, ஏக தேசத்திற்பிராரத்த கன்மத்தா லுண்டாகிய அகுணத்தைக் குறித்து நிந்தித்துப்,பாவத்தைக் கைப் பற்றி, நரகப் பிராப்தியையடைவா ரென்பார், ''சிறியவ ரிகழ்ந்து ஞாநி செய்த பாவத்தைக் கொள்வா' ரெனவும், சலத்தை நீக்கிப் பாலைக் கொள்ளும் அந்நம் போலவும், மணலை நீக்கிச் சர்க்கரையைக் கொள்கின்ற எறும்பு போலவும், சொரூபத்தை யறிய விரும்பிய முமுட்சுக்கள், மிகுந்த வகுண மிருக்கினு மதை விட்டு, அற்ப மாகக் குண மிருக்கினும், அதை மிகுதி யாக வெண்ணிச், சிவ சொரூப மென் றறிந்து, அருச்சனை யாதிகள் செய்து, புகழ்ந்து புண்ணியத்தை கைக் கொண்டு மோட்சப் பிராப்தியை அடைவா ரென்பார், ''அறிவுளோ ரறிந்து பூசித் தற மெலாங் கைக் கொள்வா'' ரெனவுங் கூறினர்.

*(தா—ம்) சீவந் முத்தர் பிராரத்த மநுபவிக்குங் காலத்திற் செய்யும் புண்ணிய பாவங்கள், விவேகியும், அவிவேகியும், கொள்வா ரென்ப தாம்.* 103



(அ—கை) இங்ஙனம் நீர் கூறியவற்றிற்குப் பிரமாண முளவோ வெனில்?

சீவந்முத் தரைச்சே வித்தோர் சிவனய னெடுமா லான,
மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சந்ம,
பாவந மானு ரென்று பழமறை முழங்கு மிப்பான்,
மேவருஞ் சீவந் முத்தர் விதேகமுத் தியுநீ கேளாய். 104

(ப—ம்) சீவத்துவம் நீங்கிச் சிவ மாக விளங்குகின்ற ஞாநிகளுக்கு, ஆத்தம் அங்கம் தாநஞ் சற்பாவ மான பணிவிடைகளை திரி வித கரணமு மொத்துச் செய்கின்றவர்கள், அந்த ஞாநிகள் சர்வாத்ம சொரூப மாய் விளங்குதலால், பிரமா, விஷ்ணு, ருத்திரன்; சந்தோஷிக்கத் தவங்க ளெல்லாம் செய்து முடிந்தவர் போ லாகி யென்பார், ''சீவந் முத்தரைச் சேவித்தோர் சிவ னய னெடுமா லான மூவரும் மகிழ நோன்பு முழுவதுஞ் செய்'' தெனவும், சட சுபாவம் அனைத்தும் விட்டுச் சிந்மாத்திரமே தனது சொரூப மாக விளங்குவா ரென்பார், ''செந்ம பாவந மானு'' ரெனவும், மற்றை ஆகம மாதிகள் போல், ருத்திராதிகளினு லுண்டாகாது, பிரளயத்திலும், ஈசுவர னுடைய மூச்சுக் காற்ருக விருக்கின்ற வநாதி யென்று மீமாம்சர்களால் நிச்சயம் பண்ணி யிருக்கும் வேத மென்பார், 'பழ மறை' யெனவும், லோகாயுதன் முதலிய மதஸ்தர்கள் சொல்லும் விதேக முத்தி யல்ல, பற் றற்ற சீவந் முத்த ரடையும் அசரீர முத்தி யென்பார், ' மேவருஞ் சீவந் முத்தர் விதேக முத்தி'' யெனவும் கூறினர்.

(வி—ம்) ''சந்ம பாவந மானு'' ரென்பது, ஞாந தநுவா மெனவும், ''சேவிப்போர் செந்ம பாவந மாவா'' ரெனவே, யிகழ்வோர் சந்ம விருத்தி யடைவர் எனவுங் கொள்க.

*(தா—ம்) சீவந் முத்தரைப் புகழ்ந்தோர், இகழ்ந்தோர், அடையு, நன்கு, தீங்குகளை உலகத்தார் கூறுவது மன்றி, வேதமுங் கூறுகின்ற தென்ப தாம்.* 104

**(அ—கை) சீவந் முத்தருக்குச் சரீரத் திரயம் நீங்கும் விதத்தைக் கூறல்.**

அரியமெய்ஞ் ஞாநத் தீயா லவித்தையா முடனி றதும்,
பெரியதூ லழங்கா லத்தாற் பிணமாகி விழமந் நேரம்,
உரியசூக் குமச ரீர முலையிரும் புண்ட நீர்போல்.
துரியமாய் விபுவாய் நின்ற சொருபத்தி லிறந்து போமே. 105

(ப—ம்) தொய்தமும், விசிட்டாத்துவிதமு மின்றி, அத்துவித அப்பிரதிபந்த அபரோட்ச ஞாந மென்பார், "அரிய மெஞ் ஞாந" மெனவும், சட வடி வான தூல சரீர மும், அறியாமையே சொரூப மான காரண சரீரமும், தன்னை யறிதற் கேது வில்லை, சூட்சும சரீரமே தன்னை யறி தற்குச் சாதந மென்பார், "உரிய சூக்கும சரீரமும்" என வும், சூட்சும சரீரம் பிரளயத்திற், பிரம சொரூபத்துடன் அத்தியாசையிக்க மாக விருத்தலினால், மறுபடி செனமித்தல் போல், அகண்ட அறிவு சொரூபத்திற், காய்ச்சின இரும்பு கிரகிக்கிற சலம் போல், இறந்த பின் செனமிக்கா தென்பார், "உலை யிரும் புண்ட நீர் போல்' துரிய மாய் விபு வாய் நின்ற சொரூபத்தி லிறந்து போமே" யெனவுங் கூறினார்.

*(தா—ம்) சீவந் முத்தருக்குத் தத்துவ ஞாநம் வந்தவுடன், காரண சரீரம் நீங்கு மெனவும், பிராரத்த கன்மம் புசித்துத் தீர்ந்த வுடன், தூல சரீரம் நீங்கு மெனவும், அக் காலத்திற் சூக்ஷ்ம சரீரம் பரிபூரண ஸ்வரூபத்தில் லயித்து நீங்கும் எனவும், கூறின தாம்.* 105

**(அ—கை) விதேக முத்த னியல்பு கூறல்.**

கடமெனு முபாதி போனாற் ககநமோந் றனாற் போல,
உடலெனு முபாதி போன வத்தாந் சீவந் முத்தர்,



அடிமுடி நடுவு மின்றி யகம்புற மின்றி நின்ற,
படிதிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்ப ரென்றும். 106

(ப—ம்) அகண்ட மாயும், அமூர்த்த மாயு மிருக்கின் றதனால், ஆதிமத்தியாந்த ரகித மாயும், ஆகாசம் போற், சூக்ஷ்ம மாயும், வியாபக மாயும், இருக்கின்றதனால், உட் புற மற்ற தாயும், உற்பத்தி நாச மின்றி, இருந்தபடியே இருந்து விளங்குவ தாயு முள்ள சுத்த சைதந்யம் என்பார், "அடி முடி நடுவு மின்றி அகம் புற மின்றி நின்ற படி திகழ் விதேக முத்திப் பதம்" என்றார்.

*(தா—ம்) ஜீவந் முக்தர் சரீரத் திரய நீங்கின பின்னர், ஆதி மத்தியாந்த ரகித மான பிரஹ்ம மா யிருப்பர் என்ப தாம்.* 106

**(அ—கை) ஜீவந் முக்தி விதேக முக்தியி னியல் பைச் சொல்லி முடித்து, இச் செய்யுளில், முன் சீடன் பரிபூரண மான ஆத்ம ஸ்வரூபந் தா னென வறிந்த தாகக் கூறிய வநுபவம், நூதந மா யுதித்த தன் றெனக் கூறு கின்றார்.**

சொல்லிய மகனே யெங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக்,
கெல்லிய பின்பு தோன்றுங் கிணற்றிலா காசம் போல,
வொல்லையாம் பிரம நூலா லுற்றது போலே தோன்றும்,
எல்லையி னமெப் போது மேக்மேன் றிருந்து வாழ்வாய். 107

(ப—ம்) ஜீவேசுவர ஜகத்து விவர்த்தமா யுண்டான தற்கு, அதிஷ்டாந மாதலின், லநாதி யான பிரஹ்ம ஸ்வரூப, மிப்பொழுது குரு வுபதேசத்தாலும், வேதாந்த சாஸ்திரத் தாலும், அடையப் பட்டது போலத், தோற்றுவது பிராந்தி யென்பார், "ஒல்லையாம் பிரம நூலா லுற்றது போலே தோன்று" மெனவும், சுவாநுபூதியினாலும், ஆகமப் பிர மாணத்தினாலு மன்றி, மற்றைக் காக்ஷி முதலிய பிரமா ணங்களா லறியக்கூடாத சுத்த சைதந்ய ஸ்வரூப மென்

பார், "எல்லையி னா" மெனவும், காலத் திரயத்துஞ் சீவேசு வர ஜகத் தான துவித மில்லைப், பிரத்தியக் கபிந்ந பிரஹ்ம ஸ்வரூப மான நாமே யிருக்கின்றோ மென் றகண்டா நந்தத்தை அநுபவிப்பா யென்பார், "எல்லையி னா மெப் போது மேக மென் றிருந்து வாழ்வா" யெனவுங் கூறினார்.

*(தா—ம்) ஆகாய மெப் பொழுது, மெங்கு, மொன்றா யிருக்க வும், அவ் வாகாய மில்லை யென் றிருந்தவன், கிண று தோண்டி யக் கூபாகாயமும், அதற்குப் பின் வெளியி லுள்ள மகா காயமு மிருப்ப தெனக் கண்டு, இரண்டு மொன் றென வறிந்த போ, தவனுக் கப் பொழுது அவ் வாகாய மிருப்பது போற் றோற்றுவது போல், அத்துவித மா, யகண்ட மா, யநவரத, மாத்மா யிருக்கவும் அதை 'யில்லை யென்' றிருந்த நீ, குரு சாஸ்திர மூல மாயத் தேகாதிப் பிரபஞ்சத்தை நேதி களைந்து, கூடஸ்தப் பிரமத்தை தரிசித்து, வொன் றென அறிந்த இப் போது, அவ் வாத்மா நீ யா ன தெனத் தோற்றினுங், காலத் திரயத்தும் அங்ஙனமே யிருக்கின்ற தா யநுப வித்திருப்பா யென்ற தாம்.* 107

(அ—கை) சத் த சத் தி னுண்மையைத் தெரி வித்து, முற் செய்யுளிற் கூறியபடி, 'அநுபவித் திருபபா, யென வற்புறுத்திக் கூறுகின்றார்.

கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க நர்வூர்,
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு,
பீநமாந் தறிபு மானிப் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே,
ஞாநமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே. 108

(ப—ம்) கானற் சல மாதிகள் விசாரிக்கு மிடத்தில், எப்படி யில்லையோ, அப்படியே. விவர்த்த ரூப மாகத் தோற்றிய பிரபஞ்சம் விசாரிக்கில், திரி காலத்திலும் இல்லை. பரிபூரண மாகிய சுத்த சைதந்நியமே உண்மை யென்பார், "கான னீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர் கநா வூர் வான மை கயிற்றிற் பாம்பு மலடி சேய் முயலின் கோடு



பீநமாந் தறி புமா னிப் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே ஞாந மெய்" யெனவும், அந்தப் பரிபூரண மான சுத்த சைதந்நி யமே, நீ யென்னு மநுவத்தை விட்டு நீங்கா திருப்பா யென்பார், "உன்னை நம் மாணை மறந்திடாதே" யெனவுங் கூறினார்.

(வி—ம்) முன் தெட்சணாமூர்த்தி பேரி லாணை வைத்த வாசிரியர், சுவா நுபவத்தைப் பெற்றதனாற், றன் னைச் சிவ சொரூப மெனக் கண்டு மிகுந்த நம்பிக்கை யுள்ள சீட னாதலால், இச் செய்யுளில், தன் மீதி லாணை வைத்தா ரெனக் கொள்க.

*(தா—ம்) திரிசிய மா யசத் தான செகத்துக் காலத் திரயத் திலு மில்லை யென்றுந், திருக் காயச், சத்தா மாத்திர மான ஆத்மா, திரி காலத்தும் இருக்கின்ற தென்றும், அவ் வாத்ம சொரூபந் தான் என்கின்ற அநுபவம் விட்டு நீங்கா திருப்பாய் என்றுங் கூறின தாம்.* 108

க—வி 1.

இன்னிலந் தனிற்கை வல்ய நவநீத மெனப்பே ரிட்டு,
நன்னில மருவு நாரா யணன்சொன்ன ஞாந நூலைப்,
பன்னியா ராய்ந்து பார்ப்போர் பரமார்த்த சொரூப மாகி,
யன்னிய வநர்த்தம் பொய்யா யாநந்த மெய்யாய் வாழ்வார் 1

க—வி 2.

குலவுசற் குருவின் பாதக் குளிர்புனல் தலைமேற் கொண்
[டா,
லுலகினிற் தீர்த்த மெல்லா முற்றபே றடைவார் போல,
நலமையா குங்கை வல்லிய நவநீத நூலைக் கற்றோர்,
பலகலை ஞாந நூல்கள் படித்தஞா நிகளாய் வாழ்வார்.

(*கைவல்லிய நவநீதத்தில், பூர்வ படலம், தத்து விளக்க முற்றிற்று.*)

*கோவிலூர், மடாலயம் இரண்டாவது குரவர்,*

**ஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள்,**

கைவல்ய நவநீத என்னும் நூலுக்கு, 1-வது தத்துவ விளக்கப் படலத்திற்கு, இயற்றிய பத சாரம் என்னும் உரை, (முற்றுப் பெற்றது.)

ஆகக் கவி (110)

---

## இரண்டாவது, சந்தேகம் தெளிதற் படலத்தின் பத சார உரை

(அ—கை) இந் நூலாசிரியர், தத்துவ விளக்கப் படலத்தை முடித்துக் கொண்டு, இந் நூல் கற்கு முமுட்சுக்களுக்கு, அப் படலத்தின் றத்துவமான, சத்திய ஞான வநந்தாநந்த வஸ்துவைச் சமாதியி லுண்டாகும் அகண்டாகார விருத்தி ஞானத்தினுல் விளக்கி, இனிச் சகச அப்பியாசத்தினுல் உண்டாகும் அகண்டைகரச ஞானத்தினுல், முற் கற்பனை யாக வறிவித்த சீவ ஈசுர சகத்தைப், பரிபூரண பரமாத்வித சொரூப மாக விளங்கும் பொருட்டுச், சந்தேகந் தெளிதற் படலத்தைக் கூறுகின்ருர்.

நார்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்பம்,
ஊழறக் குத்திக் குத்தி யுறைப்பிக்கு முபாயம் போலப்,
பரமசிற் சொருபந் தன்னிற் பற்றிய மனோவி ருத்தி,
திரநிலை பெறச்சந் தேகந் தெளிதல மொழிகின் றேனே. 1

(ப—ம்) பிரகிருதிக்கு மேலான பிரம சொருபத்திற், கோர மூட நீங்கிப், பொருந்திய சத்துவ விருத்தி யானது, ஆரோப மாய்த் தோற்றுகின்ற சீவேசுர சகத்தை, அதிட்டான மான பிரம சொருப மாக வப்பியாசம் பண்ணு மிடத்துச், 'சர்வம் பிரம மய' மென்னும் சாட்சாத்காரா நுபவந்



தடை யின்றி விளங்குவதே, விவகரித்தும், விவகரியாத நிலை யாதலின், அதற்குத் தடையா யுள்ளவைகளைக் களைதல் வேண்டு மென்பார், "பரம சிற் சொருபந் தன்னிற் பற்றிய மனோ விருத்தி திரநிலை பெறச் சந்தேகந் தெளித" லென்ருர்.

*(தா—ம்) சித் தினிடத் துதய மாய்ப், பகிர் முக மின்றி, யச் சித்திற் கரைந்த மந மானது, சென்ற விட மெல்லாம், சித்தா நந்த மாக ரமிக்கும் பொருட்டுச் சந்தேகம் தெளிதலைக் கூறத் தொடங்கின தாம்.* 1

**(அ—கை) முற் படலத்தி "லாத்மா சொருபமே நீ யென் றநுபவித் திருப்பா" யென ஆசிரிய ரநுக்கிரகித்ததைக், கேள்வி யுற்ற சீடன் செய்கையைக் கூறல்.**

நற்கருத் துடையோ னுகி ஞானவா னுகி நின்றோன்,
மர்க்கட நியாயம் போலே மகாபூத விகாரந் தொட்டு,
நிர்க்குண விதேக முத்தி நிலைபரி யந்தந் சொன்ன,
சற்குரு வினைவி டாமற் சந்தத மநுச ரித்தான். 2

(ப—ம்) பிரமாநந்த மய மான சுத்த சத்துவ விருத்தியை யுடைய வனுகி யென்பார், "நற்கருத் துடையோனுகி" யெனவும். தேகாதிப் பிரபஞ்ச மில்லை யென்றுஞ், சிந் மாத்திரமே தா னென்றும், அறிகின்ற தான, அப்பிரதி பந்தஅபரோக்ஷ ஞானத்தை யுடைய வனுகி யென்பார், ஞான வா னுகி' யெனவும், மாற்சால நியாயம் போ லன்றிக், குரங்குக் குட்டி யானது, அக் குரங்கு வெந் தெந்த விடத்திற் செல்லினும், அக் குரங்கை விட்டு நீங்காதது போல், உத்தம பக்குவ னுதலாலும், அநுபவத்தை யடைந்ததனுலும், தூல சரீர முதல் விதேக முத்தி வரை அநுபவ முண்டாகும் படி யநுக்கிரகித்த ஞானாசிரியர் எந் தெந்த விடத்திற் சென்றாலும், விட்டு நீங்காது பணிவிடை செய்து வந்தா னென் பார், "மர்க்கட நியாயம் போல மகாபூத விகாரந் தொட்டு

நிர்க்குண விதேக முத்தி நிலை பரியந்தஞ் சொன்ன சற்குரு வினை விடாமற் சந்தத மநுசரித்தா'' னெனவுங் கூறினர்.

*(தா—ம்) அநாத்ம வுணர்வை* **விட்டு**, *ஆத்ம வுணர்வை யடைந்த சீடன், அத்தியாரோபாபவாத முதலானவற்றை யநுக்கிரகித்த ஆசாரியரை விட்டு நீங்காது, பணிவிடை செய்து நின்றானென்ப தாம்,* 2

**(அ—கை) ஆசாரியர், சீடனை யநுபவம் வினுதல்.**

சந்ததம் புருடன் றன்னைச் சாயைபோல் விடாம லன்பர்,
மைந்தனை நோக்கிச் சாக்ஷி மாத்திர மாநின் றயோ,
சிந்தையி லைய மெல்லாந் தீர்ந்ததோ தெளிவி னுள்ளே,
அந்தரங் கலந்த துண்டோ அநுபவ முரைசெய் வாயே. 3

(ப—ம்) புருட னிழ லவனை நீங்காது, அவ னசைத்த படி யசைகின்றது போல, ஆசாரியரை விட்டு நீங்காது, தற் சுதந்தர மின்றிச், சாதி யாச்சிரமத்துக்கு வழு வான செய்கையி லேவிடினும், புலி யாதி மீது செலுத்திடினும், அப்பிரிய மின்றிச், சிரத்தை யுடன், அவர் கருத்துப்படி நடந்து வந்த சீட னென்பார், ''சந்ததம் புருடன் றன்னைச் சாயை போல், விடாம லன்பா மைந்த'' னெனவும், அசம்பாவனை நீங்கிப் பிரத்தியக்கபிந்ந சருவ சாக்ஷி மாத்திர மாக விளங்குகின்றாயோ வென்பார், ''சாக்ஷி மாத்திரமாய் நின்றாயோ'' வெனவும், பிரமாண பிரமேயாதி சம்சய பாவனைகள் தீர்ந்து, தெளிந் திருக்கின்றனையோ வென்பார், ''சிந்தையி லைய மெல்லாந் தீர்ந்ததோ'' வெனவும், சர்வ மும் பிரம மய மாய்க் கண்ட வுனது தெளிவின்கண், 'நீ நானது விது' முதலான விபரீத பாவனை யுதித் துளவோ வென்பார், ''தெளிவி னுள்ளே யந்தரங் கலந்த துண்டோ'' வெனவுங் கூறினர்.



*(தா—ம்) ஆத்ம வுணர்வை மறைத்தலும், அதிற் சம்சயமும், பேதமு மின்றிச், சிந் மாத்திர மாய் விளங்குகின்றாயோ வென வினுவின தாம்.* 3

**(அ—கை) அவ் வினு மூன்றிற்கு முத்தர மாகச் சீடன் விண்ணப்பஞ் செய்தல்,**

எனவுரைத் தருளு மாசா னிருபதம் வணங்கி யேந்தாய்,
சநநவன் காட்டின் மோகத் தமத்தெழ பேதப் பேய்கள்,
உனதரு ளுதய வெற்பி னுபதேச வருக்கன் றோன்றி,
மநவிழி தெரிய ஞாந வான்கதிர் பரந்தா லுண்டோ. 4

(ப—ம்) தச்சன் கோண லாகிய மரத்தை நூலைப் போட்டு, வொழுங்கு செய் ததில், ராம கிருஷ்ணாதி செய் வது போல, முமுட்சுக்க ளுடைய மநதின், காமாதி யாகிய கோணலை, ஞாந சாத்திர மாகிய நூலைப் போட்டு நீக்கி, நே ரான சுத்த சத்துவ மந மாகச் செய்து. அதி லாத்ம சொருபம் விளங்கும்படி செய்பவ ராதலால், 'ஆசா' னெனவும், ஆசிரிய ரிடத்திற் சீட னறிவிக்க வேண்டியதை நமஸ்கரித்து விண்ணப்பஞ் செய்ய வேண்டு மெனவும், வேத விதிப்படி யுபய பாதாரவிந்தத்தையும், நமஸ்கரித்தா லாதலால், ''இரு பதம் வணங்கி'' யெனவும். அசாத்திரப் பிரபஞ்சத்தின் வழிச் செல்லாது, தடுத்துச், சாத்திரப் பிர பஞ்சத்தின் வழியே செலுத்துவிக்கின்றவ ராதலால், 'எந்தை' எனவும், தத்துவ ஞாநத்தினா லன்றி, மற்றைச் சரியை கிரியை யாதிகளாற் கெடுக்க கூடாத தாய்க், காடு அளவிடப் படாதது போல், எழு வகைப் பிறப்பில், ஒவ் வொரு வகையில். அநேக நாம ரூப மாக விரிந்ததா யிருப் பதால், '' சநநவன் கா'' டெனவும், இரு ளானது பதார்த் தங்களைத் தெரிய வொட்டாமல், மறைப்பது போலச், சொருபமே தான் எனத் தெரிய வொட்டாமல் மறைத்தலி னுல், 'மோகத் தம' மெனவும், இருளிற் றோற்றுவ தாயும்,

அவை நீங்கிற் கெடுவ தாயும், சகலருக்கும் பயங்கர ரூப மாக நின்று, துன்பத்தைச் செய்வதாயு மிருக்கிற பிசாசத் தைப் போல், இப் பேதமும், மயக்கத்திற் றேற்றுவ தாயும், அவை நீங்கிற் கெடுவ தாயும், ஒன்றுக் கொன்று தார தம் மிய மாய் நின்று பிறவித் துன்ப முதலியவைகளைச் செய் விக்கின்ற தாயு மிருத்தலால், 'பேதப் பே' யெனவும், மலை யானது அசையாமல் நிறுத்த லளவால், அளவு படாம லிருக்கின்றது போல், அரு ளானது நீங்காமலும், அள விடப்படாமலு மிருக்கின்றமையால், "அரு ளுதய வெற்" பெனவும், சூரியன் இருளை நீக்குவது போல், ஞானோபதே சம், அஞ்ஞான விருளை நீக்குகின்றமையால், "உபதேச வருக்க" னெனவும், சூரிய னுதித்தவுடனே இக் கண்ணுக்கு இவ் வஸ்துத் தோற்றுவது போல், ஞானோபதேச மான வுடனே, சத்துவ மநதுக்குச் சொருபந் தோற்றுகின்றமை யால், 'மந விழி' யெனவும், சூரிய கிரணம் வியாபித்த போது, பிசாசத் தோற்றம் நீங்குவது போல், சகச ஞானத் தாற், சீவேசுர செகத் பேத நீங்கு மாதலால், "ஞாந வான் கதிர் பரந்தா லுண்டோ" வெனவுங் கூறினர்.

(வி—ம்) 'அருக்கன் றோன்றி' யென்றதனால், அசம் பாவனையும், 'மந விழி தெரிய' வென்றதனால், சம்சய பாவ னையும், 'ஞாந வான் கதிர் பரந்தா லுண்டோ' வென்றத னால், விபரீத பாவனையும், நீங்கிற் றெனக் கொள்க.

*(தா—ம்) ஆசிரியரை நமஸ்காரஞ் செய்து உம தநுக்கிரகத் தால், அசம்பாவனை யாதி நீங்கிற் றெனக் குறிப் பாக அறிவித்த தாம்.* 4

**(அ—கை) அசம்பாவனை யாதி நீங்கி விடின், யா முனக் குபதேசிக்க வேண்டுவ தின்றோ வெனக் கூறு வீராகில்.**



மந்திர மூர்த்தி தன்னால் மாற்றிய பேய்போ னாலு,
மெந்திர மெழுதிக் கட்டி யினிவாா வகைசெய் வார்போன்,
முந்தியுன் னுபதே சத்தான் மோகம்போ னாலு மையா,
புந்திநின் றுறைக்க வின்னம் புகலும்வின் னப்ப முண்டே. 5

(ப—ம்) தேவரீர் அநுக்கிரகத்தால் அசம்பாவனை யாதி மயக்கம் நீங்கினாலும், சத்துவ மநது சங்கற்ப விகற்ப மற்று, ஆத்ம சொருபத்தில் திட நிலை பெற் றிருப்பதற் காகச் சுவாமிக ளின்ன மநுக்கிரகிக்கும் பொருட்டு, அடி யேன் றெரிவிக்க வேண்டிய துள தென்று னென்பார், "முந்தியுன் னுபதேசத்தால் மோகம் போனாலு மையா புந்திநின் றுறைக்க வின்னம் புகலும் விண்ணப்ப முண்டே" யென்றார்.

*(தா—ம்) சகசாநுபவம் வருகிறதற்குத் தடையா யுள்ள, சந் தேகங்களை நீக்கும் பொருட்டு வினவத் தொடங்கின தாம்.* 5

**(அ—கை) அடியேன் றெரிவிக்க வேண்டிய தென் னெனில்?**

ஆகமப் பிரமா ணத்தா லறியென்றும் வாக்குக் கேட்டா,
தேகமாம் பிரம மென்று மிதயத்தா லுணர்வா யென்றுந்,
சோகமாம் மநதுக் கேட்டாச் சோயந்சோதி யென்றுஞ் சொன்னீர்,
மோகமா மிரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே. 6

(ப—ம்) பளிங்கு மண்டபத்தில் தூணுக்குத் தூண் தோற்றின நா, யொன்றே யல்லாமல், இரண் டில்லா திருக் கின்றது போலவும், சொற்பநத்திற் பிரபஞ்சம் பல திருக்கின்றது போலவும், புருஷன் ஒன்றே யல்லா திரண் டில்லா திருக்கின்றது போலவும், சீவேசுர சகத்துப் பல விதமாகத் தோற்றினாலும், சச்சிதாநந்த மாகச் சகலமுங் விதமாகத் தோற்றினாலும், ஒன்றே யாக விருக்கின்ற பிரம சொருப காணப்படுவதால்,

மென்பார், 'ஏகமாம் பிரமம்' எனவும், பஞ்ச கோச முதலான பிரபஞ்சங்களைத் தா னில்லாவிட்டா லறிவா ரில்லாத படியினுலேயும், அறிவே வடி வாக விருக்கின்ற தன்ஞலே சகலமும், அறியப்படுவதனுலேயும், இவைக ளெல்லா வற்றையும், அறிகின்ற தன்னை, யறிதற்கு வேறே யறிவு வேண் டாதபடியினுலும், சொப்பிரகாச மென்பார், "சொயஞ் சோதி' எனவும், பயிரினிடத்தி லுண்டான களையை நீக்கிப் பயிரை விருத்தி யடையச் செய்வது போல, எனக் குண்டான வையம் மயக்க மான சம்சய மிரண்டையும் போக்கி, யென தாத்ம ஞாநத்தை விருத்தி யடையச் செய்ய வேண்டு மென்ரு னென்பார், 'மோகமா மிரண்டு சங்கை முளைத்தன பறித்திடீரே' எனவுங் கூறினுர்.

(வி—ம்) முற் படலம் சத்தொடு சித்தாந்த மென்னும் (69) வது கவியில், "ஏக" மென்றும், "எல்லாங் கண்டறியு" மென்னும் (73)வது கவியில், "சொயஞ் சோதி" யெனவுங் கூறி, "அறிவுக்கு மறிவு செய்யு" மென்னும் (74) வது கவியில், "அறிபடும் பொருணீ யல்லை யறிபடாப் பொருணீ யல்லை"என்றதைக் குறித்து,இச் செய்யுளில் வினு வின தெனக் கொள்க.

*(தா—ம்) முற் படலத்தி லாசிரியர் சுயம்பிரகாசமா யத்துவித மான வஸ்து, வாக்குக் கெட்டு மெனவும், எட்டா தெனவும் மநத்திற் கெட்டு மெனவும், எட்டா தெனவும், கூறியதைக் குறித்து அங்ஙன மிரு பிரகாரமா யிருக்க லாமோ வென வுண்டாகிய ஐயத்தை நீக்கும் பொருட்டு, இச் செய்யுளிற் சீடன் வேண்டிக் கேட்ட தாம்.* 6

(அ—கை) பிரமம் வாக்குக் ககோசர மாயுங், கோசர மாயு மிருக்குமோ, வென்னு முதற் சங்கை தெளியும் பொருட்டு, இச் செய்யுளிற், பிரமம் வாக்குக் ககோசரமா மென் றறியும்படி, ஆசிரியர் கூறுதல்.



மற்றழப் பிரமா ணத்தால் வத்துநிர் ணயங்கூ டாதே,
உற்றதோர் விடயம் பூத முபயமன் றத லாலே,
குற்றமாங் குணவி சேடங் கூடாமை யிருக்கை யாலே,
யிற்றது வாக்குக் கெட்டா தென்பது மறிவாய் நீயே. 7

(ப—ம்) காட்சிப் பிரமாணத்தா லறியப்படுந் திருசிய மல்லா திருக்கின்ற அதிருசிய மான திருக் கென்பார், "உற்ற தோர் விடய மன்" றெனவும், தேகேந்திரி யாதிகளை யபிமாநித்து அசைத்துச் சுட்டி யறிகின்ற வநு மாநத்தால், அறியப்படுஞ் சீவ னல்லா திருக்கின்ற நிர்ச் சீவ ஞன பே ரறி வென்பார், 'பூத மன்' றெனவும், உபமாநப் பிரமாணத்தா லறியப்படுந் துவித மல்லா திருக்கின்ற அத்துவித மென்பார், 'உபய மன்' றெனவும், அவாந்தர வாக்கியத்தா லறியப்படுங் குணி விசேடிய மல்லா திருக் கின்ற நிர்க்குண நிர்விசேட மென்பார், 'குண விசேடங் கூடாம லிருக்கையாலே' யெனவுங் கூறினுர்.

(வி—ம்) அன் றென்பதை, மூ விடத்துங் கட்டிக் கொள்க.

*(தா—ம்) பிரமம் வாக்குக் ககோசர மென்றதை யுறுதிப் படுத்து நிமித்தம், பிரமம் அதிருசிய மான திருக் காயும், நிர்ச் சீவ ஞன பே ரறிவாயும், அத்துவித மாயும், நிர்க்குண நிர்விசேட மாயு மிருப்பதால், பிரத்தியட்ச அநுமாந வுபமாந பிரமாணங்களினுலும், அவாந்தர வாக்கியத்தினுலும், அறியப்படாத தென வறிவித்த தாம்.* 7

(அ—கை) பிரம்மம் வாக்குக்குக் ககோசரமா மெனத் தெளியும் பொருட்டு ஆசிரியர் கூறுதல்.

வாக்கியந் தனக்கெட் டாது வத்துவேன் றுரைத்த வேதம்,
வாக்கிய விருத்தி யாலவ் வத்துவைக் காட்டிற் றன்றே,
வாக்கியங் கிளிலே மாந மாவதே தென்ற யாகில்,
வாக்கிய மிரண்டு மெய்யே மறைகள்போய் யாது கேளாய். 8

(ப—ம்) துவம் பத தற் பத வாச்சியார்த்தங்களை நீக்கி, லட்சியார்த்த மாகிய 'கூடத்த ராகிய நீயே பிரம' மென்று, முற் படலத்தில், மகா வாக்கிய மறிவித்த தென்பார், 'வேதம் வாக்கிய விருத்தியா லவ்வத்துவைக் காட்டிற்றன்றோ' வெனவும், வேதம் பூர்வ மீமாஞ்சகர்கள் சம்மதப்படி யநாதி யாதலானும், தார்க்கிகர்கள் சம்மதப்படி சரவஞ்ஞராயும், பேரருளுடைய வாத்தனான பரமேசுவர வாக்கியமானதாலும், அசத்தியங்களைக் கூறாதென்பார், 'மறைகள் பொய்யா' தெனவுங் கூறினார்.

(வி—ம்) 'காட்டிற் றல்லவா' வென்பது, முற் படலம் (81) 'தத்துவ' மெனுங் கவியிற் கூறிய தெனக் கொள்க.

*(தா—ம்) பிரமத்தை மகா வாக்கியம் முற் படலத்தி லறிவித்ததே யெனக் கூறி, வாக்குக் கெட்டு, மெட்டா தென்பதை வேறொரு பிரகார மாக அறிவிக்கத் தொடங்கின தாம்.* 8

**(அ—கை) பிரமஞ் சுருதி வாக்கியங்களுக் ககோசரமுங் கோசரமு மா மெனக் கூறுதல்.**

தன்பதி யல்லாப் பேர்க டமையல்ல னல்ல னென்றாள்,
அன்பனைக் கேட்ட நேர மவள்வெட்கி மௌந மானாள்,
என்பது போல நீக்கி யிதன் றிதன் றெனச்சே டித்த,
பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேதம். 6

(ப—ம்) பிரம மின்ன லட்சண முடைய தென்று சுட்டிக் காட்டாது, அசத்துச் சட துக்காதி லட்சண முடைய தேகாதி சகத்தை, அப் பிரம மல்ல வென்று நீக்கிறதனால், அதை வேதங் குறிப் பாகக் காட்டு மென்பார். 'நீக்கி யிதன் றிதன் றெனச் சேடித்த பின், பரப் பிரமந் தன்னைப் பேசாமற் காட்டும் வேத' மென்றார்.



*(தா—ம்) தூல தேகாதி யொன்பதையும், விராட்டாதி யொன்பதையும், நேதி களைந்து. அவற்றிற்கு விலட்சண மான பிரம சொரூபத்தை வேதங் காட்டாமற் காட்டு மென்ப தாம்.* 9

**(அ—கை) பிரமம், மநதுக் ககோசர மாயுங், கோசர மாயு மிருக்குமோ, வென்னு மிரண்டாஞ் சங்கை தெளியும் பொருட்டு, ஆசிரியரிச் செய்யுளி லுத்தரங் கூறுவான் றொடங்கி, யுகபற் சிருட்டி யாக, மநோ வுற்பத்தி கூறுகின்றார்.**

முந்திய சங்கை தீர மொழிந்ததை யறிந்து கொள்வாய்,
பிந்திய சங்கை தீரப் பேசுமுத் தரநீ கேளாய்,
இந்தியங் களுக்கி ராச னிதயமா மதிநே னெண்ணங்கள்,
புந்தியு மந்மு மென்றே புறத்தகத் துலாவி யாடும். 10

(ப—ம்) பசுவின் சரீர மெங்கும் பா லிருக்கினும், முலைக் காம்பிற் பால் காணப்படுகின்றது போலச், சரீர மெங்கும் வியாபித்திருக்கினும், முக்கியமா யிதயத்தில் விளங்கு மாந்மா வென்பார், 'இதய' மென்றார்.

*(தா—ம்) ஆத்ம ஸ்மரணமே மநம் புந்தியு மாய்த் தோன்று மென்ப தாம்,* 10

**(அ—கை) சீவ னுற்பத்தி கூறல்.**

உன்முகம் போற்கண் ணடிக்கீ துள்ளொரு முகங்கண் டாற்போற்,
சிந்மய வடிவின் சாயை சித்துப்போற் புத்தி தோன்றும்,
நின்மநோ விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவும்,
தன்மநன் மகனே யித்தைத் தானன்றே ஞாந மென்பார். 11

(ப—ம்) புத்தியிற் பிரதிபிம்பித்த ஆத்மச் சாயை சிதா பாச னென்பார், 'சிந்மய வடிவின் சாயை சித்துப்

போற் புத்தி தோன்று' மெனவும், வேறுபா டற்று, அந்தர் முக நாட்டமா யிருக்கின்ற மந மென்பார். 'நின்மநவிருத்தி' யெனவும், விட்ட பொருளைப் பற்றுது, தேகாபிமாந மின்றிச் சிவத்தைத் தவிர வே ெறுன்று நாடாது, ஆநந்தா நுபவம் பெற்றிருக்கின்ற சீட னென்பார். 'தன்ம நன்மக' னென வும், சிதாபாசனுடன் சேர்ந்து பகிர் முக மாய் நாடுகின்ற விந்த விருத்தியே ஞாந மென்பார், 'இத்தைத் தா னன்றே ஞாந' மெனவுங் கூறினுர்.

(தா—ம்) விருத்தி ஞாநமுஞ், சிதாபாசனு மினைய வெனக் கூறின தாம். 11

(அ—கை) ஞேய வுற்பத்தி கூறல், 'தோற்றுவிக் கும்' ஒரு விடயத்தை விளக்க, இரண் டேதுக் கெனில்?

உருக்கிய தராநீர் நாநா வுருவங்க ளானுற் போல,
விருத்திகள் கடப டாதி விடயமாய்ப் பரிண மிக்கும்,
அருப்பல விடய மெல்லா மாபாசன் றேற்று விக்கும்,
இருட்டினில் விளக்குங் கண்ணு மில்லாமற் பொருள்கா ணுதே. 12

(ப—ம்) மநோ சங்கற்பங்களே, சகத் தாகத் தோற்று தலின், 'விருத்திகள் கட படாதி விடயமாய்ப் பரிணமிக் கும்' என்றுர்.

(தா—ம்) மநோ விருத்தியே, ஞேய மாகு மெனவும், அந்த ஞேயத்தைச், சிதாபாசன், விருத்தியுடன் கூடி விளக்குவிக்கு மெனவுங், கூறின தாம். 12

(அ—கை) பகிர் முக, வந்தர் முக ஞாநத்தா, லறிவ திவை யெனத், திட்டாந்த மூல மாய் நியாயங் கூறல்.



எரிகின்ற விளக்காற் கண்ணு லிருட்பொருள் காண வேண்டுந்,
தெரிகின்ற பரிதி காணச் சென்றிடிற் கண்ணே போதும்,
விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்,
புரிகின்ற விருத்தி யொன்றே போதுமெய்ப் பொருகாண்போர்க்கே.

(ப—ம்) பொய் யாயுஞ், சட மாயு மிருக்கின்ற விட யத்தி னஞ்ஞாநத்தைப் போக்குகிறதற்கு, விருத்தி ஞாந மும், அதை யறிதற்குப், பல ரூப மான சிதாபாசனும் வேண்டு மென்பார், 'சகத்தைக் காண விருத்தியும் பலமும், வேண்டு' மெனவும், சன் மாத்திர மாயுஞ், சுயம்பிரகாச மாயு மிருக்கின்ற ஆத்மாவைத் தரிசித்தற்கு, முமுட்சுக்கள் விரும்புகின்ற விசார ரூப மான விருத்தி மாத்திரம் வேண்டு மென்பார், 'புரிகின்ற விருத்தி யொன்றே போது மெய்ப் பொருள் காண் போர்க்கே' யெனவுங் கூறினுர்.

(தா-ம்) சட மான சகத்தை யறிய, மநமுஞ், சீவனும், வேண்டு மெனவும், சித்து ரூப மான ஆத்மாவை யறிய, முன் சொல்லிய சத்துவ விருத்தி மாத்திரம் வேண்டு மெனவுங் கூறிய தாம். 13

(அ—கை) மநத்தி னுருவங் கூறிப், பிரமம், மநத் திற் ககோசரமும், கோசரமுமா, மெனத் தெளியும் பொருட் டுத்தரங் கூறி முடித்தல்.

விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மநமென் பார்கள்,
கருத்தெழும் விருத்தி வேண்டுங் கணக்கினுன் மநத்திற் கெட்டும்,
வருத்திய பலமா மிந்த மநத்திற்கெட் டாது கண்டாய்,
அருந்தமிப் படியென் றைய மகன்றுநீ தெளிந்தி டாயே. 14

(ப—ம்) பகிர் முக நாட்ட மாய்ச் சிதாபாசனுடன் கூடி யிருக்கும் விருத்தியே மந மென்பார், 'விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மந' மெனவும், வெய்யில் விளக்

குப் போற், சிதாபாசன் குன்றி, யக முகமா யிருக்கின்ற சுத்த சத்துவ மநதினுற், பிரமத்தை யறியலா மென்பார், 'கருத்தெழு விருத்தி வேண்டுங் கணக்கினுல் மநத்திற் கெட்டு' மெனவும், விடயத்தைச் சத்திய மாய், நல்லது பொல்லாத தென்று பகுத் தறிந்து, துன்பங் கொடுக்கின்ற சிதாபாசன் சேர்ந்த மநத்தினுற், பிரமத்தை யறியக் கூடா தென்பார், 'வருத்திய பலமா மநத்திற் கெட்டா' தெனவுங் கூறினர்.

*(தா—ம்) பிரம சொரூபஞ், சகத்தைச் சத்திய மா யறிகின்ற மநத்திற் கெட்டா தெனவும், சகத்தை மித்தை யாக வறிகின்ற மநத்திற் கெட்டு மெனவுங் கூறிய தாம்.* 14

**(அகை) முற் கூறிய கடா விடைகளானுங், கோசராகோசர மின்றிய சுத்தப் பிரமமே, தா னென் றறிந் ததி லுதிக்கு மநதை யதிற் கரைக்கும் பொருட்டு, ஓர் சங்கை வினுதல்.**

வஞ்சகமில் பரமார்த்த குருவே சொன்ன
வழிகளற்ந் தேனினியோர் வசநங் கேளீர்,
சஞ்சலமற் றகண்டபூ ரணமாய்ச் சித்தந்
ததாகார மாவதன்றே சமாதி யோகம்,
உஞ்சலையோத் தலைவதுதன் சுபாவ மாகி
யொருகணத்திற் பலவுலகா யுதித்து மிந்த,
நெஞ்சகம்வத் துவிலசையா நிவாத தீப
நிலையடையவ தெப்படியோ நீர்சொல் வீரே. 15

(ப—ம்) ஆத்ம வநுபவ மில்லா திருக்கப் பொரு ளாதியைக் குறித், துளது போற் காட்டுத லின்றி, யதார்த்த சொருப வநுபவம் பெற்றுக், கருணையினுலே யதார்த்த சொருபத்தைப் போதிக்கின்ற ஆசிரியரே யென்பார், 'வஞ்சகமில் பரமார்த்த குருவே' யெனவும், அருகன் முதலி



யவ ராகமாதிகள் போல, மே லொன்றினுற் கண்டிக்க படாத உபநிஷத்துக்களால் நிச்சயித்த, சச்சிதாநந்த நிறை வான பிரமாகாரமாய் மநதாக வேண்டு மென்பார், "அகண்ட பூரணமாய்ச் சித்தந் ததாகார மாவதன்றே" வெனவும், பிரபஞ்ச மானது, கசப்புக் குவமை யில்லாத வெல்லங், கசக்கின்ற தென்னும் பிராந்தி போலப், பிரபஞ் பஞ்சம் போல விராத, பிரம மாகிற பொருளிடத்தி, லாரோப மானபடியினுலும். அவ் வாரோப மான பிரபஞ் சத்திற் கதிட்டாநப் பொருள், தன்னை விட வே றில்லாத படியினுலும், தன்னைப் பொரு ளென்பார், "வஸ்து" வெனவுங் கூறினர்.

(வி—ம்) அகண்ட மென்னும் பதத்துக்கு, உலோகா யுதர்கள் சித்தாந்தம், அருகன் புத்த னுதி யாகமத்தினுலும், அது, தேவ கந்தருவ ராகமத்தினுலும், இச் சித்தாந்தங்கள் எல்லாம், பிரமாவி னுகமங்களாலும், இவைகள், விஷ்ணு வாகமங்களினுலும். இவைகள். ருத்திராகமத்தினுலும், இவ் வாகமங்க ளெல்லாம், புராணத்தினுலும், இது பார தத்தினுலும். இது, நீதி சாரத்தினுலும், இவை, வேதத்தின் கன்ம காண்டத்தினுலும், இவை, யுபாசநா காண்டத்தினு லும், கண்டிக்கப்படும். இத்தனை சித்தாந்தங்களையும் கண் டிப்ப தாயும், வேறு அதிசயப் பிரமாண மின்றிச், சகல பிரமாணங்களுக்கும் கொடி முடி யாயு மிருக்கு முபநிஷத் துக்களால், நிச்சயித்த தாய், ஒன்றினுலுங் கண்டிக்கப் படாதா யிருக்கும் சச்சிதாநந்தப் பிரமமே யகண்ட மெனக் கொள்க.

*(தா—ம்) மந மசையா திருத்தற் குபாயம் வினவின தாம்.* 15

**(அ—கை) அச் சங்கைக் குத்தரங் கூறும் பொருட்டு, ஆசிரியர் மநத்தின் முக் குணமும், அவைகளின் காரிய மும் கூறல்.**

கருதுமநோ துணமூன்ற மூன்றி லொன்று
கதித்தெழுந்தான் மற்றிரெண்டுங் கரந்து நிற்குந்,
தருமமிகுந் சத்துவமே லான போது
சன்மார்க்க மானதெய்வ சம்பத் துண்டாம்,
மருவுமிரா சதமாகி லுலக தேக
வாதனையாஞ் சாத்திரவா சனையு மாகும்,
அருமகனே தாமதமே லான போதி
லசுரசம்பத் துண்டாகு மறிந்து கொள்ளே. 16

(ப—ம்) நிட்காமிய புண்ணியத்தால். சத்துவ குண மிகுந்த போது, உற்பத்தி திதி லயத் துன்பத்தை விசாரித் தல், மூட சங்க நீங்கல், ஆசை கோப மாந முதலிய வற்றை நீக்கல், பஞ்சேந்திரிய மடக்கல், சாது சங்கத்தில் சேர்தல், குரு சேவை செய்தல், சிரவணாதி, யப்பியாசித்தல் முதலிய தெய்வ சம்பத் துண்டாகு மென்பார், ''தரும மிகுஞ் சத்துவ மேலான போது சன் மார்க்க மான தெயவ சம்பத்துண்டா,, மெனவும, காமிய புண்ணியத்தா லிராசத குண மிகுந்த போது, உலகத்தி லுள்ள சநங்க ளெல்லா மிகழாது புகழவேணு மென்பது முத லாகிய சிந்தனை யாகிற யுலக வாசனையும், தேக நெடு நா ளிருக்க வேண்டு, மாரோக்கியமா யிருக்கவேண்டு, மழகா யிருக்க வேண்டு மென்பது முத லாகிய சிந்தனை யாகிற தேக வாசனையும், உலகத்தி லுள்ள சாத்திரங்க ளெல்லாம் படிக்க வேண்டும், அதன் அர்த்த மெல்லா மறிய வேண்டும், அதிற் கூறியபடி யெல்லா மநுட்டிக்க வேண்டு மென்பது முத லாகிய சிந் தனை யாகிய சாஸ்திர வாசனையு' முண்டா மென்பார். ''மருவுரசோ குணமாகி லுலக தேக வாதனையாஞ் சாத்திர வாசனையு மாகு'' மெனவும், நன் மார்க்கத்தை யநுட்டித் திருக்கிற சீடனே யென்பார், ''அரு மகனே'' யெனவும், பாவ கர்மத்தினுற் ருமத குண மிகுந்த போது, ஒன்றை யாகு, மகா தென்று பகுத் தறித லின்மை, யொருக்காலும் லபியாத பொருளை வாஞ்சித்தல். விருதாக் கோபஞ் செய்தல்,



அசத்தியங் கூறல், ஈசுரன், புண்ணிய பாவம், சொர்க்க நகர மில்லை யெனல், யாரிடத்திலும் கடிந மாக வசநித்தல், அநாசாரமா யிருத்தல், அவசியஞ் செய்யத் தக்க காரியத் துக்கும் பொருள் செலவு செய்யா திருத்தல், கருமி யுபா சகன், ஞாநி போல, நடித்துப் பொருள் சம்பாதித்தல், முத லாகிய வசுர சம்பத் துண்டாகு மென்பார், ''தமோ குண மேலான போதி லசுர சம்பத் துண்டாகு'' மெனவுங் கூறினர்.

(தா—ம்) *மநத்திற்குச் சத்துவ ராசத தாமத மெனும் முக் குணங்க ளுள வெனவும், அவற்றி லொன் றதிகரிக்கின் மற்றை யிரண்டு மடங்கு மெனவும், சத்துவ குண மிகுந்த போது, வைராக் கியாதி, சிரவணாதி யுண்டாகு மெனவும், இராசத குண மிகுந்த போது, புகழை விரும்புதலும், தேகாபிமாநமும், கர்ம சாஸ்திரம் படித்த லாதியும் உண்டாகு மெனவும், தாமத குண மிகுந்த போது, காமாதி சிந்தனை, அசத்தியங் கூறல், கொலை செய்த லாதியு முண்டா கு மென்ப தாம்.* 16

(அ—கை) மநோ லய வுபாயங் கூ றல், 'போம்' எவ்வித நிக்குகிற தெனில்?

மநதுசத் துவசோ நுப மற்றிரண்டும்
வந்துகலந் ததுகளதை மாற்றி னற்போம்,
தனதுசன்மார்க் கத்தைவிடா திருந்த போது
தாமதமு மிராசதமுஞ் சமிக்கும் பின்னைக்,
கநபரிணு மஞ்சலநம் போம்போ னக்காற்
களங்கமற்று நின்றவா காசம் போலு,
நினதுளமப் படியாமப் பிரமத் தோன்றய்
நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே. 17

(ப—ம்) நிச்சல மாய்ச் சூட்சும மான சத்துவ குண முடைய மநதிற்குப் பிராண தரும சலந மாகிய ரசோ குண

முங், தேக தரும தூல மாகிய தாமத குணமு மிடையி லுண்டாயிற் றுதலால், நீக்கி னுல் நீங்கு மென்பார், "மநது சத்துவ சொரூப மற்றிரண்டும் வந்து கலந்தது களை தை மாற்றினுல் போ" மெனவும், மைத்திரியாதி சற் குணங்களுடன் நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமா நந்தாத்துவித சொருபமே நா னென்கின்ற சிந்தனை யாதி, யநவரதஞ் செய்யில், இராசத தாமத குணம் நீங்கு மென் பார், "தனது சந்மார்க்கத்தை விடா திருந்த போது தமோ குணமும் ரசோ குணமும் சமிக்கு" மெனவும், கூறினுர்.

*(தா—ம்) ஞாநாப்பியாசஞ் செய்யில், ரசோ தமோ குண நீங்கிச், சத்துவ மநம் பாலிற் கலந்த சலம் போற், பிரம சொரூபத் தில் லயிக்கு மென்ப தாம்.* 17

**(அ—கை) திட்டாந்தத்துட னுத்தரங் கூறி முடிக்கின்றுர்.**

களங்கமற்ற கண்ணடி தன்னில் வேறேர்
களங்கமற்ற கண்ணடி காட்டும் போது,
விளங்கியதன் மயமாகி யபேத மாகி
விகற்பமின்றி நிருவிகற்ப மானுற் போல,
வளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா
யாநந்த மாம்பிரமத் தயிக்க மான,
யுளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே
யுலைவெங்கே யென்றுசங்கை யொத்தி டாயே. 18

(ப—ம்) சீவன் முதலொன்றுக் கொன்று விரி வான சுத்தம் வரை, வளைத் திருக்கின்ற மாயா வசிட்டரா லும், மட்டுக் கட்டப்படாது, விரிந் துள்ள பெரி தாயும், தேகத் திற்குள், 'நா' னென்னு மிருபத் தெட்டு தத்துவங்களும், வெளியி, 'லீ' தென்னும் ஏழு தத்துவங்களும், அவஸ்தாத்



திரயங்களிலும், தேஹாதி யழிந்து போகையினுங், கூடத் தோற்றி யழியாது நித்தியமா யிருக்கின்றதாயும், அறிவில் லாமற் சடமா யிருக்கின்ற சகல பிரபஞ்சங்களையும், இயற்கை யறிவற்றுச் செயற்கை யறிவாய்த் தோற்றுகின்ற சரீரத் திரயங்களையும், இயற்கை யறிவா யிருந்து காண் கின்றதாயும், தம்ப முதற் பிரமா வரை எல்லோரிடத்திலு மெதை யெதை விடுக்கினும் கைவிடப்படாது, எவ் விடத் திலு மதிகப் பிரியமாயு மிருக்கின்ற தாயு முள்ள, பூரண சொருப மென்பார், "அளந் தறியப்படா விபுவாய்ச் சத் தாய் சித்தா யாநந்தமாம் பிரம" மென்றுர்.

(வி—ம்) விபு வென்ற பதத்துக்கு, விசிட்டனை வளைத்துக் கட்டினது, சூட்சும சரீரம், அதை வளைத்துக் கட்டினது, தூல சரீர, மநேகங் கோடி தூல சரீரத்தால் அடக்கப்படாத, தூலப் பிருதுவி, இதனு லடக்கப்படாத அப்பு, இதனுல் அடக்கப்படாத அக்கினி, இதனு லடக்கப் படாத வாய்வு, இதனு லடக்கப்படாத ஆகாசம், இதனி னும் விரிந்து இருக்கும் இரண்யகர்ப்பம், இதனினும் விரிவா யிருக்கும் அவ்வியாகிருத, மிதனினும் விரிவா யிருக்கும் அவ்வியத்தம் இதனினும் விரிவா யிருக்கும் சுத்தம், இவை களை யெல்லாம் வளைத் திருக்கின்ற மாயா விசிட்டரானும், மட்டுக் கட்டப்படாமல், அநந்த மாய் விரிந்திருக்கும் சச்சிதாநந்த சொருபமே விபு வெனக் கொள்க.

*(தா—ம்) அஸ்தி பாதிப் பிரிய மாய் அகண்டமா யிருக்கும் பிரம சொருபத்திற், சகதுவ மநது லயித்து, அவ் வண்ண மிருக் கிற சலநப்படுத்துஞ் சகத் தாகப் பரிணமித்தலும், அதற் கின் றென வறி வித்த தாம்.* 18

**(அ—கை) சத்து ரூபப் பிரமத்திற், சத்துவ மநம் லயித்த போது, சத்துக்கள், பிராரத்த போகம் புசிக்கும் விதந் தெரியச் சீடன் வினுதல்.**

ஏகமாய் மநமிறந்தாற் சீவந் முத்த
ரிக்குமட்டும் பிராத்த மெதினு லுண்பார்,
போகமா னதுபுசித்துத் தொலைப்ப தன்றே
புசிப்பதென்றன் மநந்தானும் போன தன்றே,
சோகமா மநமிறந்தாற் போக மில்லை
தோனறுமெனின் முத்தரென்று சொலக்கூ டாதே,
மோகமா மிதுதெளியக் குருவே நன்றய்
மொழிந்தருள்வாய் தெளிந்ததன்றே முத்தி தானே. 19

(ப-ம்) மந மிறந்த சுழுத்தி மூர்ச்சையி, லொருவருக்கும் யா தொரு விவகாரமும், யா தொரு புசிப்பு மின்மை போல, அத்துவித மான பிரம சொருபத்திற், பாலிற் கலந்த சலம் போல, மந நசித்தாற், சீவந் முத்தருக்குத் தேகாந்தம் வரை ஒரு விவகாரமும், ஒரு புசிப்பு மிராதே யென்று னென்பார், "ஏகமாய் மந மிறந்தாற் சீவந் முத்த ரிருக்கு மட்டும் பிராரத்த மெதினு லுண்பார்" எனவும், வியாசாதி சீவந் முத்தர், பிராரத்த போகம் புசித்தது புராணங்களிற் சொல்லப்பட்டிருப்பதாலும், கடன் வாங்கினவன் கொடுத்துத் தீர வேண்டியது போற், பிராரப்த கர்ம பலனைப் புசித்துத் தீரவேண்டிய தாதலாலும், பிரார்த்த கன்மப்படி விவகாரஞ் செய்யாமலும், போகம் புசியாமலும், விட்டு நீங்காதே யென்று னென்பார், "போகமானது புசித்துத் தொலைப்ப தன்றோ" வெனவும், சாக்கிர சொப்பநத்தில், மந மிருத்தலாற், சமுசார துன்பமும், அது வில்லாத சுழுத்தியிற், துன்ப நீக்கமு மிருப்பதாலும், மந மிறவாத பேர், முத்த ரென்றால், எல்லோருஞ் சீவந் முத்தராக வேண்டு மாதலாலும், மந மிறவாதோர் சீவந் முத்தராகாரே யென்று னென்பார், "தோன்று மெனின் முத்த ரென்று சொலக் கூடாதே" யெனவும், ஆசிரியரே! சமுசய நீங்கா விடின் முத்தி யில்லாதபடியாலும், சமுசயத்தைப் போற் றுன்பங் கொடுப்பது வேறொன் றின்மையினும், இப் பெரிய மயக்கமான சமுசய நீங்கத் தகுந்த



படி போதிக்க வேண்டு மென்று னென்பார், "மோகமா மிது தெளியக் குருவே நன்றாய் மொழிந் தருள்வாய் தெளிந்த தன்றோ முத்தி தானே" யெனவுங் கூறினார்.

*(தா-ம்) மந மிறந்தாற் சீவந் முத்தி கூடாது, மந மிறந்தாற் பிராரத்த போகம் புசித்தல் கூடாது, சீவந் முத்தரா யிருந்து, பிராத்தம் புசிக்க வேண்டு மாசையால், இங்ஙன மொவ்வா திருக்கின்ற சங்கையைத் தெளிவிக்க வேண்டு மென வேண்டிக் கொண்ட தாம்.* 19

(அ-கை) அச் சங்கைக் குத்தரங் கூறுவான் றொடங்கி, மநோ நாச மிரு வித மாகக் கூறுகின்றார்.




மநநாசஞ் சொருப மென்று மரூப மென்றும்
வகுத்துரைப்பா ரிருவகையாய் வருமி வற்றில்,
வினவாத சீவந்முத்த ரிடத்தி லொன்றும்
விதேகமுத்த ரிடத்திலொன்றும் மேவு மைந்தா,
தனதான சத்துவமாய் மநஞ்சே டித்துத்
தாமதமி ராசதந சித்தல் சொ ருபநாசம்,
அநகாசத் துவந்தானு மிலிங்க தேக
மடங்கும்போ தடங்குதலே யருப நாசம். 20

(ப-ம்) நிர்விகற்ப, நிர்விசேஷ, நித்தியாநந்த, நிட்பிரபஞ்ச சொருபந் தானாகவும், பிரபஞ்சங் காலத் திரயத்திலு மில்லாத தாகவும், அநுபவ மாயறிந் திருத்தலாற், கற்க வேண்டிய தில்லாதவ ரென்பார், "வினவாத சீவந் முத்த" ரெனவும், அஞ்ஞாநாதி மாசற்றவனே யென்பார், "அநகா" வெனவுங் கூறினார்.

19

*(தா—ம்) மநதின் ராசத தாமத நீங்கிச், சத்துவ குண மாத்திர மானால், உருவ நாச மெனவும், அஃது சீவந் முத்தருக் குண்டா மெனவும், அச் சத்துவ குணமும்; லிங்க தேகத் துடன் அடங்குவது, மநத்தி னருவ நாச மெனவும், அஃது விதேக முக்தருக் குண்டா மெனவுங் கூறின தாம்.* 20

(அ—கை) உருவ மின்றி, யருவமா, யுண ருருவ மான மநதினாற், சீவந் முத்திச் சுகமும், பிராரத்த போகமும்; அநுபவிக்கலா மெனல்.

சுத்தமாஞ் சத்துவமே யுண்மை யாதுந்
துகளிருள்போ னால்மநமென் சொல்லும் போம்போம்,
வர்த்தமா நத்தில்வந்த வுணவை யுண்பார்
வருவதும்போ வதும்நினைந்து மிகிழார் வாடார்,
கர்த்தனு மகந்தையைவிட் டகர்த்த ராகி
கரணவிருத் திகளவத்தை கண்டா ராகி,
முத்தரா யிருக்கலுமாம் புசிப்புங் கூடு
முட்டில்லையென் றறிந்துசங்கை மோசிப் பாயே. 21

(ப—ம்) சஞ்சல சுபாவ மாயுங், காமக் குரோத முதலானதை யுண்டாக்குவ தாயு மிருக்கிற ராசதமுந், தூல சுபாவ மாயும், மயக்கங் கலக்க முத லானதை யுண்டாக்குவ தாயு மிருக்கிற தாமதமு, நசித்த போது. அத்தைப் பார்க்க வேண்டு, மித்தைப் பார்க்க வேண்டா, மத்தைச் செய்ய வேண்டு. மித்தைச் செய்ய வேண்டா, மத்தைப் புசிக்க வேண்டு.மித்தைப் புசிக்க வேண்டா மென்று மநநம் பண்ணு மநது, இறந்து போகும். அசஞ்சல வத்தூல சுபாவ மாயும், பரிசுத்தமும், ஞாநமு மாநந்தமு, முண்டாக்குவ தாயு மிருக்கிற சுபாவ சொரூப மான சத்துவ மந மிருக்கு மாதலாற், பிராரத்த கன்மப்படி நிகழ் காலத்தி லுள்ள விவகாரத்தைச் செய்து, போகத்தைப் புசிப்பா ரென்பார், "சுத்தமாஞ் சத்துவமே யுண்மை யாகும் துகளிருள் போனால் மந மென் சொல்லும் போம் போம் வர்த்த மாநத்தில் வந்த வுணவை யுண்பா" ரெனவும், பேய் பிடி யுண்டோனுக்குத் தேகாபிமாந மின்றி, யிதற்கு முன் நல்ல அந்நாதி புசியா தொழிந்தோ மென்னும் விசநமும், இனி மேல் நல்ல அந்நாதி புசிப்போ மென்னுஞ் சந்தோடமு முண்டாகாதது போற், றேகாதிப் பிரபஞ்சங் காலத் திரயத்திலு மில்லையென் றுந். திருக் கான பிரம சொரூபமே தா னென்றும்; அபரோட்சமா யறிந் திருக்கின்ற ஞாநிகளுக், கிறந்த காலத் தின்ன விவகாரஞ் செய்யா தொழிந்தோ, மின்ன போகம் புசியாது விட்டோ மென்னுஞ், சிந்தனையாற் றுன்பமும். வருங் காலத் தின்ன விவகாரஞ் செய்வோ, மின்ன போகம் புசிப்போ மென்னுஞ் சிந்தனையா லின்பமு முண்டாகா தென்பார், "வருவதும் போவது நினைந்து மகிழார் வாடா" ரெனவும், உழவாதி யாகாதி, சிரவணாதி செய்யாநின்ற சிதாபாசனுக்கு விலட்சண மாகவும், அவத்தாத் திரயம், அவத் தாத் திரய வியாபாரம், அவத்தாத் திரய வபிமாநிக ளுடைய அந்நுவய வியதிரேகங்களைக் காண்கின்ற சாட்சி யாகவு மிருக்கின்ற, சீவந் முத்தரா யிருக்கவுங் கூடும், பிராரத்த போகம் புசித்தலு மாகு மென்பார், "கர்த்தனு மகந்தையைவிட் டகர்த்த ராகிக் கரண விருத்திக ளவத்தை காண்பராகி முத்தரா யிருக்க லுமாம் புசிப்புங் கூடும்" எனவுங் கூறினர்.



*(தா—ம்) தாமத ராசத நீங்குவதால், மந மிறந்து போ மெனவும், சத்துவ மிருப்பதாற், பிராரத்த போகம் புசிக்குங் காலத்திற், சுக துக்க முரு திருப்ப ராதலாற், சீவந் முத்தி கூடு மெனவும், சங்கைக்கு உத்தரகங் கூறி முடித்த தாம்.* 21

(அ—கை) சத்துவ மநம் பிராத்த கன்மப்படி விவகாரஞ் செய்யுங் காலத்திற், சமாதியா யிருத்த லெங்ஙனங் கூடு மென்று வினாதலு, மதற் குத்தரமுங் கூறல்.

விவகார வேளையெலாஞ் சமாதி யென்றல்,
　　விகற்பமன்றே மநமலைந்து விடாதோ விட்டால்,
அவதாந நழுவுமன்றே வென்ற யார்கி
　　லதற்கோருதிட் டாந்தங்கே ளாசை கோண்டு,
நவமாகப் பாபுருடன் றன்னைக் கூடி
　　நயந்தசுக மநுபவித்த நாரி நெஞ்சம்,
தவமாக மனைத்தோழில்கள் செய்யும் போதுந்
　　தழுவியநு பவித்தசுகந் தனைவி டாதே. 22

(ப—ம்) கட நிச்சயம் பண்ணுங் காலத்தில், பட நிச்சயம் நீங்குவது போல், பிராரத்த வசத்தால் விவகாரஞ் செய்யுங் காலத்தில், சொருப நா னென்னு ஞாந நிச்சயம் நீங்குமே யென்று னென்பார், "அவதாநம் நழுவு மன்றோ" வெனவும், பர புருடனை நச்சிய நாரிக்குத் தவத் தொழி லான கிரக கிர்த்தியத்தில் மறதியும், அவத் தொழி லான சோர புருடனைக் கூடி யுண்டான சுகத்தில் நினைப் புமா யிருத்தல் போல, ஞாநி பிராரத்த வசத்தாற் றொழிற் செய்யும் போதும், அதில் மறதியும், தா னடைந்த சொரு பாநந்தத்தி லழுத்தமு மான நினைப்புமா யிருப்பா ரென்பார், "நவமாகக் பரபுருடன் றன்னைக் கூடி நயந்தசுக மநுப வித்த நாரி நெஞ்சம் தவமாக மனைத் தொழில்கள் செய்யும் போதும் தழுவி யநுப வித்த சுகந்தனை விடாதே" யெனவுங் கூறினர்.

*(தா—ம்) சுத்த சத்துவ மநஞ் சொரூபாநந்தத்தில் அழுந்தி யிருப்பதால், விவகாரஞ் செய்யும் போதுஞ், சமாதி யாகவே யிருக்கு மென்ப தாம்.* 22

(அ—கை) அகண்டமா யகர்த்த ராகிய சீவன் முத்தர், கர்த்திருத்துவம் வராதபடிக்குப் பிராரத்த போகம் புசிக்கும் விதந் தெரியச் சீடன் வினுதலு, மதற் குத்தரமுங் கூறல், 'அவரிருக்கும்' அவர்களின் றன்மை யா தெனின்?



தேகத்த னலனாகி யகர்த்த னாகிச்
　　சீவனின்றிப் பிரமமாய்த் தெளிந்த முத்தன்,
போகத்தை யுண்பனென்றால் கருத்தா வாமே
　　பூரணமா மகர்த்தனுக்குப் போக முண்டோ,
சோகத்தை யறுத்தருளுங் குருவே யிந்தத்
　　துகளறுக்க வேண்டுமென்று சொன்ன யாகில்,
மாகர்த்தன் மாபோகி மாத்தி யாகி
　　வகைமூன்று யவரிருக்கும் மகிமை கேளாய். 23

(ப—ம்) உழ வாதி யிக லோக கிருத்தியம் செய்யு மநுடத்துவமும், யாகாதி பரலோக கிருத்தியம் செய்யும் சீவத்துவமு மின்றிச், சிரவணாதி மோட்ச கிருத்யஞ் செய் யும் முமுட்சுவத்துவமு மின்றி, அசல அக்கிரிய அமல அகண்ட சொரூபந் தா னாகி, அபரோட்சமா யறிந்த ஞாநிக் குக் கண்டத்துவமுங், கர்த்திருத்துவமு முண்டாக்கும் போ கத்தைப் புசித்தல் கூடா தென்று னென்பார், "தேகத்த னல னாகி யகர்த்த னாகிச் சீவ னின்றிப் பிரம மாய்த் தெளிந்த முத்தன் போகத்தை யுண்ப னென்றால் கருத்தா வாமே பூரணமா மகர்த்தனுக்குப் போக முண்டோ" வென்றார்.

*(தா—ம்) அகர்த்தா வான சீவன் முத்தர், போகம் புசிக்கிற் கர்த்திருத்துவம் வருமே, கர்த்திருத்துவம் இன் றெனிற், போகம் புசித்த லெங்ஙன் கூடும் என்னுஞ் சங்கைக் குத்தர மாகச், சீவன் முத்தர், மா கர்த்தன், மா போகி, மாத் தியாகியா யிருப்ப ராதலால், கர்த்திருத்துவம் வராது, போகம் புசிப்ப ரென அறிவித்த தாம்.* 23

(அ—கை) மா கர்த்த னிலக்கணங் கூறல்.

செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச்
　　சிலைமலைமுன் னிரும்புகள்சேட் டிக்கு மாபோல்,
செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்கு மென்முன்
　　சேடமான வுலகமெலாஞ் சேட்டை செய்யும்,

மெய்கலந்த விந்திரிய விகார ரூப
　　விவகார விருத்திக்கும் விருத்தி தானுய்,
மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சி யேநான்
　　வெயில்போலென் றுரைப்பவனே விபுமா கர்த்தன். 24

(ப—ம்) செய்தல் செய்வித்த லற்று, ஒன் ருயும், பெரி தாயு, மசை வற்ற தாயு மிருக்கும், காந்தக் கல் மலை முன், அய ஊசி முதலானது, சலித்தல் போலச், செய்தல் செய்வித்த லற்று, ஏக மாயும், பரிபூரண மாயும், நிர்விகார மாயும், சித் தாயு மிருக்கு மெனது சந்நிதியில், அநேக மாயும், கண்ட மாயும். விகார மாயுஞ், செட மாயு மிருக் கும் தேகாதிப் பிரபஞ்சந் தனக்குத் தானே தொழிற்படு கின்ற தென்று, திட நிச்சயத்துட னிருப்பவன், மா கர்த்த னென்பார், "செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்குங் காந்தச்சிலை மலை முன் னிரும்புகள் சேட்டிக்கு மா போற் செய்கையுஞ் செய்விக்கையு மற்றிருக்கு மென் முன் செட மான வுலக மெலாஞ் சேட்டை செய்யு" மெனவும் சூரியன் றனது சந்நிதியில்,, அல்லி முதலாயின குவித லுக்கும், தாமரை முதலாயின விரித லுக்கு, மெழுகு எண்ணெ யாதி யுருக லுக்கும், சேறு நெல் லாதி யுலர லுக்கும், மற்றும், மநுடர் முதலிய வுயிர்கள் சகல தொழிற் செய்கிற தற்கும், தொழிற் செய்யாது நித்திரை செய்தற்கும், சாட்சி யாய் யிருத்தல் போல், தேகம், வாக்காதி கன்மேந்திரியம், சுரோத்திராதி ஞானேந்திரியம், மந மாதி யந்தக் கரணங் களின் வேறுபாடான தொழிலுக்கும். விவகார மற்றிருக் கின்ற, சுத்த சத்துவ விருத்தியும், லயித்திருக்கும் சொரூப சமாதிக்கும், சாட்சியே நா னென்று திட நிச்சயத்துட டிருப்பவனே, மே லான மா கர்த்த னென்பார், "மெய் கலந்த விந்திரிய விகார ரூப விவகார விருத்திக்கும் விருத்தி தானுய் மெய்கலந்த சமாதிக்கும் சாக்ஷியே நான் வெயில் போ லென் றுரைப்பவனே விபு மகர்த்தன்" எனவுங் கூறினர்.



(தா—ம்) அத்வைத சின்மாத்திர மான வெனது சந்நிதியிற், றனக்குத் தானே நடக்கும் தேகேந்திரியாதிகளின் விவகாரங் களுக்கு, மிவைக ளிறந்து நின்ற ஞாந சமாதிக்கும், சர்வ சாட்சி நானென வென்று திட நிச்சயத்துடன், அவைகளோடு கூடியுங், கூடாது, சுக துக்ந மற்றிருப்ப வனே மாகர்த்த னென்ப தாம். 24

**(அ—கை) மா போகி, மாத் தியாகிகளி னிலக் கணங் கூறல்.**

அறுசுவையின் குணங்குற்ற மசுத்தஞ் சுத்த
　　மாத்தியம்பத் தியமெனவூ ணுய்ந்தி டாமற்,
பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போற்
　　போகங்கள் புசிப்பவன்மா போகி யாகும்,
சிறிதுபெரி துகன்தக் நியங்க ணன்மை
　　தீமைகள்சே ரினும்படிகச் செயல்போற் சித்தம்,
வெறிருக்து மவனேமாத் தியாகி யாவான்
　　விரதமிம்மூன் றுள்ளவபே வீடு ளோரே. 25

(ப—ம்) காடாக்கினி யானது சந்தந விருட்ச மென் றும், எட்டி விருட்ச மென்றும், பட்ட தென்றும், பச்சை யென்றும், பெரி தென்றுஞ், சிறி தென்றும், பகுத் துப் பாராமலும், தூர விருக்கும் பதார்த்தத்தில் எட்டிச் செல்லாமலும், எதை யெதைத் தகிக்கினும், அத னதன் சுபாவத்தை யடையாமலும், பரிசுத்தமா யிருத்தல் போலப், பரிபூரண ஆநந்த சொரூபத்தி லுண்டான, சராசரப் பிர பஞ்ச மெல்லாம் ஆநந்த சொரூபமே யென்று அநுபவத் தைப் பெற்றிருப்பதால், பிராரத்த வசத்தால் வர்த்தமாந காலத்தில், சாதி யாச்சிரமத்துக் குரித்தாய் வரும், யந்நாதி யருந்தல், வஸ்திராதி பொருந்தல், விடயங்களில் நல்ல தென்றும், பொல்லா தென்றும், உயர்ச்சி யென்றும், தாட்சி யென்றும், வேண்டு மென்றும், வேண்டா மென் றும், பகுத்துப் பாராமற் புசித்து, அத னதன் சுபாவத்தை

யடையாது, தன தாநந்த ரசமா யநுபவிப்பவனே, மா போகி யென்பார், "அறு சுவையின் குணங் குற்ற மசுத் தஞ் சுத்த மபத்தியம் பத்திய மென ஆணுய்ந்திடாமல், பொறுமை யுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போல் போகங்கள் புசிப்பவன் மாபோகியாகு" மெனவும், படிக மானது, பஞ்ச வர்ணத்தைப் பற்றியும், பற்ரு திருத்தல் போற், சகல சராசரப் பிரபஞ்சங்களும். சன் மாத்திர சொரூப மென்கின்ற அநுபவத்தைப் பெற்றிருப்பதால், பிட்சை யெடுத்தல், ராச்சிய மாளுதல், உழ வாதி, யாகாதி, சிரவணுதி செய்தல், கூழாதி, பாயாச வந்நாதி. கம்பிளி யாதி, பட்டு வஸ்திரங்கள் வரினும், இவைகளிற், றன் னுடையது வரினும், அயலா ருடையது வரினும், நன்கா யுள்ளது வரினும், தீங்கா யுள்ளது வரினும், அவைகளை யோர் பொரு ளாக மநத்திற் பற்ருது, சன் மாத்திர மாகக் கண்டு இருப்பவனே, மாத் தியாகி யென்பார், "சிறிது பெரிது தன தன்னியங்க ணன்மை தீமைகள் சேரினும் படிகச் செயல்போற் சித்தம் வெறிதிருக்கு மவனே மாத் தியாகி யாகு மெனவும், சாந்திராயண முத லாகிய வெவ் வித விரத மநுட்டித்த போதிலும், மா கர்த்தத்துவம், மா போகித்துவம், மாத் தியாகித்துவ மாகிய இம் மூன்று விரத மில்லாதாற்குப் பந்த நீங்கா தென்பார். "விரத மிம் மூன் றுள்ளவர்கள் வீடுளோரே யெனவுங் கூறினர்,

(வி—ம்) சரீராதிப் பிரபஞ்ச மெல்லாம் மித்தை யென்றுஞ், சச்சிதாநந்த பரிபூரணப் பிரமமே தா னென்று. மபரோட்சமா யறிந்த ஞாநிகள், விதி நிடேத மன்றி, வேண்டிய வண்ணம் புசிக்கலா மெனச் சுருதிகள் கூற வும், சாதி யாச்சிரமத்துக்கு குரித்தானதை மட்டும் புசிப் பார் என விதி கூறிய தென் னெனின், ஞாநிகளானலும், மாம் பழ மாதியிற் கொட்டை யாதியை நீக்கிப் புசித்த லும், முருங்கைக் கா யாதியிற், சக்கை யாதியை நீக்கிப் புசித்தலும், பகுக்கின்ற புத்தி யிருக்கின்ற வரைக்கும்,சாதி யாச்சிரமத்துக் குரித் தானதைப் பகுத்தே புசிக்க வேண்டு



மாதலாலும், இந்தப் பிரகாரம் மகா ராமாயண மாகிய வாசிட்ட முப் பத் தீ ராயித்திற் கூறி யிருப்பதாலும், இங்ஙனங் கூற லாயிற்று.

*(தா-ம்) அகண்டாநந்த அநுபவத்தினல், அருந்தல், பொருந்த லான சகல விடயத்திலும், வேறுபாடற்று, அவைகளைத் தன தா நந்த ரச மென்னுந் திட நிச்சயத்துடன், அநுபவிப்பவனே, மா போகி யெனவும், அத்துவித சிந் மாத்திர வநுபவத்தினற், சராசரப் பிரபஞ்சங்களைத் தனக் கய லல்ல வென்னும் நிச்சயத்துடன் சித்தத்தி லொன் றுஞ் சிந்தியா திருக்கின்றவனே. மாத் தியாகி யெனவும், இவ் விரதத் திரய முடையோரே, முத்தி பெறுவ ரெனவுங் கூறின தாம்,* 25

(அ—கை) கிருத கிருத்திய விலக்கணந் தெரியும் பொருட்டுச், சீட ேஞர் சங்கை விஞதல்.

மெய்யுங் கோண்டுபி ராரத் தந்தரு விதிவீழ் நின்றிடவும்,
உய்யுங் கன்மிக ளுக்கநு தணமா யுறுதொழில் செய்திடவுந்,
செய்யுஞ் செய்கைழ டிந்தவ னென்றுரை செப்புவ தெப்படியோ,
நையுந் துன்பம கற்றிய குருவே நலமா யருள்வீரே. 26

(ப—ம்) நிடேத கன்மத்தை விட்டுப், பரம்பரை யாய், மோட்ச மடைவதற் கேது வான. நித்திய நைமித்தி யாதி கன்மமும், பிரமாதி தேவ வுபாசனையும், வேதாந்த சாஸ்திர சிரவணுதியும், செய்பவர்க ளென்பார், "உய்யுங் கன்மிக" ளெனவும். தாபத் திரய துன்பங்களை நீக்கிப், பிரமாநந்தங் கொடுத்த வாசிரியரே யென்ரு னென்பார், "நையுந் துன்ப மகற்றிய குருவே" யெனவுங் கூறினர்.

(வி—ம்) 'மெய்யு' மென்ற பதத்துக்குக். காரண வஞ்ஞாநந் தெரியாமற் பொய்யாவதைக் குறித்துக், காரிய தேகத்துக்குக் மெய் யெனப் பெயர் வந்த தெனக் கொள்க.

(தா—ம்) தொழி லுண்டாக்கும்படி யான தேகமும், பிராரத்த கன்மமு முடைய சீவந் முத்தர், விவகாரம் பண்ணிக் கொண்டிருக்கவும், அவரை யெங்ஙனங் கிருத கிருத்திய ரெனலா மென ஆசிரியரை வினவின தாம். 26

(அ—கை) அவ் வினுவிற் குத்தரங் கூறல்.

ஆடவர் செய்தொழின் மூவகை யாதும வித்தைவ சத்துறுநாள்,
ஈடணை மமதைய கந்தையு ளார்க்கே யிகபர விவகாரம்,
வீடணுத வமெனு மிச்சையு ளார்க்கே வித்தைப டிப்பதெலாம்,
பாடன்மி குந்தொழி லாற்பல னுண்டோ பரிபூ ரணமானல். 27

(ப—ம்) அஞ்ஞானத்தைப் பொருந்தி யிருக்கிற காலத்தில். தேக இந்தியாதி தா னென்றும், பிரபஞ்சம் சத்தியம் என்றும், மண் பெண் பொன்னு யுட னிருப்பவரில், மநுடத்துவ முடையோருக்கு, அநிட்ட மாகிய வியாதி, தரித்திரம், பகையை நீக்கி, யிட்ட மாகிய இக லோக சுகம் பெறும் பொருட்டு, இக லோகத் தொழி லாகிய, உழவு தொழவு வரைவு வாணிபம் சிற்பம் வித்தை யாகிய ஆறு வகையி, லெதிலேனும் நல் முயற்சியா, யிடம் பொருள் ஏவல் சம்பாதித்தலும், சீவத்து முடையோருக்கு, அநிட்ட மாகிய நரக துன்ப நீங்கி, யிட்ட மாகிய சொர்க்க மடையும் பொருட்டுப், பர லோகத் தொழி லாகிய யாக தாநாதி செய்து புண்ணியஞ் சம்பாதித்தலும், உளவா மென்பார், 'அவித்தை வசத்துறுநா ளீடணை மமதை வகந்தையுளார்க்கே யிகபர விவகார' மெனவும், அஞ்ஞாநாந்தத்திற் பிரபஞ்சம் பொய் யென்றும், பிரமஞ் சத்திய மென்றும், பரமோட்ச மடைய வேண்டு மென்றும், இச்சையுடன் முமுட்சுத்துவ முடையோருக்கு, அநிட்ட மாகிய செநநமரணத்தை நீக்கி. யிட்ட மாகிய பிரமாநந்தத்தை யடையும் பொருட்டு மோட்ச கிருத்திய மாகிய ஞாந சாஸ்திர சிரவண மாதி செய்து, தத்துவ ஞாநம் சம்பாதித்த லுளவா



மென்பார், 'வீ டணுகுவ மெனு மிச்சையு ளார்க்கே வித்தை படிப்ப தெலா' மெனவும், மநுடன், சீவந், முமுட்சுவா யிருப்பவர், செய்ய வேண்டிய, இக பர மோட்ச கிருத்தியத்தி லொன்றையும், பரிபூரணப் பிரம சொருபமா யிருக்கும் ஞாநிகள் செய்ய வேண்டிய தில்லைப் பிராரத்த வசத்தினுற் செய்யினும், அவர்க ளதனுற் பய னடைபவ ரல்லர். ஆனபடியால், அவர் செய்ய வேண்டிய தெல்லாஞ் செய்து முடிந்தவ ரென்பார், 'பாடன் மிகுந் தொழிலாற் பல னுண்டோ பரி பூரணமானு' லெனவுங் கூறினர்.

(தா—ம்) அஞ்ஞாந தசையி. லிக பர விவகாரங்களும், முமுட்சு தசையிற், சிரவணுதி விவகாரங்களும் உள வாம், சீவந் முத்தித் தசையிற் பல வியாப்தி யின்றி, விருத்தி வியாப்தி யாக, விவகாரங்களைச் செய்தலின், அவையும் செய்துஞ் செய்தில ரென்ப தாம். 27

(அ—கை) சீவந் முத்தருக்குச் சிரவணுதி தேவை யில்லை யென்ற துறுதிப்படும் பொருட்டுச் சீடன் வினவுதல்.

தூவர்சி காமணி யேகே ளீர்நீர் கூறின வழியொக்குர்,
பாமுட னிகழுமி ழந்தவ ரன்றோ பழகுவர் மெய்ஞ்ஞாநம்,
விரவுழ யர்ச்சியின் மீண்டவ ரதையினி வேண்டுவ ரோவேண்டார்,
சிரவண மநநா திகள்வேண் டாவோ சித்தழ றைத்திடவே, 28

(ப—ம்) இக லோக, பர லோக, சுகத்தை யிச்சித்து, உழ வாதி, யாகாதி செய்பவர், சிரவணுதி யாகிய ஞாநாப்பியாசஞ் செய்யா ரென் பார், 'பரமுடனிகமு மிழந்தவ ரன்றோ பழகுவர் மெய்ஞ் ஞாந' மெனவும், பரங்கி (கிறிஸ்தவர்) கையி-லகபட்டு, அவனை நீங்கின பிராமணன், மறுபடி அவனைச் சேராது, அவனைக் கண்டா லோடுவது போல,

இக லோக, பர லோகத் தொழிலைச், செநந மரணந் தருவ தென்று கருதி நித்தியாநித்திய வஸ்து விவேக முதலிய சாதந சதுட்டயத்தை யடைந்து, அத் தொழில்களை விடுத் துச், சற் குருவை யடைந்து, சிரவணுதி செய்பவர், மோட் சந் தருவ தாகிய அச் சிரவணுதியை விடுத்து, மீண்டும் துன்பந் தருவ தாகிய, அவ் வுழ வாதி, யாகாதி தொழிலிற் செல்லா ரென்பார், 'விரவு முயர்ச்சியின் மீண்டவ ரதை யினி வேண்டுவரோ வேண்டா' ரெனவும், நாட்டிய கம்பம் (கழி) திடப்படும் பொருட்டுக் குத்திக் கிட்டித்தல் போல், ஆத்ம சொருபத்தை யறிந்து மநது அதிற் றிடப்படும் பொருட்டுச், சிரவணுதி செய்ய வேண்டுமே யென்ரு னென்பார், 'சிரவண மநநாதிகள் வேண்டாவோ சித்த முறைத்திடவே' யெனவுங் கூறினுர்.

*(தா—ம்) சீவந் முத்தருக்கு, இக லோக, பர லோக விவ காரம் வேண்டாதது போல், சிரவணுதியும் வேண்டாவோ வென வினுவின தாம.*

28

**(அ—கை) அவ் வினுவுக் குத்தரம்.**

கிளர்மக னேகேள் தத்துவ மறியார் கேட்டல்செ யக்கடனே,
தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களுளார்,
தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனையோர்,
வெளியுரு வாயறி வாயுரு வாயினர் வேண்டுவ தோன்றுண்டோ. 29

(ப—ம்) ஆத்ம ஞாநத்தைப் பெற்று, அதனுல் ஆத்ம சொருப மாய் விளங்குகின்ற சீடனே யென்பார், 'கிளர் மகனே' யெனவும், திதி நட்சத்திராதி யறியாதவன், பஞ் சாங்கம் பார்க்க வேண்டுவது போல், ஆத்ம சொருபத்தை யறியாதவர்கள், சிரவணஞ் செய்ய வேண்டுவதே தவிர, நித்திய சத்து ரூப மான ஆத்மாவே தா னென் றறிந் திருக் கும் ஞாநிக்கு, அச் சிரவணந் தேவை யில்லை யென்பார், 'தத்துவ மறியார் கேட்டல் செயக்கடனே' யெனவும், பொன்னி னுடைய மாற்று நிர்ணயந் தெரியாதவன், ஆணி யைத் துறைத்துப் பார்த்தல் போல. ஆத்ம சொருபத்தை யபரோக்ஷமா யறியாத தனுலே சமுசய முடையோருக்குத், துக்கம் நீங்கும்படி யான மநநம் பண்ண வேண்டுமே தவிர, நித்திய சித்து ரூப மான ஆத்மாவே தா னென் றபரோட்ச மா யறிந் திருக்கும் ஞாநிக்கு, அம் மநநந் தேவை யில்லை யென்பார், 'தளர்வறு சிந்தித்தலின் முயல் வார் சிலர் சந்தேகங்க ளுளா' ரெனவும், திக்குப் பிரமை கொண்டவன் எதார்த்தைச் சிந்தித்துத் தெளிந்து கொள்ள வேண்டியது போல், ஆத்ம சொருபத்தை, அப்பிரதிபந்த அபரோட்சமா யறியாததனுலே தத்துவ ஞாநத்தா லன்றி, மற் றென்றினுலும், நீங்காத, காமாதி வாசனையால், அச் சீவேசுர சகத் தாகிய பிசாசந் தோற்றுவிக்கும் விபரீத மாகிய பேத புத்தி நீங்காதோருக்கு, நிதித்தியாசநஞ் செய்ய வேண்டியதே தவிர, நித்திய பூரணுநந்த சொருப மான ஆத் மாவே தா னென்று, அப்பிரதிபந்த அபரோக்ஷ மா யறிந் திருக்கின்ற ஞாநிக்கு, அந் நிதித்தியாசநந் தேவை யில்லை யென்பார், 'தெளிதலி னிற்பார் விபரீதப் பேய் தீரா வாதனை யோர்' எனவும், சடமா யிருக்கின்ற பூதாகாயஞ், சங்கற்ப விகற்பமா யிருக்கின்ற மநாகாயம், அறியாமை வடிவா யிருக்கின்ற அவ்வியத் தாகாய மான இவைகளுக்கு மேலான தாய், உற்பத்தி நாச மற்ற தாய், நிரவயவ மாய்ச், சூட்சும மாய், அமூர்த்தமா யிருக்கின்ற பராகாய மாயும், இந்திரிய ஞாந. மந்தக்கரண ஞாநஞ், சீவ ஞாந, மீசுர ஞாநங்களுக்கு, மே லான ஞாந சொருப மாயும், ஆநந்த மய மாதி பஞ்ச கோச முதலானதனுற் பூரிக்கப்பட்டிருக்கின்ற சகல பிர பஞ்சத்திலும், எங்கு நிறைந்திருக்கின்ற ஈசுரனையும், பூரித்த பரிபூரண ராயு மிருப்பவ ரென்பார், 'வெளி யுருவா யறிவா யுருவாயினர்' எனவுங் கூறினுர்.

(வி—ம்) 'நிறைவர்' யென்ற பதத்துக்குப், பிராண மய கோசத்தினுற், பூரிக்கப்பட்டிருக்கின்ற அந்ந மய கோ

சம், மனோ மய கோசத்தினுற், பூரிக்கப்பட்டிருக்கின்ற பிராண மய கோசம், விஞ்ஞாந மய கோசத்தினுற், பூரிக்கப் பட்டிருக்கின்ற மனோ மய கோசம், ஆநந்த மய கோசத்தி னுற், பூரிக்கப்பட்டிருக்கின்ற விஞ்ஞாந மய கோசம், சிதாபாசனுற், பூரிக்கப்பட்டிருக்கின்ற இப் பஞ்ச கோசங் கள். இவைகளாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற பஞ்ச பூதங்கள். இவைகளாற் பூரிக்கப்பட்டிருக்கின்ற சூட்சும காரணப் பிரபஞ்சங்கள். இவைகளிலும், எங்கும் நிறைந்த மாயா விசிட்டரையும், பூரித் திருப்பதால், பரிபூரண மெனக் கொள்க.

*(தா—ம்) அஞ்ஞாநாதி யுள்ளவருக்கே, சிரவணுதி செய்ய வேண்டும், அகண்டாகாச போத சொரூபமா யிருக்கின்ற ஞாநிகளுக், கவை வேண்டுவன வல்ல வென்ற தாம்.* 29

**(அ—கை) விவகார நீங்கி யிருக்கின்ற சீவந் முத் தருக்கு, எங்ஙனம் விபரீத முண்டாதல் கூடு மெனச் சீடன் வினுதல்.**

அய்யா கேளீர் தத்துவ ஞாநியு மஞ்ஞா நிகள்போலே,
செய்யா நின்றேன் கண்டே னுன்டேன் சென்றே னெனலாமோ,
பொய்யாம் விபரீ தங்கள வர்க்குப் போயின வென்றீரே,
மெய்யாம் பிரமவி கிாரமி தன்றே வெனியா யுரையீரே. 30

(ப—ம்) பழுதையை யறியாதவனுக்குப் பாம்பு, தண்டம், மாலை, மெய்யாய்த் தோற்றினும், விசாரித்தா லவை பொய்யாய்ப் போதல் போல, மெய்யான பிரம சொரூ பத்தை யறியாதவனுக்குப், பிராந்தியினுலே மெய் போற் ருேற்றி, விசாரிக்கில், பொய்யாய்ப் போகின்ற சீவேசுர செகத் தோற்ற மென்பார், 'பொய்யாம் விபரீதங்க' ளென வும், நான் அக்கிரியன், நான் அபோக்தா, நா னசலன், நா னகண்டன், நா னமல னென்ற முக்கிய வசுங்கார மாய்



வசநிக்குஞ், சத்தியமா யிருக்கிற பிரம சொரூப விவகாரமு மல்லவே, நான் கண்டே னென்பது முதலான விவகார மென்பார், 'மெய்யாம் பிரம விகாரமி தன்றே' யெனவுங் கூறினுர்

(வி—ம்) 'விவகார'மென்பது, விகார மென நடுக்குறை யாய் வந்த தெனக் கொள்க.

*(தா—ம்) சீவந் முத்தன், அஞ்ஞாநிகளைப் போல், விவகரிக் கின். அவர்களுக்கு, விபரீத மெங்ஙன நீங்கிற் றென வினுவின தாம்.* 30

**(அ—கை) அவ் வினுவிற் குத்தரங் கூறல்.**

'ஆகான்'—விவகாரம் பொய்யாளுலும், அவை நீங்க வேண்டாவோ வெனில்?

ஓய்ந்தக நாவிற் கண்டப ழங்கதை வேர்துவன் வாதனையால்,
ஆயந்தறி வுற்றவ னப்படிச் செப்புவ னுபா சனுமாதர்ன், [வான்,
மாய்ந்ததன் னுடன்வே மளவும் விண்ணவன் மனிதனே னப்படு
வியந்தசி தாபா சன்போ மளவும் விவகா ரந்தோட்நும். 31

(ப—ம்) சொப்பநத்தில், யாகாதி, கொலை யாதி, செய்த தாய்க் கண்டு விழித்தவன், அவைகளைச் செய்தே னென அந்நியரிடத்திற் கூறினும், அவன் மநதில், 'அவற் றைத் தான் செய்ய வில்லை' யென் றிருப்பது போலப், பிரம சொரூபத்தில் விவர்த்த மாய்த் தோற்றிய தேகாதிப் பிரபஞ்ச மெல்லாம், சூரியன் முன்னர் தோன்றும் கானற் சலம் போல, மித்தை யென்று விசாரித்து, அவ் வண்ண மறிந் திருக்கின்ற தத்துவ ஞாநி யானவன், உலகத்தாருடன் வாக்கு மாத்திர மாய்ச், செய்தேன், கண்டேன், புசித்தே னெனக் கூறினும், மநதிற் ருன் அங்ஙனஞ் செய்ய வில்லை

யென்று நிச்சயத்துடன், சீவத்துவ நீங்கிச் சிவ சொரூபமா யிருப்பா ரென்பார், 'ஓய்ந்த கநாவிற் கண்ட பழங் கதை யோதுவன் வாதனையா லாய்ந்தறி வுற்றவ னப்படிச் செப் புவ னுபாசனு மாகான்' எனவும், கெங்காப் பிரவேச முத லான தாரம்பித்தவனைத் தேவ னெனப் பூசிக்கினும், அத் தேகம் நீங்கும் வரை மனித னென விவகரிக்கின்றது போலத், தத்துவ ஞாநம் வந்தவுடன், அகர்த்தா, அபோக்தா, அசல அறிவான பிரம மென் றிருந்தாலும், விதேக முத்தி வரைச் செய்தே னெனல் முதலிய விவகாரம் விட்டு நீங்கா தென்பார், 'மாய்ந்த தன் னுடல் வேமளவும் விண்ணவன் மனித னெனப்படுவான் வீய்ந்த சிதாபாசன் போ மளவும் விவகாரந் தொடரு' மெனவுங் கூறினர்.

*(தா—ம்) சொப்பநத்திற் கண்ட கற்பிதத்தைச் சாக்கிரத்திற் பொய் யாய்க் கண்டு கொண்டு சொல்வது போல, அஞ்ஞாந தசை யிற், சத்திய மாய்க் கருதிச் செய்த, உலக விவகாரத்தையும், ஞாந தசையில், மித்தையாய்க் கண்டு செய்யும் விவகாரத்தையும், முக்கியா முக்கிய வகங்காரத்துடன் சொல்வதே யன்றி, யுண்மை யன் றெனி னும், விவகாரம் விதேக முத்தி பரியந்தம் விட்டு நீங்கா தென்ப தாம்.*

31

**(அ—கை)** சீவந் முத்தருக்கு விவகாரமும், சமாதி யும், வேண்டு மென்பதும், வேண்டுவ தல்ல வென்ப தும், அறியச் சீடன் வினுதல்.

ஆனு லய்யா குருவே காண்பத சத்திய மென்றாலும்,
நாநா விவகா ரந்துய ரலவோ ஞாநசு கந்தருமோ,
போனு லன்றே நன்ற நிட்டைபு ரிந்திட வேண்டாமோ,
தானு நிட்டைபு ரிந்தாற் செய்கைத விர்ந்தவ னெப்படியோ. 32

(ப—ம்) பழுதையிற் றேன்றும் பாம்பு மித்தை யானு லும், அதைப் பார்த்த புருடனுக்குப் பய கம்பநாதி துன்ப முண்டாதல் போலப், பிரமத்தில் விவர்த்த மாய்த் தோற் றும் பிரபஞ்சம் மித்தை யானுலும், அந்த மித்தை யான பிரபஞ்சத் தொழில் செய்யும் போது, தாபத் திரய துன்ப முண்டாகு மென்பார், 'காண்ப தசத்திய மென்றுலு நாநா விவகாரந் துயரலவோ' வெனவும், விவகாரஞ் செய்யும் போது விடயாநந்த முண்டாகுமே யன்றிப், பிரமாநந்த முண்டாகாதே யென்பார், 'ஞாந சுகந் தருமோ' வெனவும், நடக்கின்ற புருடனுக்கு அந் நடை நீங்கினுலே சுக முண் டாவது போல, விவகாரத்தை விட்டாலே சுக முண்டாகு மென்பார், 'போனு லன்றே நன்று' யெனவும், அப் புரு டன் சுக மடைவதற்கு ஓரிடத்தி லிருக்க வேண்டுவது போலப், பிரம சுக மடைவதற்குச் சமாதி யிருக்க வேண் டுமே யென்பார், 'நிட்டை புரிந்திட வேண்டாவோ' வெனவும், செயிக்க வேண்டியதா போர் சீமையாவ திருக் கிற தென்று படை யெடுத்துச் செல்வோன், சகல சீமை யுங் கைவசப் படுத்திக் கொண் டிருக்கும் சார்வ பௌம னுன மகா ராசா வாகாதது போல, விவகார நீங்க வேண்டு மென்று சமாதி யிருப்பானே யாகில், கிருத கிருத் திய னுகானே யென்பார், 'தானு நிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படியோ' வெனவுங் கூறினர்.

*(தா—ம்) துக்க ரூப மான விவகாரத்தை நீக்கிச் சுக மடை யும் பொருட்டுச் சமாதி யிருக்க வேண்டுமே யெனவும்; சமாதி யிருக்கில், எங்ஙனம் கிருத கிருத்திய னுவா னெனவும், வினுவின தாம்.*

32

**(அ—கை)** அவ் வினுவிற் குத்தரம், 'உண்டோ' **அ—கை - வேணு மென்று செய்கிருர்களே யெனில்.**

தெரிதரு மகனே யாரம் பத்தொடு தீரும் விவகாரம்,
உரியதி யாநமும் விவகா ரங்களு முள்ளத் தொழிலன்றே,
துரியப ரம்பொரு ளானவர் வேறெரு தொழில்செய் வதுமுண்டோ,
அரியச மாதிகள் பழதுவ னேலவ னுரு டனுமன்றே. 33

(ப—ம்) கற்பித மான தேகாதிகளைத் தா னென் றறியாது, சர்வாத்மக மாய்ச் சச்சிதாநந்த மான பிரம சொருபத்தைத் தா னென் றறிகின்ற சீடனே யென்பார், 'தெரிதரு மகனே' யெனவும், உபாதி யுள்ள வரைக்கும் பிரதிபிம்பம் நீங்காதது போலச், சஞ்சித கன்மத்தினின்று மாரம்பித்த பிராரத்த கன்ம தேகம் நீங்குகிற வரைக்கும் தொழில் விட்டு நீங்கா தென்பார், 'ஆரம்பத் தொடு தீரும் விவகார' மெனவும், ஒரு புருடன் செய்யும் கொலை யாதி துர்க்கிருத்தியமும், யாகாதி சத் கருமமும், அதைப் பார்த்திருக்கின்றவன் செய்யத்தகாதது போற், சங் மாத்திர சர்வ வியாபக சர்வ சாட்சி சொருப மான ஞாநிகள், செய் தது போற் றோன் றினும், துக்கத்தை யுண்டாக்குங் காரண மான விவகாரமும், ஞாந சுகத்தை யுண்டாக்குங் காரண மான நிருவிகற்ப சமாதியும், அவர்கள் அந்தக் கரண கிருத்தி யமே யன்றி, அவர்கள் செய்வ தல்ல வென்பார், 'உரிய சமாதியும் விவகாரங்களு முள்ளத் தொழி லன்றோ துரிய பரம் பொரு ளானவர் வேறொரு தொழில் செய் வது முண்டோ' வெனவும், சுருதிகள் கூறுவது மன்றி, யுலகத் தாரும் எவ் வித அரிய வித்தைகளிலும் மேலான தென்று சொல்வ தாயு, மிகுந்த வருத்தத்தால் அடைவ தாயு மிருக் கின்ற பிரம வித்தை யென்பார், 'அரிய சமாதி' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) பிராரத்த கன்ம முள்ள வரை விவகார முளவா மெனவும், விவகாரமும், சமாதியும், அந்தக் கரணச் செயலே யன்றி, அதை யறிந்திருக்கின்ற ஞாநிகள் செய லன் றெனவும், சுகத்தை விரும்பி நிருவிகற்ப சமாதி செய்வா னாகில், அவன் அப்பியாசி யெனவுங் கூறின தாம்.*

33

(அ—கை) ஆருடர்களிலும், சிலர் சமாதி முதலிய வற்றைச் செய்வ தென் னென விஞதலு, மதற் குத் தரமுங் கூறல்.



உத்தம குருவே யாரு டனுமா யொருதொழி லற்றவருந்,
சித்தம டங்குதி யாநா திகள்சிலர் செய்குவ தேன்னென்றல்,
இத்தல மருவும் பிராரத் தப்பிறி வெப்படி யப்படியே,
முத்தரும் வேதவித மாதவ ரென்பது முன்னே சொன்னேனே. 34

(ப—ம்) நிசித குரு. காமிய குரு, போதக குரு, வேதக குரு, சூசக குரு, வாசக குரு. காரக குரு வாகிய விவர்களுக்கு மே லான விகித குரு வென்பார் 'உத்தம குருவே' யெனவும், மநோ லய முண்டாகச் செய்கின்ற வேதாந்த சாஸ்திர சிரவணமும், மநந நித்தியாசநமும், சாது சங்கமும், வாசநா க்ஷயமும், பிராண நிரோதமு மென்பார், 'சித்த மடங்கு தியாநாதிக' ளெனவும், பிரமா திக ளாஞலும், பிராரத்த அமைப்புப்படி யிருப்பார்களே தவிர, அதை விலக்கி யிரார்க ளென்பார், 'இத்தல மரு வும் பிராரத்தப் பிறி வெப்படி யப்படியே' யெனவுங் கூறினர்.

(வி—ம்) 'முன்னே சொன்னே' னென்பது. முற் படலம் 97-வது, 'பேத கன் மத்தா' லென்ற கவியிற் கூறி யதை யெனக் கொள்க.

(வி—ம்) 'சித்த மடங்கு தியாநாதி' யென்ற பதத் திற்கு, அத்தியாத்ம சாஸ்திரத்தை யநவரத மன்புடன் சிர வணஞ் செய்யி லிவ் வத்தியாத்ம வித்தையானது, திரிசிய முழுவது மித்தை யென்றுந், திருக்கா யிருக்கிற பிரத்திய காத்மா சொப்பிரகாச ரென்று, மறிவிக்கிறபடியினல், மந தானது தனக்கு விஷய மான திரிசியத்திற் பிரயோசந மில்லை யென்றும், பிரயோசந முள்ள பிரத்திய காத்மா வைத் தான் விஷய மாகப் பண்ணிக் கொள்ள யோக்கிய மன் றென்றும், விவேகத்தா லறிந்து, விற கில்லாத வக்கினி யோற், றனக்குத் தானே யுபசாந்தியை யடையு மென வுங், தனித் தோரிடத்தி லிருந்து தகுந்த யுத்திகளுடன்

செய்யு மநநத்தா லுஞ், சந்ததஞ் சசாதீய விருத்தியுடன்
செய்யுந் தியாநத்தா லு, மக்கிநியில் மிகுந்த செலம்
விட்டா லணைவது போல, மநது லய மாகு மெனவும்,
சா துக்களைச் சேர்ந்தா லவர்க ளாத்ம சொரூபத்தை யடிக்
கடி யநேக யுத்திகளுடன் பிரதிபாதிப்பவர்க ளாதலா,
லதைக் கேட்டுக் கொண்டு, வெகு கால மிருந்தாற், குழவி
யின் சத்தத்தை வெகு நாட் கேட்ட புழுவி னுருவங் கெடு
வது போல, மநது தனக்குத் தானே யடங்கு மெனவும்,
மைத்திரியாதி வாசனையைப் பழகிக். காமாதி வாசனைகளை
நீக்கினு, லவுழ்தஞ் சாப்பிட்டு ரோகத்தை நீக்கித் துன்
பத்தை நீக்குவது போல, மநது சாந்த மாகு மெனவும்,
ரேசக பூரக கும்பகங்களாற், பிராண சலந நிரோதஞ் செய்
யில் விரையைக் கெடுத்தால் முளை கெடுவது போல, மநது
லய மாகு மெனவுங் கொள்க.

*(தா—ம்) ஆருடன் ளுழில், பிராரத்த கன்ம மென வறிக வென்ப தாம்.* 34

(அ—கை) ஆசிரிய ரவ் வினுவிற்கு, வேறொரு பிரகாரமா யுத்தரங் கூறல்.

நல்லவ னேகே ளுலதுப கார ஞாநிகள் விவகார,
மல்லது வேறெரு பெறுபே றும்மிலை யதனுற் பிணியுமிலை,
வல்லசி ருட்டிமு தற்பல தொழிலால் வருபுண் ணியபாவ,
மெல்லவ நுக்கும நுக்கிர கஞ்செயு மீசன டைந்திலனே. 35

"பிணியு மில்லை" அ—கை— அத் தொழிலாற் புண்ணிய பாவ மில்லையோ வெனில்.

(ப—ம்) பரிபூரண சொரூபத்தைத் தானு யறிந் திருக்குஞ் சீவந் முத்தர்கள், சருவ காமாத்தியைப் பெற்றிருப் பதா, லவர்கள் செய்யும் விவகார முயிர்களுக் கநுகூல



நிமித்தமே யன்றி, யவர்களுக் கோர் லாபத்தின் பொருட் டன்று, அச் சீவந் முத்தர்கள், சகல பிரபஞ்சத்தையு மித்தை யாகக் கண்டிருப்பதால். விவகாரத்தா, லவர்களுக் காநியு மில்லை யென்பார், 'உல குபகாரம் ஞாநிகள் விவ கார மல்லது வே றொரு பெறு பேறு மிலை யதனுற் பிணியு மில்லை' யெனவும், நன்மை தீமை செய்யு, மாண் பெண் ணலி யான உயிர்க ளனைத்திற்கு மிதஞ் செய்கின்ற விறை வன், உயிர்களுக்குச் சுகந் தருவ தாகிய சிருட்டியு, மிதத் திதியு, மநுக்கிரகமுஞ், செய்கின்றதனுற் புண்ணியத்தையு, மவ் வுயிர்களுக்குத் துக்கந் தருவ தாகிய அகிதத் திதியுஞ், சம்மாரமுந், திரோபாவமுஞ், செய்கின்றதனுற் பாவத் தையு. மடைகின்ற தில்லையே யென்பார், 'வல்ல சிருட்டி முதற் பல தொழிலால் வரு புண்ணிய பாவ மெல்லவருக்கு மநுக்கிரகஞ் செயு மீச னடைந்திலனே' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) ஆருடர் செய்யுந் தொழி லுயிர்களுக் குபகார மாவதே யன்றி, யவ் வாரூடருக் காநி லாபத்தை யுண்டாக்கா தென வும், ஈசுவரனைப் போல, ஞாநியு நன்மை தீமை யான விவகாரஞ் செய்வதாற், புண்ணிய பாவத்தை யடையா னெனவுங் கூறின தாம்.* 35

(அ—கை) 'ஞாநவா னீசனுக் கொப்பாவ' னெனக் குறிப்பாற் கூறிய ஆசிரியரை நோக்கி, 'யெங்ஙன மொப்பாவ' னென வினுதலு, மதற் குத்தரமுங் கூறல்.

ஈசனு மாயரு வாயுரு வாகியெ ழுந்தரு ளுங்குருவே.
யீசனு ஞாநியு மொப்பென் றீரே யெப்படி யொப்பென்று,
வீசனு ஞாநியு மமதைய கந்தையி கழ்ந்ததி னுலொப்பா,
மீசனு மாம்பல சீவனு மாழல கெல்லா மிவனுமே. 36

(ப—ம்) மநமுத லான ஆறிந்திரியத்தினுலு, மறியப்படாத தாயு. மசரீர மாயு, மசல மாயு, மகண்ட மாயு. மத்துவிதமாயு மிருக்கவும், பேரருளினுலே, நெய் யிளகல் தடித்தது போற், பிரம விஷ்ணு ருத்திர ருகிய மும் மூர்த்தியாகி, யென்போலிகட் கதிட்டாந சொருபத்தைத் தரிசிப்பித்து ரட்சிக்கும் பொருட்டு, மானைக் காட்டி, மான் பிடிப்பது போல, மாநுடச் சட்டை சாத்தி யெழுந் தருளிய ஆசிரியரே யென்பார், 'ஈசனுமா யருவாயுருவாகி யெழுந்தருளுங் குருவே' யெனவும், மகா ராசாவும், மணியகாரனுஞ் சமாந மாகாதது போல, மகத்தாயிருக்கின்ற வீசுரனு, மற்பமா யிருக்கின்ற தத்துவ ஞாநியுஞ், சமாந மாகாரே யென்பார், 'எப்படி யொப்' பெனவும், அதிட்டாந மான பழுதையைத் தவிர, ஆரோபமான சர்ப்ப தண்ட மாலை வே றல்லாதது போல, அதிட்டாநப் பிரம மா யிருக்கும் ஞாநியைத் தவிர, ஆரோப மான சீவேசுவர செகத்து அந்நிய மல்ல வென்பார், 'ஈசனு மாம் பல சீவனு மா முல கெல்லா மிவ னுமே' யெனவுங் கூறினுர்.

(தா—ம்) தேகாதி சகத்தில், எனது, யா னென்னும், புத்தி நீங்கி யிருக்கின்ற தன்மையால், அறிஞனு மொப்பாவ ரெனக் கூறி, யவ் வறிஞனே சீவேசுர செகத் தாகவும், விளங்குவா னெனக் கூறின தாம். 36

(அ—கை) அறிஞ னெங்ஙனஞ் சகல சீவர்களுமாக விளங்குவா னென வினுதல்.

எல்லாச் சீவனு மிவனு மென்றி ரிவன்றன் முத்தியடைந்,
தெல்லாச் சீவனு முத்திபெ றமலி ருப்பா னேனையா,
எல்லாச் சீவனும் வெவ்வே றஇ லிவனெல் லாமன்றே,
எல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீரே. 37



(ப—ம்) ஒரு புருடன் அந்நாதி புசிப்பதனு லவன் திருப்தி யடைகின்றதே தவிர, வே றொருவருந் திருப்தி யடையாதது போல். ஞாநி யொருவன் மோட்ச மடைய, மற்றைச் சீவர் அஞ்ஞாநாதி நீக்க மான மோட்சம் பெருதிருப்பதனு, லிவன் சகல சீவரு மாகானே யென்பார், 'இவன்றன் முத்தி யடைந் தெல்லாச் சீவரு முத்திபெறும லிருப்பானே' யெனவும், சுருதிகளி லுள்ள வர்த்தங்களி லொன் றறிந் தொன் றறியா திராது, காண்டத் திரயத்தி லுள்ள பூருவ பட்சஞ், சித்தாந்த மான சர்வார்த்தங்களு யறிந்தவராயு, மியான் கேட்பதி லொன்றுக் காவ துத்தரங் கூறு திராம லனைத்துக்கு முத்தரஞ் சொல்லுகின்றவராயு மிருக்கின்ற ஞாநாச்சாரியரை, யிவ் வினுவிற்கு முத்தர மநுக்கிரகிக்க வேண்டு மென்று னென்பார், 'எல்லா பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீரே' யெனவுங் கூறினுர்.

(வி—ம்) 'முத்தி யடைய,' வென்பது 'அடைந்' தெனத், திரிந்து நின்றது.

(தா—ம்) ஞாநவா னுகிய ஒருவன் பெற்ற பே, றேனைய வுயிர்கள் பெருமையா, லிவ னெல்லாச் சீவரு மாவ ரென்ப தெங்ஙனங் கூடு மென வினுவின தாம். 37

(அ—கை) அவ வினுவிற் குத்தரங் கூறல்.

அகமெனு மாத்மா பூரண மேகம நேகவி தஞ்சீவ,
னகமெனு மந்தக் கரணோ பாதிக ளளவில யாதலினற்,
சகமுழு துங்குளிர் சந்திர னேகஞ் சலசந்த்ர னும்பலவாந்,
சகமதி லேரிந ளஞ்சிறு குழிசால் சட்டிகு டம்பலவால். 38

(ப—ம்) பிரமாதி ஸ்தம்ப பரியந்த மான சகல சீவரிடத்திலு, 'நா' னென்று விளங்கு மாத்மா, சகல சராசர முந் தோன்றி யிருந் தொடுங்குவதற் கேது வான, வகண்ட

மாயுந், துவித மற்ற, வத்துவித மாயு மிருக்கின்ற தென் பார், 'அக மெனு மாங்மா பூரண மேக' மென்றார். 38

(அ—கை) இதுவு மது.

சட்டிகு டங்களி லொன்றுந சித்திடி னதனுட் சலசந்திர
னொட்டுழ தற்சந் திரனொடு கூடுமோ ழிந்தவை கூடாதே,
கட்டுழ பாதிந சித்திடு சீவந் காரண வாந்மாவிற்,
கிட்டும யிக்கிய முபாதிகே டர்தவர் கேவல மாகாரே. 39

(ப—ம்) கருத்திருத்துவ, போத்திருத்துவாதி பந்த நீங்கி, ஞாநி யா யிருக்கின்ற சிதாபாசனுக்குச், சக சீவ பரத்துக்கு மூல மான வஸ்த்துவினுட னயிக்கங் கூடு மென்பார், 'கட்டு முபாதி நசித்திடு சீவங் காரண வாங்மா விற் கிட்டு மையிக்க' மென்றார்.

2-வது கவிக்குந் தாற்பரியம்.

ஓர் கட சலப் பிரதிவிம்ப சந்திரனுக்கு, எனைய பிரதி விம்ப சந்திரர் வே றுவர். ஓர் கட சல நசிக்கி, னதிற் பிரதி விம்பித்த சந்திரன் விம்ப சந்திர னுவ னன்றி, யேனைய பிரதி விம்ப சந்திரர்க, ளக் கட சல மெல்லா நசியாமையால், விம்ப சந்திர னுகார், அவ் வோர் பிரதிவிம்ப சந்திரன், விம்ப சந் திரனுமிடத்து, அவனே பல சலத்திலும், பிரதிவிம்பத் தலி, னெல்லாப் பிரதிவிம்ப சந்திரனு மாவ, னது போ, லோ ரந்தக் கரணத்திற் றோன்றிய சீவனுக், கேனைய சீவர் வே றுவ, ரவ்வோ ரந்தக் கரண நசிக்கி, னதிற், றோன்றிய சீவன் சிவ மாவனே யன்றி, எனைய சீவர்க, ளவ் வந்தக் கரணங்க ணசியாமையாற், சிவ மாகா, ரச் சீவங் சிவ மா மிடத், தவனே பல வந்தக் கரணத்திலுந் தோன்றுவதா, லெல்லாச் சீவரு மாவ னென்ப தாம். 39



(அ—கை) முன் பறிஞ, 'னீசனுக் கொப்' பென்றீர், ரங்ஙன மாயி, னவர் மகிமை யிவனுக் கேனின்' றென விஞதல்.

சிவன்யன் மால்சிவ ஞகிய வீசரோ டேப்படி யொப்பாதுந்,
சிவன்முதற் மூவரு மகிலசி ருட்டிதி திநாசங் கள்செய்வா,
ரவரபிறர் மதிகளு முக்கா லங்களு மறிவார் வீபுவாவார்,
தவமிது துருவே யிவனுக் கவையிலோர் சற்றுங் காணேனே. 40

(ப—ம்) சுபேச்சை யாதி ஞாந பூமி மூன்றி னப்பியாச மாகிய தவத்திற்கு மே லான, நா லாவது சத்துவாபத்தி முதலிய பூமியி னநுபவ முடைய வாசிரியரே யென் பார், 'தவமிகு குருவே' யென்றார்.

(வி—ம்) சுபேச்சை யாதி மூன்று பூமியி னப்பியாசம் எங்ஙனந் தவமா மெனில், பஞ்சாக்கிநி மத்தி யாதி தவத்தைத் தவ மென்று, மதைச் செய்தோர்க்குச் சொர்க் காதி லோக முண் டென்றுஞ். சுருதி சொல்லுவது போலச், சுபேச்சை யாதி மூன்று பூமி யப்பியாசத்தைச் சத்துவ தவ மென்று, மதை யப்பியாசித்தோருக்கு ஞாநம் வரு முன் சரீர நீங்கிப்போனு. லச் சொர்க்காதி லோக முண் டென்றுஞ், சுருதி சொல்வதா, லது மேலான தவ மா மெனக் கொள்க.

*(தா—ம்) ஞாநி யீசுவராதிகளுக் கொப் பென் பதற்குச் சிருட்டி யாதி சர்வஞ்ஞத்துவாதி சிறப்பு அவனுக் கில்லையே யென விஞவின தாம்,* 40

**(அ—கை). அவ் விஞவிற் குத்தரங் கூறல்.**

தடத்து நீர்நிலாத் திரியொளி யுபயழந் தழவுழர் தனைக்காக்குந்,
குடத்து நீர்விளக் கினிலொளி யிரண்டுமோர் துடும்பமரத் திரங்காக்க,
மடுத்த மைந்தனே ஞாநியு மீசனு மறிவினற் பிறிவில்லைக்,
கெடுத்த மாயையின் குணங்களான் மேலென்றுங் கீழென்றும்
[பிரிவாமால். 41

(ப—ம்) காமாதி குணத்தை யுண்டாக்குவ தான துர்ச்சங்கத்தை விட்டு, மைத்திரி யாதி குணங்களை யுண்டாக்குவ தான சற் சங்கத்தை யடைந்த சீடனே யென்பார். 'அடுத்த மைந்தனே' யெனவும், தேகேந்திரியாதி களைத் தா னென்றும், பிரபஞ்சஞ் சத்திய மென்றுந், தோற்றுவித்துப் பிரத்தியக் கபிந்ந பிரம சொரூபத்தை யறிகின்ற ஞாநத்தை ய ழித்த மூலாஞ்ஞாந மென்பார், 'கெடுத்த மாயை' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) ஏரி நீ ரூரையும், கட நீ ரில்லத்தையுங், காக்கு மிடத்தி, லோ ரில்லத்துக் குபகாரமா யிருத்தலும், ஊர் முழுதுக்கும் உபகாரமா யிருத்த லென்னும் பேதமே யன்றிக், காக்குந் தன்மை யொன்றுவது போல, ஈசனுக்கு, ஞாநிக்கு, மாயை யவித்தைகளாற், சிருட்டி யாதி செய்தல், செய்யாமை யாகிய, தார தம்மிய மிருக்கி னும், 'நான பிரம' மென்னு ஞாநத் தன்மையி லொப்பாவ ரென்ப தாம்.*

(அ—கை) அவ் வினவிற்கு, வே றொரு திட்டாந்த மூலமா யுத்தரம் வற்புறுத்திக் கூறல். 41

நாரின் மன்னனைச் சித்தனைப் போலவே நாரணன் முதலான,
சூரர்க்கண் மாயைவல் லவரணி மர்திக டோக்கநா யகர்மிக்கோர்,
தரணி மாநுடற் கவைகளில் லமையாற் றழ்வுள ரானலும்,
பிரம பாவனை யாலவ ரிவரெனும் பேதமோன் றிலைப்பாராய். 42

(வி—ம்) 'அணிமாதி' யென்ற பதத்துக்கு, ஆன்மாப் போ, லாத லாகிய அணிமாவு, மகத்துவ மாத லாகிய மகி



மாவும், இரும்பு மலையினும் கநத்த லாகிய கரிமாவும், பஞ்சி னெயத லாகிய லகி மாவும். வேண்டுவன வடைத லாகிய பிராத்தியும். குறை வின்றி யிருத்த லாகிய பிராகாமியமும், யாவர்க்குந் தேவ னுத லாகிய ஈசத்துவமும், யாவரும் வணங்கி நிற்ற லாகிய வசித்துவமும், அணிமாதி யஷ்டமா சித்தி யெனக் கொள்க.

*(தா—ம) மாநுடரி லரசனுக்குஞ், சித்தருக்கு, முள்ள மகிமை கண் மற்றவர்களுக் கின்றாயினு, மாநுடத் தமையி லொப்பாவது போலத், திரி மூர்த்திகளுஞ், சீவன் முத்தர்களும், பொய்யா யிருக் கின்ற சர்வஞ்ஞத்துவாதி யிருத்த, லில்லாமையால், வேற்றுமை யுள்ளோர் போற் றோற்றினும், 'பரிபூரணப் பிரம சொரூப நா' மென்னு மெய் யான ஞாந நிச்சய மொரு தன்மை யாக வுடையோ ராதலா லொப்பாவ ரென்ப தாம்.*
42

(அ—கை) அணிமாதி சித்திக ளீசனதாயி, னறி ஞனுக் கெங்ஙன முண்டாயிற் றெனும் வினுதலு, மதற் குத்தரமுங், கூறல்.

முத்தி நல்கிய சற்குரு வேசில முநிகளுக் கணிமாதி
சித்தி பூமியிற் கண்டிருக் கவுமந்தச் செல்வமீ சனதென்றீர்,
புத்தி யோத்திட வுரைத்தரு ளென்றிடிற் புகழுமீ சனைவேண்டிப்,
பத்தி செய்திடுந் தவத்தினு லியோகத்தாற் பலித்ததென் றறிவாயே.

(ப—ம்) சொர்க்காதி போகமும், பிரம லோகாதி அபர மோட்சமுங், கொடாது. அவித்தை, யவித்தையின் காரியங்களை நீக்கிப், பரம சுகத்தை அநுபவிக்கும்படிக்குப் பர மோக்ஷத்தைக் கொடுத்த ஞாநாசாரியரே யென்பார், 'முத்தி நல்கிய சற்குருவே' யெனவும், வாக்கு மௌனங், கரண மௌனம், காஷ்ட மௌனம், மகா மௌன முடைய வ ரென்பார், 'சில முநிக' ளெனவும், சிருட்டி யாதி தொழிலுஞ், சருவஞ்ஞத்துவாதி குணமு முடையவ ராய்,

ராம கிருஷ்ணுதி யவதார மெடுத்துத், துட்டர்களைச் சங் கரித்துச், சிட்டர்களை ரட்சிக்கின்றவரா யிருப்பதால், யாவராலுந் துதிக்கப்பட்ட திரி மூர்த்திக ளென்பார், 'புகழு மீச' னெனவுங் கூறினர்.

*(தா—ம்) பிரமாதி தேவதைகளைக் குறித்துப் பத்தியுடன் செய்யு முபாசனையினுலும், பஞ்சாக்கினி மத்தியாதி தவத்தினுலு, மியமாதி யஷ்டாங்க யோகத்தினுலு, மச்சித்திக ளுண்டாயின வென்ப தாம்.*

43

**(அ—கை) அணிமாதி சித்திகள் ஞான பலமா? வல்லவா? வென் றறியும் பொருட்டுச் சீடன் வினுதல்.**

சிவசொ நுபமாந் தேசிக மூர்த்தியே சித்திமுத் திகளிரண்டுந்,
தவமு ளோரடை துவரேனி லவர்கள்போற் சகலரு மடைவரே
அவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைந்ததுங் கண்டோமே,
இவர்கள் ஞாநிக ளேயென்றற் சித்திக ளிவற்கிலா வகையேதோ. 44

(ப—ம்) பஞ்ச பூதாதி சரீர மின்றிக், கிருத மிளகல் கடிந மாவது போற், பூரணுநந்தமே யோ ருருவா யெழுந் தருளி யிருக்கு ஞானாசாரியரே யென்பார், 'சிவ சொரூப பாந் தேசிக மூர்த்தியே' யென்றுர்

*(தா—ம்) முன் புள்ள வியாச வசிட்டாதிகளைப் போல, விக் காலத் துள்ள ஞாநிகளுக் கணிமாதி சித்திக ளே னில்லை யென வினவின தாம்.*

44

**(அ—கை) அவ் வினுவிற் குத்தரம்.**

காமி யத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென்றும்,
பூமி யிற்றவ மிருவகைச் சித்தியும் போதமுந் தருமைந்தா,
வாமி வற்றிலொன் றியற்றிநு லொன்றையே யடைகுவ ரிதுதீர்வை,
யாமு ரைத்தவவ் விரண்டையு மியற்றிநு ரன்றுள பெரியோரே. 45



(ப—ம்) நெற் பயிர் செய்தோனுக்கு, நெல் மாத்தி ரம் வருமே தவிர, மற் றென்றும் வராது. நெல்லும், வர கும். பயிர் செய்தோனுக்கு, நெல்லும், வரகும், வரு. மது போலச், சிரவணுதி தவ மாத்திரம் அப்பியாசித்தோற்குத், தத்துவ ஞானத்தினுன் மோட்ச மாத்திரம் வருமே தவிரச் சித்திகள் வராது அச் சிரவணுதி நிட்காமிய தவமும், பஞ் சாக்கினி மத்தியாதி காமியத் தவமுஞ், செய்தோருக்கு, ஞா நத்தினுன் மோட்சமு, மணிமாதி அஷ்ட மாசித்தியும், வரு மென்பார். 'ஆமிவற்றி லொன் றியற்றிநு லொன்றையே யடைகுவ' ரென்றுர்.

(வி—ம்) பஞ்சாக்கினி மத்தியாதி தவமும், பலன் வேண்டாது செய்யி, னிட்காமிய தவமா மெனவு, மதனு லந்தக் கரண சுத்தி உண்டாகிப் பரம்பரை யாய் ஞானத் தால், மோட்ச முண்டா மெனவுங் கொள்க.

*(தா—ம்) காமிய தவசாற் சித்தியு, நிட்காமிய தவசால் ஞானத்தால் மோட்ச முண்டா மெனவு, மித் தவங்களி, லொன்றைச் செய்தோ ரதன் பலனையும், இரண்டைச் செய்தோ ரிரண்டு பலனை யும் பெறுவ ரெனவும், முன் னுள்ள மகான்க ளிரண்டையுஞ் செய்ததாற் சித்தியு, முத்தியும், பெற்ரு, ரிக்காலத்தி லுள்ள ஞாநி கள், சித்தியினுற் றுன்ப முண்டா மெனக் கருதி, அச் சித்தியைத் தருவ தாகிய காமிய தவத்தை விடுத்துச், சிரவணுதி யாகிய நிட்காமிய தவ மாத்திரஞ் செய்தமையா, லிவர்க் கணிமாதி சித்தி யில்லை யெனவுங் கூறின தாம்.*

45

**(அ—கை) அவ் வினுவிற்கு, வே ருெரு பிரகார மா யுத்தரங் கூறல்.**

அநக மைந்தனே முத்திஞா நத்தையே யடைந்தன ரல்லாமற்,
சநகன் மாபலி பகீரதன் முதலினேர் சித்திகள் படித்தாரோ,
வினிய சித்தியே விரும்பினர் சிலர்சில ரிரண்டையு முயன்றர்கள்,
முநிவர் சித்திகள் விநோதமாத் திரந்தரு முத்தியைத் தாராதே. 46

(அ—கை) சித்தி யானது முத்தியைக் கொடாதோ வெனில்?

(ப—ம்) சீவத்துவம் நீங்கிச் சிவ மா யிருக்கின்ற சீடனே யென்பார், "அநக மைந்தனே" யென்றார்

(தா—ம்) பூருவத்திற் சநக ராசா முதலியோர் சித்தி பெறும் படி யப்பியாசியாது, ஞாநாப்பியாசத்தால் முத்தி பெற்றிருப்பதாலும், நாரதர் முத லான சிலர், யோக மாதியா லணிமாதி சித்திகளைப் பெற்று, மவைகளாற் றான் புற்றதே யன்றிச் சுகப் பய னடையா மற், பின்னர் ஞாநப் பேற்றினால் முத்திச் சுகத்தைப் பெற் றிருப் பதாலு, மச் சித்திகள் ஞாந பல மல்லாததாலுங், காமாதியை விர்த்தி பண்ணிச் செநந மரணாதியைக் கொடுப்பதா, லச் சித்திகள் வேண் டுவ தல்லாததாலு, மிக் காலத்தி லுள்ள ஞாநிக ளச் சித்தியைப் பெற வில்லை யென வறிவித்த தாம். 46

(அ—கை) சித்திகளிற் பய னின் றென்பது தெரிந்துஞ், சில ஞாநிக, ளதை யேன் விரும்பி வருத்த முற்றார்க ளென வினாதலு, மதற் குத்தரமுங், கூறல.

யோக ஞாநமே முத்தியைத் தருமெனி லொழிந்தசித் திகள்வேண்டி,
மோக மாயுடல் வருந்தினர் சிலசில முத்தர்க ளேனென்றற்,
போக மாய்வரும் பிராரத்த கன்மங்கள் புசித்தன்றே நசித்தேத,
மாகை யாலந்தச் சித்திகள் பிராரத்த மாதுமென் றறிவாயே. 47

(ப—ம்) யாகாதி கருமத்தினாலும், பிரமாதி தெய்வ வுபாசனையினாலு, மியமாதி யட்டாங்க யோகத்தினாலு, மாண்டவ னடிமை வே றென்னுந் துவித ஞாநத்தினாலு, பரமோட்சங் கிட்டாது, துவம்பத வாச்சிய மான தூலாதி யொன்பதுஞ், சேதநமுந், தற்பத வாச்சிய மான விராட்டாதி யொன்பதுஞ், சேதநமும் ஆகிய இவற்றுள் விரோத பாகத் தினை நேதி களைந்து, லட்சியார்த்த மான கூடத்தப் பிரம



அபிந்ந சொருபமே தா னென் றறியு மப்பிரதிபந்த யப ரோட்ச ஞாந மொன்றுமே பரமோட்சந் தருவ தென்பார், "யோக ஞாநமே முத்தியைத் தரு" மென்றார்.

(தா—ம்) சூடாலை முதலியோர் தத்துவ ஞாநம் பெற்றும் பிரயாச முற்றுச் சித்திகள் சம்பாதித்தது பிராரத்த கன்மத்தா லென வறிவித்த தாம். 4

(அ—கை) மேற் சங்கை வினாவும் பொருட்டு, ஐயந் தெளிவித்த வாசிரியரை, யன்பின் வியந்து துதித்தல், 'தெளிவானேன்'.

(அ—கை) ஆனாலையா, 'உனக்கு இனி யுபதேசிக்க வேண்டுவதின்றே' யென்பீ ராகில்.

இலக்க மாயிரஞ் சுருதியா லுகத்தா லென்மந மசையாமற்,
பிலக்க வேண்டுமென் றருள்தரு வேயகப் பிராந்திபோய்த் தெளி
[வானேன்,
றுலக்க மானகண் ணடியை யடிக்கடி துலக்கினாற் பழுதன்றே.
யலக்கண் மாற்றிய தேவரீ ரெனக்குரை யமிர்தங்க டேவிட்டாதே.

(ப—ம்) செகத்துச் சத்திய மென்கின்ற பிராந்தியு, மிருபத் தொன்பது தத்துவங்களையு மொன்றுக் கொன்று பேதந் தெரியாம லொருமைப்பாடாய், 'நா' னென்கின்ற பிராந்தியும், புண்ணிய பாவங்களைக் குறித்துத் தான் கர்த்தா, போக்தா வென்கின்ற பிராந்தியுந், தானு மீசுர ராகிய பிரமமும், வே றென்கின்ற பிராந்தியுந், தான் சேதந னாகி விருந்துந், தான் பிரம மல்ல வென்கின்ற பிராந்தியு, மாகிய பஞ்சப் பிராந்தியு நீங்கிப், பரிபூரண பரப் பிரம சொருபமே யா னென அபரோட்ச மா யறிந்தே னென் பார், "அகப் பிராந்தி போய்த் தெளிவானே" னெனவும், உற்பத்தி திதி லய துன்பங்களை நீக்கிய வாசிரிய ரென்பார், "அலக்கண் மாற்றிய தேவரீ" ரெனவுங் கூறினார்.

*(தா—ம்) சுருதி யுத்திகளா லநுபவ முண்டாகும்படி யநுக்கிரகித்த வாசிரியரை மேலு முபதேசிக்கும்படி வேண்டிக்கொண்டதாம்.* 48

**(அ—கை)** கிரம சிருட்டி யான சீவேசுர சகத்தைப் பற்றிய விவகாரங்க ளறிஞனது பிராரத்த மென் றறிந்தசீட, னதற்கு வித்தாக (வுகபற் சிருட்டியினால்) அமைந்து கிடக்கின்ற சஞ்சிதத்தைக் கெடுக்கும் பொருட்டு, அஃது நசிக்கு மென்று சுருதியிற் கூறிய, விரண்டு வகையில், யா துண்மை யென வினுதல்.

கைத வங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ கருணையா லேனையாளு,
மைய னேதரு வேயெவ ராகிலு மநுபவித் தாலன்றிச்,
செய்த கன்மங்கள் விடாதென்ற வசநமுஞ் சென்மசஞ் சிதம்வேகத்,
துய்ய ஞாநத்தீச் சுடுமென்ற வசநமுந் துணிவதெப் படிநானே. 49

**(ப—ம்)** கோழி யானது குப்பையைக் கிண்டக் கிண்ட, வதற்குக் குப்பை, யிரை கொடுப்பது போல, யான் எவ்வித மான சங்கை கேட்பினும் வருத்த மின்றி, யததற்குத் தகுந்த வுத்தரங் கூறிக், கிருபையினு லடியேனை யாட்கொள்ளு, மெனது பிதா வாகிய வாசிரியரே யென்பார், "கருணையா லெனை யாளு மையனே குருவே" யெனவும், மநோ விருத்தி ஞாநஞ், சாட்சி விருத்தி ஞாந, மகண்ட விருத்தி ஞாந, மகண்டாகார விருத்தி ஞாந மாகிய விவைகளுக்கு மே லாகிய வகண்டைக ரச ஞாந மென்பார், "துய்ய ஞாந" மெனவுங் கூறினுர்.

*(தா—ம்) (சஞ்சித) கன்ம, மநுபவித்துத் தீரு மெனவும், ஞாநாக்கினியாற் றீரு மெனவுங், கூறி யுள வேத வாக்கிய மிரண்டில், யா துறுதி யென வினவின தாம்.* 49

**(அ—கை)** அவ் வினுவிற் குத்தரம்.



சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை,
யாவ தாலவ ரவரதி காரங்க ளறிந்துபக் குவநோக்கிப்,
பூவ லர்ந்தபின் பலங்கள்காட் டுவதுபோற் பூருவஞ் சித்தாந்தங்.
காவல் வேதங்க ளிரண்டையும் வசநிக்குங் காண்ட மூ வகையாலே.

**(ப—ம்)** கர்ம பேதத்தாற் சீவர்கள் நாநா வித மாயிருப்பார்க ளென்பார், "சீவ பேதங்க ளளவிலை" யெனவும், கர்ம காண்டத்திற் கூறுகின்ற யாகாதி கருமங்களுக்கு, முபாசநா காண்டத்திற் கூறிய பிரமாதி தேவதைகளின் றியாநா திகளுக்கும், ஞாந காண்டத்திற் கூறுஞ் சிரவணுதி களுக்கு, மட் டில்லை யென்பார், "செய்கையு மள வில்லை" யெனவுங், காண்டத் திரய வப்பியாசத்திலு, மந்த மந்த தரந், தீவிரந், தீவிரதர மாகிய பருவத்தைப் பார்த் தென் பார், "பக்குவ நோக்கி" யெனவுங் கூறினுர்.

**(வி—ம்)** வாழை வைப்பதிற் பலன், பூருவ மிலைச், சித்தாந்தம் பூ, அது பூருவங், காய் சித்தாந்தம், அது பூருவம், பழஞ் சித்தாந்த, மது போற். சுருதி, பாவ கன்ம மநுபவித்துத் தீரு மெனல் பூருவந், தகுந்த புண்ணியஞ் செய்தாற் றீரு மென்பது சிந்தாந்தம், அது பூருவம், பத்தி முக்கிய மெனல் சித்தாந்த, மது பூருவ, மன்புடன் செய்யிற் றுன் பய னெனல் சித்தாந்தம், அது பூருவஞ், சீவேச சகத் துத் பொய், பிரமந் தா னென் றறியு ஞாந முக்கிய மெனல் சித்தாந்த, மது பூருவம், பரமாத்து வித நிட்டை சித்தாந்த மெனக் கொள்க.

*(தா—ம்) சீவர்களது பக்குவத்திற் கேற்கப் பூருவ பட்சஞ் சித்தாந்த மென விரண் டாக வேதங் கூறு மென்ப தாம்.* 50

**(அ—கை)** இதுவு மது.

ஆன பாவிக ளடைவது நரகங்க ளவசிய மானாலுந்,
தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமென் பதுபொய்யோ,
வினை மாம்பல செந்மசஞ் சிதவினை யெத்தனை யானாலு,
ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினால் வீடுண்டே. 51

(ப—ம்) அநித்திய மாயுந், துக்க மாயு, மசுத்த மாயு, மிருக்கின்ற சில நாநா வித பிறவிக்குக் காரணமான சஞ்சித கன்ம மெவ்வளவு மிகுதியா யிருந்தாலும். பஞ்சுப் பொதி யநேக மானாலு, மோ ரக்கினிப் பொறி தகித்துப் போடுதல் போலத், தத்துவ ஞானமானது தகித்துப் போடு மென்பார், 'ஈனமாம் பல சந்ம சஞ்சித வினை யெத்தனை யானாலும் ஞான மாங் கனல் சுடு' மெனவும், கருடத் தியான, மூர்த்தித் தியானம் விசுவசித் தப்பியாசிக்காவிடிற் சித்தியாகாதது போல, வேதத்திற் கூறுகின்றதை நம்பி யப்பியாசிக்காதோருக்கு மோட்ச முண்டாகா தென்பார், "மறை மொழி நம்பினால் வீடுண்டே" யெனவுங் கூறினார்.

*(தா—ம்) கன்ம காண்ட பூருவ பட்சத்தை, யதன் சித்தாந்தத்தை நம்பிச் செய்து நீக்குவது போல, அநுபவித்துத் தீரு மென்ற பூருவ பட்சத்தை நீக்கித், தத்துவ ஞானத்தினாற் கெடு மென்ற சித்தாந்தத்தை கைக்கொண்; டந்த ஞானத்தைப் பெற்றா, லதனாற் சஞ்சிதங் கெடு மென்ப தாம்,* 51

**(அ—கை) அறிஞர்களு, மாநந்தங் கொடுக்கின்ற வத்துவித ஞானத்தை விட்டுக், கருமத்தைச் செய்து துன்புறுதல் யாதினா லென வினாதல்?**

என்ம நந்திருக் கோயிலாய்த் திநங்குடி யிருந்தருள் குருமூர்த்தி,
செந்ம சஞ்சித வினையைவே ரறுத்திடுந் தேவரீர் மெய்ஞ்ஞாநந்,
தன்ம யந்தரு மகிமையை விபுதாருஞ் சமர்த்தரு மறியாமற்,
கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற காரண முரையீரே. 52



(ப—ம்) மகா லிங்க மானது கோயிலை விட்டு நீங்காது, அதி லெப்போது மிருத்தல் போல. என்று லிடைவிடாது தியானிக்கப்பட்டு, என தறி வுரு வாகிய சத்துவ மநதி னிரந்தரம் வாசஞ் செய்து கொண்டிருந் திரட்சிக்கின்ற சத்திய ஞாந வநந்தாநந்த மான ஞாநாசாரியரே யென்பார், 'என் மநந் திருக் கோயிலாய்த் திநங் குடியிருந்தருள் குரு மூர்த்தி' யெனவும் அநிட்ட மாகிய சஞ்சித கன்மத்தை யத்தியந்தம் போக்கி யிட்ட மான வெல்லாமுந் தாமுகும்படி யான வின்ப அநுபவத்தைக் கொடுக்கின்றது. சுவாமி யநுக்கிரகிக்குந் தத்துவ ஞாந மென்பார், "செந்ம சஞ்சித வினைகள் வேரறுத்திடுந் தேவரீர் மெய்ஞ் ஞாநந் தன்மயந்தரு" மெனவும், பாழ்ங் கிணற்றில் விழுந்தோன் சர்ப்பாதிகளாற் பய துன்பங்களடைந்து, மேலேறுகிறதற்கு மார்க்க மறியாமல், வருத்த மடைதல் போல, யாகாதி கன்மங்களைச் செய்வோருக்கு அக் கருமஞ் செய்யு முன், அதற்கு வேண்டிய செல்வ முதலானவற்றைச் சம்பாதிக்கின்றதனாற் றுன்பமு. மக் கருமஞ் செய்யுங் காலத் தக்கினி முகத்தி லிருத்தல் முதலிய துன்பமு, நிறைவேறாவிடினும், மந்திர கிரியா திரவிய லோபத்தினாலும். நிரயம் வரு மென்னும் பயமு, மக் கருமம் நிறைவேறின பின்னுஞ் சொர்க்கத்திற் கர்த்திரு சத்துரு முதலானதாற் பயமுந். துன்பமு, ஞாந மடைய மார்க்கந் தெரியாது செநந மரணத்திற் சுழல்தலு. முண்டாகு மென்பார், 'கன்மமாங் குழியினில் விழுந் தழித' லெனவுங் கூறினார்.

*(தா—ம்) ஞாந மப்பியாசிப்போர்க்கு யின்பமுங், கன்மஞ் செய்வோருக்குத் துன்பமு, முண்டாகு மென்ப தாம்.* 52

**(அ—கை) அவ் வினாவிற் குத்தரம்.**

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர்சேர்வர்.
வழிந டப்பவர் பராமுக மாயினுன் மலர்ந்தகண் ணிருந்தாலுந்,
குழியில் வீழ்வர்கா ணப்படி வெளிமுகங் கொண்டுகா மிகளானோர்,
பழித நும்பிற விக்கட லழுந்துவர் பரகதி யடையாரே. 53

(ப—ம்) சரீர முத்தி யாயு, மழி வுடைய தாயும், அந்நிய மாயு, மடைந்தவர் மறுபடி பிறத்த லுடைய தாயு, மிருக்கின்ற பிரம லோகாதி பதங்கள் போ லல்லாது, அசரீர முத்தி யாயு, மழி வற்ற தாயு, மடையப்படாத அந்நிய மாயு. மிருக்கின்ற பரிபூரணப் பிரம பதத்தைக், கட படாதி யாய்ப் பார்க்கின்ற வாகியத்திற் பகிர்முகமுங், காமாதி விருத்தியுடன் கூடி மனோராச்சியஞ் செய்கின்ற ஆந்தரத்திற் பகிர்முகமு, மின்றி யவ் விரண்டையுஞ் சித்தாய்ப் பார்க்கின்ற வாகியத்திலு, மாந்தரத்திலு, மகமுக முடையோரே யடைவ ரென்பார், 'அழிவிலாத தற்பதந் தனை மைந்தனே அகமுகத்தவர் சேர்வ' ரெனவும், வேதாந்த சாஸ்த்திர சிரவணஞ் செய்து, அதனுற் பிரமமே சத்தியம், பிரபஞ்ச மசத்திய மென அறிந் திருந்து, மவ் வசத்திய மான பிரபஞ்சத்தைச் சத்திய மாகக் கருதிச், சொர்க்காதி போகத்தை விரும்பி, யாகாதி கருமஞ் செய்வோர், யாவராலு நிந்திக்கப்பட்ட, சுரர் முலற் றுவர மீ ருன வெழு வகைப் பிறவிச் சாகரத்திற் சுழல்வதே யன்றிப், பரமோட்சத்தை யடையா ரென்பார், 'வெளிமுகங் கொண்டு காமிக ளானோர் பழி தரும் பிறவிக் கட லழுத்துவர் பரகதி யடையாரே' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) வேதாந்த சாஸ்த்திரார்த்தங்களைத் தனக் காக்கிக் கொண்டு, விசேஷித்து நம்பாமல், மே லெழுந்த வரிசை யாகப் பார்த்திருப்பதே கன்மஞ் செய்வதற் கேது வெனவும், அங்ஙனங் கருமஞ் செய்வோர் செநந மரண சமுசாரத்தை யடைவரே யன்றிப், பரமோட்ச மடையா ரெனவுங் கூறின தாம்.* 53

(அ—கை) சிவச் செய லிவை, சிவச் செய லிவை, யெனத் தெளியு நிமித்தம் வினுதலு, மதற் குத் தரமுங், கூறல்.



சிறந்த நன்மையுந் தீமையு மீசனுர் செய்விக்குஞ் செயலன்றே,
பிறந்த சீவர்க ளென்செய்வா ரவற்கண்மேற் பிழைசொலும் வழி
[யேதோ,
துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற் பொருண்மார்க்க.
மறந்த மூடர்கள் வசநிக்கும் பிராந்திகாண் மைந்தனே யதுகேளாய்.

(ப—ம்) வேதத்தின் காண்டத் திரய மநுபட்டிக் குஞ் சீவர்க, ளந்த வந்தக் காண்டத்தில். விதித்தபடி நன்கு செய்கின்றதும், நிடேதத்தை விடாது தீங்கு செய்கின்றதும், பாவை யானது சூத்தாடி யசைத்தபடி யசைகின்றதே யன்றித், தனக் கென செய லற் றிருப்பது போல, வந்திரியாமி யாட்டுவித்தபடி செய்கின்றதே தவிர, அவ் திரியாமி யமைத்தபடி யெழு வகைப் பிறவியிற் செநிக்குமச் சீவர்கள், சுதந்தரத்தா லல்லவே யென்பார், 'சிறந்த நன்மையுந் தீமையு மீசனுர் செய்விக்குஞ் செய லன்றே பிறந்த சீவர்க ளென் செய்வா' ரெனவும், வேத சாஸ்த்திரம் படித்து, மதிற் கூறியபடி ஆசை முதலிய துர்க்குணத்தை நீக்கி, ஆத்ம சொருபத்தை யடையாது, அவ் வாசையினு, லவ் வேத சாஸ்திரார்த்தத்தை மறந்து, நிடேதத்தைச் செய்பவர்கள், சித்தப் பிரமை கொண்டவ, னென்றிருக்க யொன்றைக் கூறுவது போல, மயக்கத்திற் றற் செயலை யீசுரச் செய லாகச் சொல்வார்க ளென்பார், 'சுருதி நூற் பொருள் மார்க்க மறந்த மூடர்கள் வசநிக்கும் பிராந்தி' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) சீவர்கள் விதி நிடேதத்தைச் செய்வது, ஈசுரச் செயலா? வல்லவா? வென்று சீடன் வினவ, வாசிரிய ரங்ஙனங் கூறுவது யதார்த்த மல்ல வென்று உத்தரங் கூறத் தொடங்கின தாம்.* 54

(அ—கை) இதுவு மது.

திகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே,
சகந் தனிற்போது வீசனார் சிருட்டிகள் சராசரப் பொருளெல்லா,
மகந்தை யாமபி மாநங்கள் கோபங்க ளாசைக ளிவையெல்லா,
மிகழ்ந்த சீவனார் சிருட்டிக ளாதுங்கா ணீசனார் செயலன்றே. 55

(ப—ம்) பிறர் பொருளைக் கவர்ந்தவனை நிந்திக்கப்படுகின்றது போல, ஈசுரன் சிருட்டித்த தநு கரணத்தை, யானென்றும், புவந போகத்தை, யென தென் றபிமாநித்துக் கொண்டு, மவைகள் நன்ரு யிருக்க வேண்டு மென்று விச்சையு, மவைகளைக் குறித்துத் தீது செய்தோரிடத்துக் குரோதமுஞ் செய்வதனால், மகான்களால் நிந்திக்கப்படுகின்ற சிதாபாச னென்பார், 'இகழ்ந்த சீவ னென்றார்.

(தா—ம்) ஈசுவர சிருட்டி, சீவ சிருட்டிக, ளிவை யெனப் பகுத்துக் கூறின தாம். 55

(அ—கை) அவ் வீசுவர, சீவ சிருட்டியா லுறுவன யா தெனில். (—'பிணி யாகும்'—')

(அ—கை) சீவ சிருட்டி, யீசுவர சிருட்டியாற், பந்த மோட்ச முண்டா மென்றதற்கு யுத்தி யா தெனில்?

மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தநமாகுஞ்,
சீவ னார்செயுஞ் சிருட்டிக டங்களைச் செநிப்பிக்கும் பிணியாகுந்,
தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சநநங்க ணசியாது,
கோப மாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிற விகள்போமே. 56

(ப—ம்) விருட்ச மானது, பல வுயிரிகளுக்கும் நிழல் விறகு இலை பூ காய் பழ முத லான வுதவுகின்றதனாற் சுகத்துக் கேதுவா யிருப்பது போற், றிரி மூர்த்தி சொருப மான ஈசுவர சிருட்டி யாகிய தநு கரண புவந போகங்கள், சற் கரும சிர வ ணாதி யுதவியாய், மோட்சாநந்தத்துக் கேதுவா யிருக்கு மென்பார், 'மூவராம் டரன் சிருட்டிக



ளுயிர்க் கெலா முத்தி சாதந மாகு' மெனவும், ஒருவனுக்கு வந்த வியாதி, யவனுக்கு, மந்நியருக்குந் துன்பங் கொடுத்தல் போலச், சீவர்க ளுடைய அபிமாநமு, மாசை கோப முதலியனவுங், தங்களுக்கு மந்நியருக்கு மிப் பொழுது துன்பங் கொடுப்பது மன்றிச், செநந மரணாதி துன்பத்தையுங் கொடுக்கு மென்பார், 'சீவனார் செயுஞ் சிருட்டிக டங்களைச் செநிப்பிக்கும் பிணியாகு' மெனவுங் கூறினார்.

(தா—ம்) ஈசுவர சிருட்டி யான பஞ்ச பூத பௌதிக முதலிய தத்துவங்கண், முத்திக்குச் சாதநமுஞ், சீவ சிருட்டி யான காமக் குரோதாதிகள், பவத்திற் கேதுவு மா மெனவு, மதற்கு யுத்தியுங் கூறின தாம். 56

(அ—கை) "ஈசுவர சிருட்டி யழிந்தாற் பிறவி நீங்காது, சீவ சிருட்டி யழிந்தாற் பிறவி நீங்கு" மென்றதற் கநுபவம் யா தெனில்?

ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர்பவ மொழிந்தார்க,
டேச காலதே கர்திக ளிருக்கவுஞ் சீவகா ரியமோக,
நாச் மாக்கிய விவேகத்தி னுயிரோடு ஞாநமுத் தர்களானார்,
பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசுபதி செயலன்றே.

(ப—ம்) பூருவம் பிரமப் பிரளயத்திலுஞ், நிநப் பிரளய மாகிற சுழுத்தியிலு, மீசுர சிருட்டி யான சராசரங்கள் கெட்டுப் போ யிருக்கவு, மிப் போது சராசர வுயிர்களுண்டாயிருப்பதாலு, மிராகத் துவேஷ சுக துக்க முண்டாவதாலும், ஒருவரு முத்தி யடைய வில்லையே யென்பார், 'ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர் பவ மொழிந்தார்க' ளெனவும், திதி காலத்திற், சாக்கிராவஸ்தையிற், றேசமுங், கால முந், தேகேந்திரியாதிகளு, மிருக்கவும், முளையைக் கிள்ளினவுடன் விரை கெடுவது போலச், சீவ சிருட்டி யாகிய காமாதியைச் சமாதி ஞாநத்தால், நீங்

கின பேருக்குப் பந்த நீங்கி யிருக்கின்றதே யென்பார், ''தேச கால தேகாதிக ளிருக்கவுஞ் சிவ காரிய மோக நாச மாக் கிய விவேகத்தி, னுயிரொடு ஞாந முத்தர்க ளானு' ரெனவும், புல்லை விட்டுப் பயிரைத் தின்ற பசுவை, யுடையவன் கட்டி யவிழ்த்தல் போலப், பிரமாநந்தத்தை விட்டு, விடயாநந்தத்தைப் புசிக்குஞ் சீவனைப், பவத்தி லிட்டு மோட் சங் கொடுத்தலால், 'பசுபதி' யெனவுங் கூறினுர்.

(தா—ம்) ஈசுர சிருட்டியான தநு வாதி யிருக்கச், சீவ சிருட்டியான காமாதி நசிக்கி னப்போதே வீ டடைதலாற், காமாதிகள் சீவச் செயலே யன்றிச், சிவச் செய லன் றென வநுபவ மூல மா யறிவித்த தாம். 57

**(அ—கை) சீவ சிருட்டியு, மீசுர சிருட்டியும், வே றென்றதற்குப் பிரமாண முண்டோ வெனில்.**

அச்சு வத்தமென் றேருமர மதிலிரண் டரும்பற வைகள்வாழ,
நச்சு மங்கோரு பறவையம் மரக்கனி நன்றுநன் றெனத்தின்னு,
மெச்சு மங்கோரு பறவைதின் னுதென வியங்கியப் பொருளாக,
வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவாயே. 58

(ப—ம்) இன்றைக் கிருப்பது நாளைக் கிருக்கு மென்னு நிலையில்லா தழிகின்ற மாயை என்னும் விருக்ஷ மென்பார், 'அச்சுவத்தமென் றேருமர' மெனவும், தேகத் தில் நிருவிகார மா யிருக்கின்ற வீசுரனும், விகாரமா யிருக் கின்ற சீவனுஞ், சீவித்துக் கொண்டிருப்பா ரென்பார், 'அதிலிரண் டரும் பறவைகள் வாழு' மெனவும், அதிற் சீவன் தேகத்தைத் தா னென் றபிமானித்துத், தேகாதி சகத் தைச் சத்திய மாய்க் கருதி, ராகாதி யுடன் கருமஞ் செய்து, விடயாநந்தத்தைப் புசிப்பா ரென்பார், 'நச்சு மங் கொரு பறவை யம் மரக் கனி நன்று நன் றெனத் தின்னு' மெனவும், நிருவிகார ராயு, நிச்சல ராயு, நித்திய ராயும், யாவரா



லும், புகழப்பட்டவ ராயு, மிருக்கின்ற வீசுரன், தேகாதி சகத்துக்கு விலட்சண ராய், விடயாநந்தம் புசியாது, சாட் சியா யிருப்பா ரென்பார், 'மெச்சு மங்கொரு பறவை தின்னு' தெனவுங் கூறினுர்.

(வி—ம்) அச்சுவத்த மென்பது, தேக மாகிய தலை கீ ழான மாயா விருட்ச மெனவும், அரும் பறவைக ளென் பது, ஒருவன் குதிரை மேற் செல்லக், கூடப் போகின்ற வரையுஞ் சேர்த்துக் குதிரைக்காரர் போகின்றுர்க ளென் பது போல, நிச்சலத்தா லருமை யான வீசனையும், பட்சி போற், சஞ்சல முடைய சீவனையுஞ், சேர்த்து, 'அரும் பறவைக' ளெனவுங், கூறின தெனவுங் கொள்க,

உ வியங்கியப் பொரு ளென்றது, (வட) திசைச் சொல்.

(தா—ம்) ஜீவேசுரர்களின் றூர தம்மிய மிஃ தெனச் சுருதி பகுத்துக் கூறுகின்ற தென்று தெரிவித்த தாம். 58

**(அ—கை) சீவச் செயலை, ஈசுரச் செய லாகக் கூறினு, லாகி யா தெனில்? 'அடைவார்கள்'**

**(அ—கை) சீவச் செயலை ஈசுரச் செய லாகக் கூறுது, சீவச் செய லாகக் காண்போருக்குப் பய னியா தெனில்?**

இந்தச் சீவனுல் வருமறு பகையெலா மிவன்செய லல்லாம,
லந்தத் தேவனுல் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார்க,
ளிந்தச் சீவனுல் வருமறு பகையெலா மிவன்செய லல்லாம,
லந்தத் தேவனு லன்றெனும் விவேகிக ளமலவீ டடைவாரே. 59

(ப—ம்) ஒரு புருடன் திருடிய திருட்டை, யவனுக் குபகாரஞ் செய்பவனு, மெசமானு மா யிருக்கின்றவன் மீது சுமத்துகிறதனு, லவனுக்கு இகத்திற் றுன்பமு. நிந் தையு, மறுமையில் நரகமு முண்டாவது போற், சத்துரு வெப்படித் துன்பங் கொடுப்பானே, அப்படிப் பிறவித் துன்பங் கொடுப்ப தாகிய தமது காமாதிச் செயலைச், சரு வஞ்ஞத்வாதி குண மகிமை யுடைவ னுயு. மோட்சத்துக் கேது வாய்த் தனக்குத் தநு வாதி கொடுத் துதவி செய்து அடக்கி யாளுகின்றவனுயு. மிருக்கின்ற, வீசுரன் செய லாகக் கூறு மறிவிலிக, ளிகத்திற் றுன்பமு, நிந்தையு. மறு மையில் நரக துன்பமு மடைவார்க ளென்பார், 'இந்தச் சீவனுல் வறுமறு பகை யெலா மிவன்செய லென்னும லந் தத் தேவனுல் வரு மென்ற மூடர்க ளதோகதி யடை வார்க' ளெனவும். திருடினவன், திருட்டை யந்நியர் மீது சுமத்தாது, தன் செய லென்று, மது துன்பந் தருவ தான தீய தொழி லென்று மறிந்தா, லதன் பின், திருட்டுச் செய் யாது விடுத்து, நன்மை யான தொழிற் செய்து, சுகத்தை யடைவது போற், றமது காமாதி குணங்களை, யீசுரச் செய லென்று கூருது, தமது செய லென்று, மது துன்பந் தருவ தாகிய தென்று மறிந்தா, லவ் வறிவு, ரதன் பின் னத் தீ தான காமாதி குணங்களை விடுத்து, வைராக் கியாதி குணங்களை யப்பியாசித்துச், சற்குருவை யடைந்து, சிரவணுதிகள் செய்து, தத்துவ ஞானம் பெற்று, அதனுற் சரீர மந்நிய, மநித்திய மாதியான மல மில்லா திருக்கின்ற, நிந்மல மாகிய பரமோட்சத்தை யடைவ ரென்பார், 'இந்தச் சீவனுல் வரு மறு பகை யெலா மிவன் செய லல் லாம லந்தத் தேவனு லன் றெனும் விவேகிக ளமலவீ டடைவாரே' யெனவுங் கூறினர்.

(தா—ம்) காமாதிகளை, ஈசுர சிருட்டி யெனக் கருதினு, ணிரயத் துன்பமுஞ், சீவ சிருட்டி யெனக் கொண் டவற்றை விசா ரத்தாற் செடுக்கின், முத்தி யின்ப முண்டா மென்ற தாம்.

59



(அ—கை) முன்பு வீசுர சிருட்டி பொது வென் றமையா, லவரும் பொது வாக வேண்டுமே, பொதுத் தா னெனிற், சீவர்க ளிடத்திற் பட்ச பாதம் வருவானே னென்று, வினுதலு, மதற் குத்தரமுங், கூறல்.

நலமெய் யையனே யெல்லவர் தந்தெய்வ நாயகன் பொதுவானுற்,
சிலரை வாழ்வித்துஞ் சிலரொடு கோபித்துஞ் செய்வதே னென்ற
குலவு மக்களைத் தந்தைபோற் சிட்டரைக் குளிர்ந்துதுட் [யேற்,
[டரைக்காய்வர்,
கலைக ணல்வழி வரச்செயுந் தண்டமுங் கருணையென் றறிவாயே. 60

(ப—ம்) கருணையினுற் குழந்தைகளுக் கிதமே செய் கின்ற மாதா, ஒரு குழந்தையி னிடத்திற் பிரிய மாயு, மற் றொரு குழந்தையி னிடத் தப்பிரிய மாயு மிராதது போலப், பிரமாதி தேவதைகளுக்குத் துன்ப நீக்கி யின்பங் கொடுக் கின்றயீசுரன். ஆண் பெண் ணலி யான சகல சீவர்களுக்குஞ் சம மானுற், சில சீவர் சுக மடையும்படிக்குஞ். சில சீவர் துன்ப மடையும்படிக்குஞ் செய்விக்க லாகாதே யென்பார், ''எல்லவர்க்குந் தெய்வ நயகன் பொதுவானுற் சிலரை வாழ்வித்துஞ் சிலரொடு கோபித்துஞ் செய்வதே'' னென வும், யாவருங் கொண்டாடும்படி யான பகுத் தறி வுடைய பிதா, நன்கு செய்யுங் குழந்தையினிடத்திற் கிருபையுந், தீங்கு செய்யுங் குழந்தையி னிடத்திற் கருணையினுற் கோப முஞ் செய்வது போல, ஈசுரனும் விதித்ததை யநுட்டிக் குஞ் சற்சநருக்கு இதஞ் செய்து, நிடேதித்ததைச் செய் கின்ற துர்ச்சநருக்குக் கருணையினு, லகிதஞ் செய்விப்பா ரென்பார், ''குலவு மக்களைத் தந்தை போற் சிட்டரைக் குளிர்ந்து துட்டரைக் காய்வ'' ரெனவும். வண்ணுன் வஸ்த்திரத்தை யுவர் பிடித்து வெள்ளாவி வைத்துக் கல்லி லடிப்பது, அவ் வஸ்த்திரத்தி னழுக்கை போக்கு நிமித்தமே யன்றி, யதைக் கிழிப்பதன் பொருட் டல்லாதது போல, ஈசுரனுந் துர்ச்சநரை யியமனுற் றண்டித்துப் பிறவியைக்

கொடுத்துத், தாரித்திரியம் ரோக மாதியால் வருத்துவது, பே ரருளா லவர்க ளுடைய பாவத்தை நீக்கிச், சாஸ்த்திரங் களிற் கூறிய நன்மார்க்கத்தை யநுட்டித்துச் சுகத்தை யடையும்படி செய்விக்கும் பொருட்டே யன்றி, யச் சீவர் களைக் கெடுக்கும் பொருட் டல்ல வென்பார், "கலைக ணல்வழி வரச் செய்யுந் தண்டமுங் கருணை யென் றறி வாயே" யெனவுங் கூறினர்.

(தா—ம்) சீவர்களை ஈசுரன் வருத்துகின்றது, மச் சீவர்கள் சுக மடையும் பொருட்டுச் செய்யுங் கிருபையே யன்றிப், பட்ச பாத மன் றென்ப தாம். 60

**(அ—கை) அச் சங்கைக்கு, வே றொரு பிரகாரமா யுத்தரங் கூறல்.**

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்களல் புனன்மூன்றுந்,
தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளு,
மனைய விசனு மடைந்தவர்க் கருள்செய்வா ரகன்றவர்க் கருள்
[செய்யா,
ரினைய துற்றங்க ளேவர்துற்ற மாதுமேன் றெண்ணிநீ யறிவாயே. 61

(ப—ம்) விலங்கு போடப்பட்டிருக்கு மொருவன், நினைத்த விடத்துக்குச் செல்லுஞ் சுதந்தர மின்றி வருந்து வது, மவ் விலங்கு நீங்கினவன், நினைத்த விடத்துச் சென்று சுக மடைவதும் போல, ஏடணைத் திரய மிருந்தால், நினைத் தபடி யெவ்வித நன்கையு மநுட்டித்துச் சுக மடைய வொட்டாது, அவை நீங்கினால், நினைத்தபடி யவற்றை யநுட்டித்துச் சுக மடைவதா யிருப்பதால், "மனைவிலங்" கென்றார்.

(தா—ம்) சகல பேருக்கும் பொதுவா யிருக்கின்ற கற்பக விருட்சஞ், செல, மக்கினியை யடைந்தோர், தாரித்திரிய, தாக, சீதத்தை நீங்குவது, மடையாதோர் நீங்காது துன்புறுவது, மக்



கற்பக விருட்சாதியின் பட்ச பாதத்தி னின்மை போலச், சகல சீவருக்கும் பொதுவா யிருக்கு மீசுரனை, யவன் விதித்தபடி யநுட் டித் தடைந்தோர், ரநிட்ட நீங்கி, யிட்டம் பெற் றிருப்பது, மங்ஙன மவனை யடையாதோ ரநிட்ட நீங்கா திருப்பதுமே யன்றி, யவனி டத்திற் பட்ச பாத மின் றெனவும், ஈசனை யடையாத தநு லநிட்ட நீங்காதிருப்ப தச் சீவரின் குற்றமே யெனவு மறிவித்த தாம். 61

**(அ-கை) அக் குற்ற நீங்குவதற் கே தியா தெனில்.**

ஒன்று கேண்மக னேபுமான் முயற்சியா லுறைத்துமா நுடர்க்கீச,
னன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே,
சென்று துட்டவா தனைவிட்டு விவேகியாய்ச் சேநித்தமா யையைத்
[தள்ளி.
நின்று ஞாதத்தை யடைந்தவர் பவங்கள்போ நிச்சய மிதுதானே. 62

(ப—ம்) எம் முயற்சி செய்பவருந் திரி கரண மொத் துத், தேகாபிமாந மின்றிப், பிரியமுட னிரந்தரஞ் செய்த லாலே, யந் தந்தப் பய னடைதலாலு, மங்ஙனஞ் செய்யா விடி லடைத லின்மையாலு, மே லெழுந்த வரிசையாய் முயற்சி செய்யக்கூடா தென்பார், "உறைத்" தெனவும், பிரமாநந்தங் கொடுக்கவே, காண்டத் திரய மாக, ஈசுவர னுண்டாக்கிய சுருதியில், நிடேதித்ததை விட்டு, விதித் திருக்கின்ற நித்திய நைமித்தியாதி கருமத்தையும், பிரமாதி தேவதைகளி னுபாசனையையு, நித்தியாநித்திய வஸ்து விவேக மாதி சாதநத்தையு மப்பியாசித் தென்பார், "ஈச னன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்து" எனவும், பிரமாநந்தம் பெற் றிருக்கின்ற சத்துக்களைச் சர ணடைந்து, ஆத்த முதலிய நான்கு பணிவிடையும், விட்டு நீங்காது செய்து நின்று, அவர்கள் கருணையா லநுக்கிர கிக்கு மகா வாக்கிய வுபதேசம் பெற்றுச், சிரவணாதி யப் பியாசித் தென்பார், "நல்லவர் பின்னே சென்" றெனவும்,

மைத்திரி கருணை முதிதை யுபேட்சை யாதி சுத்த வாசனை யாற், காமக் குரோத லோபாதி யசுத்த வாசனையை நீக்கி யென்பார், "துட்ட வாதனை விட்" டெனவும், ஆத்மா நாத்மாக்களி னிலக்கணத்தை ஐயந் திரி பின்றி நன்றாய்ப் பகுத் தறிபவனாய்ப், பகுத் தறிந்த பிரகாரமே திட நிச்சய மா யிருந்து, அத்தியாச மாய்த் தோற்றிய அஞ்ஞானத்தை நீக்கி, யப்பிரதிபந்தாபரோட்ச ஞானத்தைப் பெற்றவர்கள், செநந மரணாதி சம்சாரத்தை நீக்குவா ரென்பார். "விவேகி யாய்ச் செநித்த மாயையைத் தள்ளி நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள் போ" மெனவும், இவ் வண்ண நடந்த பேருக்கு மோட்ச முண்டாகுமே தவிர, மற்றைப் பேருக்கு மோட்ச முண்டாகா தென்பார், "நிச்சய மிது தானே" எனவுங் கூறினார்.

(வி—ம்) 'உறைத்து' என்பதை நடந்து சென்று விட்டு விவேகி யாய் நின்று தள்ளி யடைந்தவர் என்பவற் றோடுங் கூட்டுக

(தா—ம்) சீவ னீசுர ரநுக்கிரகத்தாற், றனது திட முயற்சி யுடன், கன்ம காண்டத்தில் விதித்த யாகாதி கருமத்தைச் செய்து, பாவ நீக்கி, யுபாசநா காண்டத்தில் விதித்த சிவன் முத லான தெய்வ வுபாசனையைச் செய்து, யோகாக்கிர சித்தம் பெற்று, ஞாந காண் டத்திற் கூறிய, சாதந சதுட்டயம் பொருந்தி, ஞாநாசாரியனை யடைந்து பணிவிடை செய்து, விட்டு நீங்காது நின்று, அவரருளாற் கூறு மகா வாக்கியோபதேசம் பெற்றுச் சிரவணாதிக ளநுட்டித்து, மைத்திரியாதி வாசனையாற், காமாதி வாசனையை நீக்கி, யாத்மா நாத்மாவி னிலக்கணங்களைப் நன்றாய்ப் பகுத்தறிந்து, அஞ்ஞானத்தை நீக்கி, ஆத்ம ஞானத்தைப் பெற்றுற், செநந மரணாதி சம்சார நீங்கு மென்ப தாம்.

62

(அ—கை) யாதினா லிந்த ஞாந முதிக்கு மென வினாதலு, மதற் குத்தரமுங், கூறல்.



இந்த ஞாநந்தான் வருவதெப் படியெனி லிடைவிடா விசாரத்தால்,
வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனில் மநாதியாஞ் சரீரத்தி,
லிந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டுமொன் றக்கூடும்,
பந்த மேதுவீ டேதென வுசாவுதல் பகர்விசா ரமதாகும். 63

(ப—ம்) கர்ம பத்தி யோகத்தினா லன்றி, நிரந்தர நெடுங் கால நேசத்துட னாத்மாநாத்ம விசாரணை செய்கின்ற தனாலேயே தத்துவ ஞாந முண்டாகு மென்பார், 'இடை விடா விசாரத்தால் வந்தடைந்திடு' மெனவும், காணாது போன பொருளை, அது வெந்த விடத்திற் காணாதே போ யிற்றோ, வந்த விடத்திற் றேடி யடைய வேண்டியது போலச், சரீரத் திரயத்திலே மறைபட் டிருக்கு மாத்ம ஞாநத்தை யடைவதற், கச் சரீரத் திரயத்திலேயே விசாரிக்க வேண்டு மென்பார், 'மநாதி யாஞ் சரீரத்தி' லெனவும், தேகேந்திரிய பிராண மநோ புத்தி அவித்தை சீவன் கூடத்த ராகிய விவைகள் 'நா னா' னென் றிருப்பதால், இவைகளில், நா னென்கிற பதத்துக் கருத்த மாகிய தாத்மா யார்? அருத்த மில்லாத அநாத்மா வெது, வென விசாரித்த லென் பார், 'இந்த நா னெவ' னெனவும், இவைக ளெல்லா மறி வாகத் தோற்றுவதா லிவைகளி லறிவாவ தேது. அறி வில்லாத தெது, வென விசாரித்த லென்பார், 'சித் தெது சட மெது' வெனவுங் கூறினார்.

(வி—ம்) மநாதியாஞ் சரீர மென்ற பதத்துக்குக், கேழ்வரகு முதலியவை சீரணித்துப் போதல் போற், றூல சரீர மந்ந மின்மை, மிகுதி, வியாதி, முதுமையினாலுஞ், சூட்சும சரீரம், ராகத் துவேஷாதியின் சங்கோசத்தினாலுங், காரண சரீரம் யா னென தென்கின்ற வபிமாநத்தின் சங் கோசத்தினாலுஞ் சீரணித்துப் போவதால், அவைகளுக்குச் சரீர மெனப் பேர் வந்த தெனவும், அறிவு சொருபமா யகம் பதத்துக் கருத்தமா யிருக்கிற ஆத்மா, அறி வில்லாததா, யகம் பதத்துக் கருத்த மல்லாததா யிருக்கிற, அநாத்மா

வாகிய தூல தேகங், கருமேந்திரய, ஞாநேந்திரியம், பிராணுதி வாயவு, மநம் புத்தி யவித்தை சீவனுடன் சேர்ந்து, 'நான் பருத்தே, னிளைத்தே, னுன் பேசினேன். கொடுத்தே, னுன் கேட்டே, னுன் கண்டே, னுன் பசியா யிருக்கின்றேன், தாகமா யிருக்கின்றேன், சங்கற்பித் தேன், விகற்பித்தே, னுன் நிச்சயித் தே, னுன் அபிமாநித்தே, னுன் பிரியன், மோத, னு னறிந்தே, னறியே' னென்பது பிராந்தி சித்த வபேத மான பந்தத்தி னிலக்கண மெனவும், இவைகளைப் பிரிந்து, 'நா னசரீரி. நா னிரிந்திரிய, னப் பிராணன், அமநசு' என்பன முதலியன சுபாவ சித்த பேத மான முத்தியி னிலக்கண மெனவும் கொள்க.

*(தா—ம்) சிற் சட விலக்கணங்களைப் பகுத் தறியும் விசாரமே ஞாந முதிப்பதற்கு மூல மென்ப தாம்.* 63

**(அ—கை)** கன்ம முக்கிய மென்னுங் கொள்கை நீங்கும் பொருட்டு, ஞாந முதிப்பதற்குச், சற் கரும மிருக்க, விசார மியா துக் கென்ற விஞவு, மதற் குத்தர முங், கூறல்.

போன சேந்மங்க ளனிலநுட் டித்தநற் புண்ணிய பரிபாக,
ஞாந மாக்குமே விசாரமே னென்றிடி னுழைத் திடக்கேளா,
யான புண்ணிய மீசுராற் பணஞ்செயி லசுசிபோஞ் சுசியாகு,
மாந தம்பினை விசாரித்து ஞாநத்தை மருவுமென் றறிவாயே. 64

(ப—ம்) வருணுச்சிரமங்களுக் குரித் தான சற் கருமங்களைப் பகவத்ப் பிரீதி யாகச் செய்யிற், காம வெகுளி மயக்க மாதி யசுத்த நீங்கி, நிராசை பொறுமை யுதார மாதி சித்த சுத்தி யுண்டாகு மென்பார், 'ஆன புண்ணிய மீசுராற் பணஞ் செயி னசுசி போஞ் சுசி யாகு' மென்ருர்.



(வி—ம்) 'ஆன புண்ணிய' மென்ற பதத்துக்குச் சற் கருமங்க ளந் தந்த வருணுச்சிரமத்துக் குரித்தானதைச் செய்யலாமே தவிர, அந்நிய வருணுச்சிரமத்துக் குரியதைச் செய்யக் கூடா தெனவும், பத்தி நிராசை கருணை ஞாந மாதி மாத்திரஞ் சகல வருணுச்சிரமத்துக்கும் பொது வெனவுங் கொள்க.

*(தா—ம்) நிட்காம மாகச் செய்யும் சற் கரும மானது சித்த சுத்தியையும், விசார மானது ஞாநத்தையுங் கொடுக்கு மாதலால், விசாரமே வேண்டு மென்ப தாம்.* 64

**(அ—கை) ஞாநத்துக்கு விசாரமே முக்கிய மாய் வேண்டு மென்ப துறுதிப்படும் பொருட்டுச் சீடன் விஞதல்,**

பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமு மணிமாதி,
சித்தி யுந்தவ நிட்டையும் யோகமுந் தியாநமுஞ் சாருப,
முத்தி யுந்தரும் விசித்திர கருமங்கண் மோகமாத் திரந்தள்ளும்,
புத்தி தந்திட லருமையோ விசாரமேன் புண்ணிய குருமூர்த்தி. 65

(ப—ம்) தேகாதி சகலப் பிரபஞ்சத்திலும், பற் றற்றிருக்கின்ற சகலத் தியாக மாகிய மே லான தருமத்தை யுடைய தேசிக ராசனே யென்ரு னென்பார், 'புண்ணிய குரு மூர்த்தி' யென்ருர்.

*(தா—ம்) பத்தி யாதிகளைப் போல, ஞாநத்தையுங் கருதி அப் பத்தி யாதி பலப் பேற்றையுங் கொடுக்கச் சாமர்த்திய முள்ள கருமங்கள், ஞாந மொன்றையுந் தாராதோ, விசாரம் யாதுக் கென விஞவின தாம்.* 65

**(அ—கை)** அவ் விஞவிற் குத்தரங் கூறுவான் ருெடங்கித் திட்டாந்தங் கூறல்.

வேட மாறிய பேர்களை யறியவே வேண்டினுன் மகனேகேள்,
கூட மாமவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந் தறியாம,
லோடி யுந்துதித் துந்தலை கீழ்நின்று முயர்ந்தகம் பத்தேறி,
யாடி யும்பல கருமங்கள் செய்யினு மவருண்மை தெரியாதே. 66

(அ—கை) தாட்டாந்தங் கூறல்.

இன்ன வாறந்தப் பிரமத்தை யறிவிக்க மிலக்கணத் தால்வேதஞ்,
சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல் படித்தாலு,
மந்ந தானங்க டவங்கண்மந் திரங்களா சாரங்கள் யாகங்க,
ளென்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற திவைகளால் வாராதே.

(ப—ம்) தேகேந்திரிய பிராண மனோ புத்தி யவித்தை சீவனைத் தா னென் றறியாம, லிவைகளுக்கு விலட்சண மாய்ச், சத்துச் சித்தாநந்த நித்தியம் பூரண மான வாத்மா வைத் தா னென்ன வறியு ஞாந மென்பார், 'தன்னைத் தா னறிகின்ற' தென்றார்.

(தா—ம்) ஒருவ னுண்மையை யறியு முணர்வு, விசாரிப்பதி லுண்டாகுமே யன்றித், தொழிலினு லுண்டாக மாட்டாதது போல, ஆத்ம சொரூப 'நா' மென் றறியு ஞானமு, மாத்மாநாத்ம விசா ரணையா லுண்டாகுமே யன்றி, அந்ந தாந முதலிய சருமஞ் செய்வ தனு லுண்டாகா வெனத் திட்டாந்த மூலமா யறிவித்த தாம். 6

(அ-கை) ஞாநத்தினுலேயே, அஞ்ஞாந நீங்கவேண்டு மென்பதை நன்று யறியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

துளங்கு தர்ப்பண மழக்கறக் கைக்கொண்டு துலக்கினுற் போமன்றி,
விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினுர் விமலதே சிகழர்த்தி,
களங்க மாதமஞ் ஞாநழ மப்படிக் கருமத்தாற் கழவாம,
லுளங்கு றித்தஞா நத்தினு லேப்படி யொழியுமீ தருள்வீரே. 68

(ப—ம்) சூரியனிடத்தி லுண்டாகிய மேகஞ். சூரி யனைத் தோன்ருதபடி மறைத்தல் போலப், பரிபூரண மாய்ச் சுயம்பிரகாசமா யிருக்கின்ற வாத்மாவி னிடத்தில், விவர்த்த ரூப மாய்த் தோன்றிய தாயு, மவ் வாத்ம சொரூபத்தையே, கண்ட மாயுஞ் சட மாயு மிருக்கின்ற, தேகாதிக ளாகத் தோற்றுவித்து, மறைக்கின்ற தாயு மிருக்கின்ற, அப்பிரகாச முடைய அறியாமை யென்பார், 'களங்க மாகு மஞ்ஞாந' மென்றார்.

(தா—ம்) அஞ்ஞாநங் கருமத்தா லன்றி, ஞாநத்தா லெங்ஙன நீங்கு மெனத் திட்டாந்த மூல மாய் வினுவின தாம். 68

(அ—கை) அவ் வினுவிற் குத்தர மாக வுபமாநங் கூறல்.

தர்ப்ப ணத்தினிற் களிம்புவாத் தவமலஞ் சகசமா தலின்மைந்தா,
கற்ப ளிங்கினிற் கருநிறஞ் சகசமாய்க் கிறுத்தன் றரோபஞ்,
தர்ப்ப ணத்தினி லழுக்கற வேண்டினுற் சாதநத் தொழில் வேண்டுங்,
கற்ப ளிங்கிலா ரோபமே கிறுப்பெனக் கண்டிட மநம்போதும். 69

(வி—ம்) மந மாகிய தர்ப்பணத்திற்,, பாவ மாகிய வழுக்கு நீங்கச், சற்கரும மாகிய சாதநம் வேண்டும், உண்மை யறிவாநந்த சொருப மாகிய படிகத்தி, லாகந்துக மான வஞ்ஞாந மாகிய கறுப்பு நீங்கத், தத்துவ ஞாந மாகிய மநம் போது மெனவும் கொள்க. 69

(அ—கை) அதற் குபமேயங் கூறல்.

''வாஸ்த்தவ மன்றே''

(அ—கை) அஞ்ஞாந, மத்தியாச மானுலுங், கரு மத்தால் நீங்காதோ வெனில்.

இந்து மப்படிச் சச்சிதா நந்தத்தி லிடர்சடம் பொய்முன்றுந்,
தந்த மாயையின் கற்பித மன்றியே சகசவாத் தவமன்றே,
பங்க மாதமஞ் ஞாநத்தைக் கருமங்கள் பகைசெய்யா துறவாக்தந்,
துங்க ஞாநமே கருமவஞ் ஞாநத்தைச் சுடுகின்ற நெருப்பாமே. 70

(ப—ம்) அவத்தாத் திரயங் கெட்டுங், கெடாத வுண்மை யாயு. மவத்தாத் திரயத்தை யறிகின்ற வறி வாயு, மவத்தாத் திரயத்தைக் கைவிட்டுங் கைவிடப்படாத வின்ப மாயு, மெப் போது மிருக்கின்ற வாத்ம சொருபத்தில், நான் சில வருஷத்துக்கு முன் னில்லேச், சில காலத்துக்குப் பின் னிறந்து போவே னென் றசிர்த மாயும், நானின்னதை யறியே னென் றறியாமை யாயு, நான் துக்கியாயிருக்கின்றே னென்று துன்ப மாயு, மூன்று தேக வத்தியாசத்தி னலும், ஏகதேச விருத்தி யுண்டாக்கும் போதுந், தோற்றும் அஞ்ஞாநம். படிகத்திற் கறுப்புப் போ, லத்தியாசமே யன்றித், தர்ப்பணத்திற் களிம்பு போ, லுண்மையல்ல வாகையா, லதைக் கெடுக்க ஞாந மாத்திரம் போதுங், கருமங் தேவை யில்லே யென்பார், 'இங்கு மப்படிச் சச்சிதாநந்தத்தி லிடர் சடம் பொய் முன்றுங் தங்கு மாயையின் கற்பித மன்றியே சகச வாஸ்த் தவமன்றே' யெனவும். ஆண் பெண் ணென்கின்றதை யேகதேச (சாமாங்ய மாக) மட்டும் வே ருகத் தோற்றுவிக்கு மிர விருளே, மேக மிகச் செய்து, ஏக தேசங் (சாமாங்யங்) கூடத் தோன்ருமற் செய்வது போலத், தேகங் தேகி யென்கின்றதை யேக தேச மாத்திரம் (சாமாங்ய மாக) வே ருகத் தோற்றுவிக்குங் குற்ற முள்ள வஞ்ஞாநத்தைக், கருமங்கள் ஏக தேசயுமே தவிரக், கெடுக்க மாட்டா தென்பார், 'பங்க மாகு மஞ்ஞாநத்தைக் கருமங்கள் பகை செய்யா துற வாக்கு' மெனவும். சூரிய வுதயமே' யவ் வந்தகாரத்தையு, மேகாவரணத்தையு நீக்கி, ஆண் பெண் ணென்கின்றதை நன் ருய் வேறுபடுத்தித் தோற்றுவிப்பது போல, வுயர்வான



அப்பிரதிபந்தாபரோட்ச ஞாநமே அஞ்ஞாநத்தையுங், கருமத்திற் சத்திய புத்தியையுங் கெடுக்கு மென்பார், 'துங்க ஞாநமே கரும வஞ்ஞாநத்தைச் சுடுகின்ற நெருப்பாமே' யெனவும் கூறினுர்.

*(தா—ம்) செப்புக் கண்ணுடியிற் களிம்பு போ, லாத்மாவுக் கஞ்ஞாநஞ் சகசமா யிராமற், பளிங்கிற் பஞ்ச வன்னம் போ, லாரோப மாதலா, லதை யொழிக்க ஞாநம் போதுங், கருமங் தேவை யில்லே யெனவும், அக் கரும மஞ்ஞாநத்தை மிகச் செய்யு மெனவும், ஞாநமே யவ் வஞ்ஞாநத்தையுங், கருமத்திற் சத்திய புத்தியையு நீகரு மெனவு மறிவித்த தாம்.* 70

## (அ—கை) முற் கூறியதை வற்புறுத்தல்.

மனேக்துள் வைத்தபண் டங்களே மறந்தவன் வருடநா றழுதாலு,
நினேத்து ணர்ந்தபின் கிட்டுமப் படியிந்த நிர்மல வர்நமாவு,
மநர்த்த மானதன் மறதியைக் கெடுத்துத்தன் னறிவினுற் காணுமற்,
கநத்த கன்மங்க ளூறுகஞ் செய்யினுங் காணுமோ காணுதே. 71

(ப—ம்) அபரோட்சமாய், அவித்தை மாயை யற்றுப், பரிபூரணமா யிருக்குஞ் சைதங்ய மென்பார், 'இந்த நிர்மல வாங்மா' வெனவும், பிரத்தியக் கபிங்ந பிரம சொருபமாகிய தன்னே மறைத்துத் தேகாதி செகத் தாகத் தோற்றுவித்துத் தீங்கு செய்யு மஞ்ஞாந மென்பார், 'அநர்த்தமான தன்மறதி' யெனவும் கூறினுர்.

*(தா—ம்) ஞாபகத்தான், மறதி நீங்கின், முன் வைத்த பொருள் வெளிப்படு மல்லது, தொழிலால் வெளிப்படாதது போல, விசார ஞாநத்தா லஞ்ஞாந நீங்கின், முன் னுள்ள பிரமப் பொருள் வெளிப்படு மல்லது, வெகு கால மகத் தான கருமங்களேச் செய்யினும் வெளிப்படா தென்ப தாம்.* 71

(அ—கை) கன்மஞ் சுகந் தருமோ? தராதோ? வென் றறியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

நன்மை யாங்குரு வேசுகந் தருவது ஞானமே யெனும்வேதந்.
தன்ம பாவமிச் சிரங்களாற் றேவர்க டருவிலங் குகண்மாந்தர்,
சேந்ம மாதவர் சாதியா சாரமே செய்தவஞ் சுகமென்றுங்.
கன்ம காண்டத்தில் விதிப்பதேன் விதிக்கின்ற காரண முரையீரே.72

(ப—ம்) சகல சீவருக்குஞ் சந்மார்க்கத்தைப் பயிற்றுவித்துத் துந்மார்க்தத்தை நீக்கிச் சத்தா மாத்திர சொருபத்தைக் கொடுக்கின்ற தேசிகரே யென்பார், 'நன்மையாங் குருவே' யெனவும், மநோ வாக்குக் காயங்களாகிய முக் கரணங்களாலுஞ் செய்த புண்ணியத்தால்யட்ச ராட்சத பிசாசு முத லிரணியகருப்பன் வரையிற் றேவப் பிறவியும், பாவத்தால் தாவரம், நீர் வாழ்வன, ஊர்வன, பட்சி, மிருக மாகிய ஐவகைப் பிறவியும். புண்ணிய பாவக் கலப் பாகிய மிசிரத்தால், சண்டாளன் முதற் பிராமணர் வரை மாநுடப் பிறவியு முண்டாகு மென்பார், 'தந்ம பாவ மிசிரங்களாற் றேவர்கள் தரு விலங்குகண் மாந்தர் செந்ம மாகுவ, ரெனவுங் கூறினர்.

*(தா—ம்) சுகத்தை ஞானமே கொடுக்கு மென்ற வேதங், கன்மமுங் கொடுக்கு மென்ப தியாதினு லென வினவின தாம்,* 72

(அ—கை) அவ் வினுவிற் குத்தர மாக, அங்ஙனம் விதித்த வேதத்தின் னபிப்பிராயம் வே றெனக் கூறுதல்

திநமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட மெதிர்காட்டிக்,
கனம ருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணைநற் றய் போலே,
மனைய றங்கள்செய் மகங்கள்செய் நின்றேன்று மலர்ந்தவா சகஞ் சொல்லு,
நினைவு வேறுகாண் சுவர்க்கமா மிகளந்த நிண்ணயந் தேரியீரே.73



(ப—ம்) 'திநமு மண்ணுகர் பிள்ளை' யென்பதனு, லிடைவிடாது விடய போகத்தைப் புசிக்கு மறிவிலி யென்பதும். 'நோ' யென்பதனாற், றுன்ப முள்ள செநந மரண மென்பதும். 'இரங்கி' யென்பதனுல், மற்ற நூல் போலிராது, 'அருளுற்' றென்பதுந், 'தீம் பண்ட மெதிர் காட்டி' யென்பதனுல், மேலான விடய மாகிய சுவர்க்காதி பதங்களை முன்னர்க் காட்டி, யெனவும். 'கன மருந்துகளொளித்து வைத், தென்பதனுற், பவ நீங்கும் பிரமாநந்தத்தைப் பின் காட்டும்படி மறைத்து வைத் தென்பதும், 'அழைக்கின்ற கருணை நற்று' யென்பதனுல், மற்ற நூல் போ லின்றி. யவ் வாநந்தங் கொடுக்கப் பல தரங் கூப்பிடுகின்ற வேத மென்பதுங் கொள்ளக் கிடந்தன.

*(தா—ம்) வேதம் இக வின்பத்தை நீக்குவான், பர வின்பத்தைக் கூறி, யது நீங்கின பின், னிதையு நீக்கிப், பரம சுகத்தை யடைவிக்கும் பொருட் டங்ஙனங் கூறின தென்ப தாம்.* 73

**(அ—கை) வேதம், போக போக்கியங்களை யநுபவிக்க விதியா தெனவு, மதற் குவமையுங், கூறல்.**

போக மாருயிர் கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பேகா,
ணுக மங்களுஞ் சுபாபவத்தை விதிக்குமோ வத்தனை தேரியாதோ,
காக மேகறுத் திடுநேருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ,
வேக வாயுவே யசையென வோருவரும் விதித்திட வேண்டாமே.74

(ப—ம்) அறி வின்மையா, லுயிர்கள் தங்களுக் கியல்பாகக் கருதிக் கொண்டிருக்கும் அருந்தல் பொருந்தலாகிய போகத்தை, வேதம் விலக்குமே யன்றி, விதிக்குமோ வென்பார், 'போக மாருயிர் கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பே கா ணுக மங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ' வெனக் கூறினர்.

(தா—ம்) வேதம் போக போக்கியமே பய ஞன கன்மத்தை விலக்கினதே யன்றி, விதித்த தன் றென்ப தாப். 74

**(அ—கை) வேதத்தி னபிப்பிராயம் வே றென்றதை விரித்துக் கூறல்.**

கள்ளு முனுநீ விரும்பீனல் மகங்கள்செய் காமத்தின் மநதானற்,
கோள்ளும் பெண்டோடு கலவிசேய் யெனிலிவண் துறையெலாந்
[தோடானென்றே,
தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சகலமுந் தவிர்வதே கருத்தாதும்,
விள்ளு மிவ்விதீ யேனெனி லபூருவ நியமாம் விதியன்றே. 75

(ப—ம்) நிரந்தர மது மாமிசம் புசிப்பவனையு, மநந் தம் ஸ்திரியுடன் கூடுகின்றவனையு. மத்தியந்தம் விலக்கிறுல் விடுக்கா, ஞகையால், நரக துன்ப மில்லா திருக்கத் தக்கதா, யாகாதி செய்து, மது மாமிசத்தைப் புசி, கலியாணஞ் செய்த மனைவியுடன் கூடு, என்று விதித்தா லங்ஙனஞ் செய்வதே தவிர, மற்றை மது மாமிசத்தைப் புசியான், மற்றைப் பெண்களைக் கூடா, னென்று கருதி விலக்கத் தொடங்கிய வேதஞ், சம்மதி போற் கூறிற் றென்பார், கள்ளு மூனுநீ விரும்பினுல் மகங்கள் செய் காமத்தின் மந தானுற் கொள்ளும் பெண்டொடு கலவி செய் யெனி லிவண் குறை யெலாந் தொடா னென்றே தள்ளும் வேதத்தின் சம்மத' மென்ருர்.

(தா—ம்) அருந்தல், பொருந்தல், முழுமையும் விலக்குங் கருத்துள்ள வேத மானது, 'யாகஞ் செய்து மது மாமிசத்தைப் புசி' யென்றும், 'மணஞ் செய்த ஸ்திரியைக் கூ' டென்றும், பூருவ பட்ச மாக நியம மாய் விதித்த தென்ப தாம். 75

**(அ—கை)** முற் கூறியதை வற்புறுத்திச், சித்தாந்தைக் கூறல்.



மதுவீ றைச்சிக ளுண்ணேன்ற சுருதிபின் மணந்துபா ரேனல்
[பாராய்,
மிதுந விச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற விதிபாரா,
யிதையும் விட்டேரழி யதிநயிட் டிகவந்நிக் கிகழ்ச்சியற் றதும்பாரா,
யதைய றிந்துகன் மங்களா சைகளோழிந் தாநந்த மடைவாயே. 76

(ப—ம்) மந்திர லோப, கிரியா லோப, திரவிய லோப மின்றி, யாகாதி செய்து, மது மாமிசத்தைப் புசியாதிருக்கச் செய்யும் பொருட்டு மது மாமிசத்தைப் புசி யென்ற வேதந் தானே, யிவ்விடத்தில் மது மாமிசத்தைப் புசித்தாற், சொர்க்கத்தி லமுதாதி போகங் கிடையாது, கிடைக்கினு நெடுங்கால மிகுதியாய்க் கிடையாது, ஆகையா லப் போகம் புசிப்பதற் காக, 'ஆக்கிராணித்து விட்டுவி' டென்று கூறுவதைக் காண்பா யென்பார், 'மது விறைச்சிக ளுண் ணென்ற சுருதி பின் மணந்து பாரெனல் பாரா' யெனவும், விவாகஞ், செய்த ஸ்திரீயுடனு, நினைத்த போ தெல்லாங், கலவி செய்யும் பொருட்டுக், கூ டென்ற வேதந் தானே, ஒரு புருட னுனவன் விதிக்காத காலத்திற் கூடினுற், றுர்ப்புத்திர னுண்டாகி, அவனுக்கு, மவன் வம்சத்துக்கு, மிம்மையிற் றுன்பமு, நிந்தையு. மறுமையில், நரகமு முண்டாகு மாகையா, லங்ஙனம் வராது, நற் புத்திர னுண்டாகி யிம்மையிற் சுகமுங், கீர்த்தியு, மறுமையிற் சொர்க்காதி பதமுங் கிடைப்பதற் காக, 'ஸ்திரீ மாத விடை யான பின், ஞலு திநத்துக்கு மேற் பன்னிரண்டு திநத்துக்குள் ளாக, ஏகாதசி அமாவாசி முதலான புண்ணிய திநங்களையுஞ், சோம வார முதலிய விரத திநங்களையு நீக்கி, மற்றைத் திநத்தில் ஸ்திரீயைச் சே' ரென்று கூறுவதைக் காண்பா யென்பார், 'மிதுந விச்சையும் புத்திரோற்பத்தியால் விரும் பென்ற விதிபாரா' யெனவும். மது மாமிசத்தை மணந்து பார்ப்பதையு, நற் புத்திரனைக் குறித்து விதித்த திநத்திற் கூடுவதையு நீக்கும் பொருட்டு,

அங்ஙனஞ் செய்யக் கூறிய வேதந் தானே, யாகத்தி லாட்டை
வதை செய்வதனு லவ் வாடு சொர்க்கத் துவாரத்தி லிருப்
புக் கொம்புட னிருந்து. அந்த யாக பல னநுபவிக்கச்
சொர்க்கத்துக்குப் போகின்ற புருடனை, வயிற்றைப்
பிளந்து கொல்லு மாகையாலும், புத்திர வாஞ்சையாற்,
பொரு ளாதியிலும், காமாதி வாசனை யுண்டாகி. யதனுற்
செந்ம முண்டாகு மாகையாலு. மத் துன்பம் வராது,
டரம்பரை யாய் மோட்சாநந்த மடைவதற் காக, யாகஞ்
செய்து மது மாமிசத்தை மணந்து பார்ப்பதையுங்,
கொண்ட மனைவியுடன் நற் புத்திரனைக் குறித்து, விதித்த
திநத்திற் கூடுவதையு நீக்கிவி டென்று கூறுவதைக்
காண்பா யென்பார், 'இதையும் விட் டொழி'
யெனவும், இல் லற தன்மமும், யாகாதியுஞ், செய்யாமை
யாற், றுறவிக்கும், பிரமசாரிதனக்கு. மிழிவின்றி, யாவரும்
நமஸ்கரித்துப் புகழ்கின்ற அநுபவத்தைக் காண்பா யென்
பார், 'யதி நயிட்டிக வந்நிக் கிகழ்ச்சி யற்றதும் பாரா' யென
வும், அங்ஙனம் வேதங் கூறுஞ் சித்தாந்தத்தையு. முலகத்
தில் நடக்கின்ற வநுபவத்தையு, நன்ரு யுணர்ந்து, இல் லற
தன்மமும், யாகாதி கருமமுஞ், செய்வதை விடுத்து, இகத்
தில் மது மாமிசாதி, ஸ்திரீ யாதி யிச்சையு. மறுமையில்
அப்சர ஸ்திரீ அமுதாதி போக யிச்சையையு நீக்கி, ஞாநாப்
பியாசஞ் செய்து, தத்துவ ஞாநத்தைப் பெற்று, அதனுல்,
மநுடாநந்த முத லிரணியகருப்பாநந்தம் வரை, யோர் திவலை
யாக்கும்படி யான பிரமாநந்தத்தைப் பெறுவா யென்பார்,
'அதை யறிந்து கன்மங்க ளாசைக ளொழிந் தாநந்த மடை
வாயே' யெனவுங் கூறினுர்.

(தா—ம்) வேதங் கன்ம காண்டத்திற் கூறியபடி, யாகஞ்
செய்து, மது மாமிசம் புசிப்பதையுங், கலியாணஞ் செய்த மனைவி
யுடன் கூடுவதையும், பின் னவற்ரு லுண்டாகும் துன்பத்தைக்
குறித்து, விட்டுவிடும்படி சித்தாந்த மாய் விதிக்கிற தெனவும், அவ்
விதிப்படிக்கும், பெரியவர்க ளநுபவப்படிக்கும், வருணுச்சிரம தன்



மங்களையு, மதனு லுண்டாகும் போக வின்பத் திச்சையையும் விடுத்து, ஞாநாப்பியாசத்தாற் றத்துவ ஞாநம் பெற்றுப் பரம சுகத்தைப் பெறுவா யெனவுங் கூறின தாம். 76

(அ—கை) அஞ்ஞாநத்துக்கு ஞாநம் விரோதி யென்பது நன் ருய்த் தெரியும் பொருட்டுச் சீடன் விஞதல்.

உலக மானவஞ் ஞாநமுங் கருமமு முறவென்ற வழிகூடும்,
பலவு மானவஞ் ஞாநமு ஞாநமும் பகையென்ப துளதானு,
னிலவி லேமறுப் போலவஞ் ஞாநமு நிமலஞா நத்தோடே,
துலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி. 77

(தா—ம்) முற் கூறிய வண்ண ஞாந மஞ்ஞாநத்துக்குச் சத்துரு வாயி, னஃ திதோடுஞ் சேர்ந்து, தொழிற் செய்யலாமோ வென விஞவின தாம்.

(வி—ம்) அஞ்ஞாநமுங், கருமமு, முற வென்றது, ஞாநமுங், கருமமும், பகை யென்றது 'இங்கு மப்படி.' 77

(அ—கை) அவ் விஞவிற் குத்தரங் கூறல்.

சோருப ஞாநமும் விருத்திஞா நமுமென்று சோதிஞா நமுமிரண்டாந்,
சோருப ஞாநமே விருத்தியின் ஞாநமாய்த் தோன்றும்வே றிலைமைந்
சோருப ஞாநமஞ் ஞாநசத் துருவன்று சுழுத்தியிற் கண்டாயே, [தா,
சோருப ஞாநத்தின் மருவுமஞ் ஞாநத்தைச் சுடும்விருத் தியின்ஞாநம்,

(ப—ம்) நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமாநந் தாத்துவிதப் பிரம மென்பார், 'சொரூப ஞாந' மெனவும், தாமத ராசத நீங்கிச் சுத்த சத்துவ மான அகண்டாகார விருத்தியி லுதய மாகின்ற ஞாந மென்பார், 'விருத்திஞாந'

மெனவும், காட்டத்தி லிருக்கு மக்கிநி யதைக் கடையும்
போது வேறு போல, வெளிப்பட்டுச் சொலித்துக் கொண்
டிருந்தாலும். வே றல்லாதது போலப், பிரம சைதந்நிய
மானது முமுட்சுக்க ளிடத்தில் ஞானாப்பியாசத்தால்,
அகண்டாகார விருத்தியி லப்பிரதிபந்தாபரோட்ச ஞாந
மாக வேறு போலத் தோற்றினும், வே றல்ல வென்பார்,
'சொருப ஞாநமே விருத்தியின் ஞாநமாய்த் தோன்றும் வே
றிலே' யெனவும், சுழுத்தியிற் பிரம சைதந்நிய மிருந்து,
மறியாமை வடிவான வஞ்ஞாநத்தைக் கெடுக்காதிருப்
பதைச் 'சகலரும் ஒன்று மறியேன் சுகமாய் நித்திரை
போனே' னென்கிற வநுபவத்தா லறிந்திருக்கின்ருயே
யென்பார், 'சொருப ஞாந மஞ்ஞாந சத்துரு வன்று சுழுத்
தியிற் கண்டாயே' யெனவும், பிரம சைதந்நியத்துடன்
சேர்ந்திருக்கு மஞ்ஞாநத்தைச் சமாதியி லுதயமாகின்ற
முற் கூறிய வகண்டாகார விருத்தி ஞாநங் கெடுக்கு மென்
பார், 'சொருப ஞாநத்தின் மருவு மஞ்ஞாநத்தைச் சுடும்
விருத்தியின் ஞாந' மெனவும் கூறினர்.

*(தா—ம்) பரிபூரண சைதந்நியத்துட னஞ்ஞாநஞ் சேர்ந்
திருந்து சிருட்டி யாதி செய்யினு, மச் சைதந்நியமே அகண்டாகார
விருத்தி ஞாக மாகி, யஞ்ஞாநத்தைக் கெடுக்கின்றதா லஞ்ஞாநத்
துக்கு ஞாநம் பகையேயா மென் றறிவித்த தாம்.* 78

**(அ—கை) காரணத்தாற் கெடாத வஞ்ஞாநங்,
காரியத்தா லெங்ஙனங் கெடு மென்ற வினுவு, மதற்
குத்தரமுங், கூறல்.**

துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாததற் சொருபஞா நந்தானே,
விருத்தி ஞாநமாய்ச் சுட்டதேப் படியெனில் வெய்யிலா லுலகெங்
பரித்த சூரியன் சூரிய காந்தத்திற் பற்றியக் கினியாகி, [கும்,
யெரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்குமென்
[றறிவாயே. 79



(ப—ம்) துருத்தி விரிதல் குவிதலை யடைகின்றது
போலச், சிருட்டி காலத்திற் சீவேசுர சகத் தாக விகாசத்
தையும், பிரளயத்திற் சங்கோசத்தையு மடைகின்ற வஞ்
ஞாந மென்பார், 'துருத்தி மாயை' யென்ருர்.

*(தா—ம்) காரண மான சூரியனுற் கெடாத பொருள், காரிய
மான வக்கினியாற் கெடுவது போலச், சொருப ஞாநத்தாற் கெடாத
வஞ்ஞாநம், பூரண விருத்தி ஞாநத்தாற் கெடு மென்ப தாம்.* 79

**(அ—கை) கருமத்துக்கும், ஞாநத்துக்கும், பேதந்
தெரியும் பொருட்டுச் சீடன் வினுதல்.**

அருளு மையனே திரிவித கரணத்தா லாகிய தொழிலெல்லாங்,
கரும மல்லவோ விருத்திஞா நமுமந்தக் கரணகா ரியமன்றே,
வுரிய கன்மமஞ் ஞாநத்தைக் கெடுக்குமென் றேதினு லாகாதோ,
பெரிய ஞாநமென் றதற்கோரு பெயரிட்ட பெருமையை யுரையீரே.

*(தா—ம்) அகண்டாகார விருத்தி ஞாந, மந்தக் கரண காரிய
மாதலி, னதைக் கரும மெனப்படாதோ வென விஞவின தாம்.* 80

**(அ—கை) அவ் விஞவிற் குத்தரங் கூறல்.**

விருத்தி ஞாநமந் தக்கர ணத்தொடு விருத்தியா கிலுமைந்தர்,
வோருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்ற துலகெங்குங் கண்டோ
கருத்த ஞகிய புருடதந் திரங்களாங் கருமங்க ளவைபோல, [மே
வருத்த ஞாநமோ புருடதந் திரமன்று வஸ்துதந் திரமாமே. 81

(ப—ம்) கிரியைக ளானது சங்கற்பாதியுடன் கூடித்
திரி வித கரணத்தாற் செய்யுந் தொழி லென்பார், 'புருட
தந்திரங்களாங் கருமங்க' ளெனவும், ஞாந மானது சங்கற்
பாதியுடன் கூடிச் செய்யுந் தொழி லல்ல, சத்திய ஞாந

வநந்தாநந்த மான வஸ்த்துவை ஐயந் திரி பின்றி யதார்த்த மாயறியு மறி வென்பார், 'ஞானமோ புருட தந்திர மன்று வஸ்த்து தந்திர' மெனவும் கூறினர்.

(தா—ம்) *விருத்தி ஞானமுங், கன்மமு, மந்தக் கரண காரிய மாயினு, மந வாக்குக் காரியத்தாற் செய்யு கருமம் புருட தந்திர மாகையாலுஞ், சமாதியி லுண்டாகும் பூரண ஞானம் வஸ்து தந்திர மாகையாலு, மொன்றுக் கொன்று வே றென்ப தாம்.* 81

**(அ—கை) கருமம், புருட தந்திர மென்பதற்கும், ஞானம், வஸ்து தந்திர மென்பதற்கும். யுத்தி கூறி, அவ் வினுவிற்கு, வே ரொரு பிரகாரமா யுத்தரங் கூறல்.**

வதுத்த கருமங்கள் செய்யவுந் தவிரவு மற்றென்றக் கவுங்கூடு.
மிதுத்த ஞாநமப் படியன்று தியாநமும் விவேகஞா நமும்வேறே,
சேகத்தி லொன்றையொன் றவிவன் பாவிக்குந் தியாநங்கற் பித [யோக,
முகத்த மாய்க்கண்ட ஞாநமே வாத்தவ மோகமாய் மயங்காதே. 82

(ப—ம்) யாகஞ் செய்ய யத்தநித்ததை விட்டுத், தா நமா யாவது, துர்க்காரியமா யாவது மாறிச் செய்வது போற், றிரிவித கரணங்களா லுஞ் செய்யும், புண்ணிய பாவ கருமத்தை மாறிச் செய்யலா மென்பார், 'மற்றொன் றாக் கவுங் கூடு' மெனவும், சமாதியி லுதிக்கு மகண்டாகார விருத்தி ஞாந மானது, முக் கரணங்களாற் செய்யும் புண் ணிய பாவ கர்மங்களைப் போலப், பண்ணவும், விடவும், வேறு வித மாகச் செய்யவும், படுவ தல்ல வென்பார், 'மிகுத்த ஞாந மப்படி யன்' றெனவும், விசாரிக்கச் சத்தி யில்லா திருக்கின்ற முமுட்சு வானவன், ஞாநாசாரியரை யடைந்து, மகா வாக்கிய வுபதேசம் பெற்று, 'ஸ்திரீயை யக்கிநி' யென்கின்றது போலத், தான் சீவ னென்கின்ற புத்தியுட னினிப் பிரம மாவோ மென் றிருந்துகொண்டு,



'பிரம நா' னென்று, பாவனை செய்கின்ற தியாந மானது பொய்யான பாவனை யென்பார், 'ஒன்றை யொன்றா விவன் பாவிக்குந் தியாநங் கற்பித யோக' மெனவும், விசாரிக்கச் சத்தி யுள்ள முமுட்சு வானவன் ஞாநாசிரியரை யடைந்து, மகா வாக்கிய வுபதேசம் பெற்றுச், சிரவணாதி செய்து தேகத் திரய, மவத்தாத் திரயஞ், சீவத் திரயம், தா னல்ல வென்று, மவைகளி னந்நுவய வியதிரேகங்களை யறிந்து கொண் டிருக்கின்ற பரிபூரண சொருபந், தா னென்று, 'மக்கிநியை யக்கிநி' யென்கின்றது, போல, வையந் திரி பின்றி யபரோட்சமா யறிகின்ற ஞாந மானதே மெய் யென்பார், 'முகத்த மாய்க் கண்ட ஞாநமே வாஸ்தவ' மெனவுங் கூறினர்.

(தா—ம்) *திரி வித கரணங்களாற் செய்யவுந், தவிரவும், மாறிச் செய்யவும், தக்கது கரும மெனவும், அங்ஙனம் மில்லா திருப்பது ஞாந மெனவும், மநதினுற் செய்யும் பிரமத் தியாநம் பொய் யென வும், விசாரத்தாற் பிரமத்தை யறியு ஞாந மெய் யெனவும் கூறின தாம்.* 82

**(அ—கை) தியாநம் பொய், ஞாந மெய், யென்ற தற்கு விபரங் கூறி, யுத்தரத்தை முடித்தல்.**

கண்ட றிந்தது ஞாநங்கேட் டதுகளைக் கருதுபா வனையோகங்,
கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவாதே,
கண்ட வத்துமெய் தியாநவத் துக்கள்பொய் கருவியஞ் ஞாநத்தைக்,
கண்ட வக்கணங் கோல்வது ஞாநமே கருமமன் றறிவாயே. 83

(ப—ம்) மான் மழு சதுர்ப் புச காள கண்டாதி லட் சண முடைய ருத்திர மூர்த்தி வடிவத்தைத் கேள்விப்பட் டவ னவ் வடிவத்தை மறந்து போதலு, மவ் வடிவத் தைப் பெற்றவ னவ் வடிவத்தை மறவா திருத்தல் போ லுஞ், சத்துச் சித்தாநந்த நித்திய பூரண லட்சண முடைய

பிரம சொருபத்தைக் கேள்விப்பட்டவ னச் சொருபத்தை மறந்து போவ, னச் சொருபாகார மானவ னச் சொருபத்தை மறவா னென்பார், 'கண்ட பேர் சொலக் கேட்டது மறந்து போங் கண்டது மறவாதே' யெனவும், அந்தகார மானது ஆயுதங்களால் நீங்காது, சூரியனுலேயே யுதயமானவுடன் நீங்குவது போல, அஞ்ஞாந மானது, கருமத்தினுலே கெடாது ஞாநத்தினுலே, யந்த ஞாந முதய மானவுடனே கெட்டுப் போகு மென்பார், 'அஞ்ஞாநத்தைக் கண்ட வக்கணங் கொல்வது ஞாநமே கரும மன்' றெனவும், கூறினுர்.

*(தா—ம்) மாநத கரும மாகிய பிரமத் தியாநங் கேட்டவண்ணம் பாவிப்பது, மறக்கத் தக்கது, மாகையாற் பொய் யெனவும், ஞாநம் பிரத்தியட்ச மாய்ப் பிரமத்தைத் தா னுக வறிவது, மறக்கத் தகாதது, மாகையால், 'மெய்' யெனவும், இந்த ஞாநமே அஞ்ஞாநத்தைக் கெடுக்கு மெனவும், கருமங் கெடுக்கா தெனவும், கூறிய தாம்.*

**(அ—கை)** தியாநங் கற்பித மெனி, னதனு லுண்டாகு முத்தியுங், கற்பித மன்றோ வெனும் வினுவு, மதற் குத்தரமுங், கூறல்.

சருவ முத்தியைத் தருகின்ற தியாநமுஞ் சத்திய மன்றேன்றற்,
சருவ் முத்தியுஞ் சத்திய மன்றேன்று சங்கியா தேநீகே,
ஞருவங் கேட்டவன் றியாநிக்கும் பொழுதிலவ் வுருவம்வாத் தவ ]மன்றே,
வுருவ மாதுமப் பொழுதுகண் ணுற்கண்ட வுருவம்வாத் தவமாமே. 84

**(அ—கை)** இதுவு மது.

சடம தாகிய தியாநமெய் யாகிய சருவமுத் தியைநல்குந்,
திடம தானேப் படியெனி லவாவர் தியாநமேற் பிறப்பாது,
முடல மாசையாற் றியாநிக்கிற் றியாநித்த வுடல்களா குவர்மைந்தா,
தேடர்ப வங்கேட்ச் சொருபமே தியாநிக்கிற் சொருபமா குவர்
[மெய்யே. 85



(ப—ம்) சொர்ப்பநத்திற் கண்ட ஸ்திரி பொய் யானுலு, மிந்திரிய கலிந மாதல் மெய் போலப், பரிபூரணப் பிரம சொருபத் தியாநம் பொய் யானுலு. மதனு லுண்டாகும் பரமோட்ச முண்மை யாகு மென்பார், 'சடம தாகிய தியாந மெய் யாகிய சருவ முத்தியை நல்கு' மென்ருர்.

*(தா—ப்) மூர்த்தித் தியாநம், தியாநிக்கும் பொழுது பொய் யானுலு, மத் தியாந முதிர்ச்சியினுற் சித்தி யாகு மூர்த்தி மெய் யாவது போலப், பரிபூரண சொருபத் தியாநம் பொய்யா யிருந்தாலு மத் தியாந முதிர்ச்சியினுற் பரமோட்ச மெய் யாகு மெனவும், எவ் வடிவத்தைத் தியாநித்தாலு மவ் வடிவ மாகின்றது போற், பிரம சொருபத்தைத் தியாநித்தாற் பிரம மாவதற் கைய மில்லை யெனவும், கூறின தாம்.* 85

**(அ—கை)** தியாநத்திற் கிச் சத்தி யிருக்க, விசார ஞாந மியாதுக் கென்ற வி னு வு. மதற்கு குத்தரமுங், கூறல்.

பிரம நுபத்தைத் தியாநித்த பேர்களும் பிரமமா குவரேன்றல்,
நாரச ரீரமாங் குரவனே விசாரமேன் ஞாநமே னென்னுதே,
பரம பாவனே பரோட்சமாம் பின்பந்தப் பரோட்சமே யபரோட்சநி,
திரவி சாரமா ஞாநமா முத்தியாந் தீர்வைபி தறிவாயே. 86

*(தா—ம்) தியாநிக்கின்ற புருடனுக்குக், கடம் போலப் பிரமம் பிரத்தியட்ச மின்றி, யப்பிரத்தியட்சமா யிருப்பதனு, லதன் லட்சணங் தெரியும் பொருட்டுக், குருவினிடத்திற் கேட்டுச் சிந்திக்கின்றது விசார மாகையாலுங், தியாந முதிர்ந்து சொருபப் பிரத்தியட்ச மாகும் போது, அறிவது ஞாந மாகையாலு, மவித்தை நிவிர்த்தி யான மோட்ச மடைவதற்கு. விசார ஞா ந மே வேண்டு மென்ப தாம்.* 86

(அ—கை) முற் கூறிய வகண்டாகார விருத்தி ஞான மிருக்கி, னகண்டாநுபவ மெங்ஙனங் கூடு மென்று வினுதலு, மதற் குத்தரமுங், கூறல்.

வீட தாம்பரி பூரண சொருபத்தின் விருத்திஞா நமுங்கூடிச்,
சேட மாகினு லக்கண்டமா மநுபவ சித்தியெப் படியென்றற்,
சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றம்பொடி தானுமன் ணுடுமாயு,
மூடி ஞாநமு மறிவிலா மையைக்கெடுத் தொக்கவே கெடுந்தானே 87

(ப—ம்) அஞ்ஞாநம் லயிக்கும் பரிபூரண சொருபத்திலேயே, ஞாநமும் லயித்தலால், 'ஒக்கவே கெடு' மென்றார்.

*(தா—ம்) அகண்டாகார விருத்தி ஞாந மானது, அகண்ட சொருபத்தைத் தெரியச் செய்து, அறியாமையைக் கெடுத்துத், தானு மச்சொருபத்திற் கெடு மென்ப தாம்.* 87

**(அ—கை) அகண்டாநுபவம் பெற்ற ஞாநிகளி னிலக்கணத்தைக் கூறல்.**

இந்த நிச்சய முத்தரு ளநுபவ மிருப்பதெப் படியென்றற்,
சிந்தை யற்றபூ மண்டல விராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர்,
பந்த முத்திகள் மறந்துபோ முண்டென்று பலர்சொலி னகையாவ,
ரந்த ரத்தையுண் டுமிழந்ததோர் கொசுகெனு மவர்களை நகையாரோ.

(ப—ம்) சகல சீமையுங் கைவசம் பண்ணிக் கொண்ட மகா ராசா, இனி யின்ன சீமையைச் செயிக்க வேணு மென்றுஞ் சங்கற்ப மற்றுத், திருத்தி யடைந்து இருப்பது போலவும், முலை யுண்டு மஞ்சத்திற் கிடக்குங் குழந்தை யானது, கண்ணாலே பார்த்தல், காதாலே கேட்டல், கால் கை சலித்தல் முதலிய தொழிற்



செய்யினு. முன் பின் வாசனை யின்றிச் சுகமா யிருப்பது போலவு. மகண்டாநுபவம் பெற்ற ஞாநிகள் சருவசாட்சி, சருவாத்மா, சருவ காரண சச்சிதாநந்த சொரு மாகின்ற தம்மைத் தவிரச் சக சீவ பாவங்கள், வே றில்லாத படியினுல், மநது ஒன்றையுஞ் சுட்டாமலும், பிராரத்த கன்ம வசத்தால் நாநா விதத் தொழிற் செய்த போதிலுங், காமாதி வாசனை சற்று மில்லாமலு மாநந்த சொருபமா யிருப்பா ரென்பார், 'சிந்தை யற்ற பூமண்டல விராசனுஞ் சிசுவும் போற் சுகமாவ' ரெனவும். பழுதைமிற் பாம்பு வந்தது மில்லைப், போனது மில்லை, யென்னுந் தெளிவுற்றானுக்குப் 'பாம்பு தோற்றிற்று. நீங்கிற்' றென்பது மறந்து போதல் போல, நிருவிகார மாயு. நிராகாரமாயு, நிருமல மாயு, நித்திய மாயு, மிருக்கின்ற நிட்பிரபஞ்ச சொருபந் தா னென்று தெளி வுற்ற ஞாநிக்கு, 'அஞ்ஞாநத்தாற் பந்த முண்டா யிருந்த' தென்பதும், 'ஞாநத்தால் மோட்ச முண்டாயிற்' றென்பது, மறந்து போ மென்பார். 'பந்த முத்திகள் மறந்து போ' மெனவும், நிரவயவ மாயும், அமூர்த்த மாயுஞ், சூட்சும மாயு, மகத்தாயு மிருக்கின்ற வாகாசத்தை. யற்பமா யிருக்கின்ற மசக மானது புசித்துக் கக்கிற் றென்பவர்களை, யாவர்களுஞ் சிரிப்பது போல. பராபர மாயும், பரிபூரண மாயும், பராகாச மாயு மிருக்கின்ற பரமாத்மாவுக்குப் பஞ்ச கோசத்துள் மறைபட்டுப் பந்த முண்டா யிருக்கிற தென்று, மது நிவிர்த்தி யாகி மோட்ச மடைய வேண்டு மென்றுங் கூறுகின்ற முமுட்சுக்களைப், பூரணாநுபவம் பெற்ற ஞாநிகள் சிரிப்பா ரென்பார், 'உண் டென்று பலர் சொல்லி னகையாவ ரந்தரத்தை யுண் டுமிழ்ந்த தோர் கொசுகெனு மவர்களை நகையாரோ' வெனவுங் கூறினர்.

*(தா—ம்) அறி வறியாமை யின்றிச், சிருட்டிக்கு முன் னுள்ள சத்தா மாத்திர மாக விளங்கிச் சுகித் திருப்பவனே சீவன் முத்த னென்ப தாம்.* 88

**(அ—கை)** அகண்டாநுபவம் பெற்ற ஞானிகளைப் போலச், சீட னகண்டாநுபவம் பெறும் பொருட்டு, அகண்ட சொருபத்தி லவாந்தரத்திற், றோற்றுஞ் சீவேசுவர சகத் தாகிய கற்பனையில் மயங்கா திருப்பதற் காகத் திட்டாநந்த மாக வோர் கதை கூறல்.

மலடி மைந்தனுந் தானுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி,
யிலது கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசதம் விலைபேசிக்,
கலக மாயினு ரிடையினிற் கயிற்றராக் கடித்திரு வருமாண்டா,
ரலகை யாயினு மெனும்விவ காரத்தை யறிந்தவன் மயங்கானே. 89

**(அ—கை)** தாட்டாந்தங் கூறல்.

மாயை யென்பது பொய்யெனி லதுபெற்ற வகையெலாம் பொய் [யாமே,
தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வேறுண்டோ,
சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாராமற்
றூய சத்துச்சித் தாநந்த பூரண சொரூபமா யிருப்பாயே. 90

(ப—ம்) மாதா வில்லா விடத்துப் புத்திர னுற்பத்தியாகா மலு மாதா பறைச்சியா யிருக்குமிடத்திற், புத்திரன் பிராமண னுதலு மில்லாதது போல, மாயை யென்றுஞ் சத்தத்துக் 'கில்லாதது' வென்று அருத்த மிருப்பதால் மாயை மித்தை யென்று சுருதி கூறுகையினலும், விசாரிக்குமிடத் தொன்பது,விதத்தினலு நிச்சயிக்கப்படாத ணமே யநுபவ மாய்க் கண்டிருப்பதனலும். ஞானிகளு மவ்வண் ணுண்டான சீவேசுர சகத்து மித்தை யென்பார், 'மாயை யென்பது பொய் யெனி லது பெற்ற வகை யெலாம் பொய் யாமே தாயை யன்றி மக்களுக் கொரு பிறவியுஞ் சாதியுஞ் வே றுண்டோ, வெனவும், கிணற்றின் கரையி லிருக்கும் புருட னிழ, லக்கிணற்றின் சலத்திற் றலைகீழாகத் தோற்று



வது பொய் யாதலினலு, மன் னிழ லலைகின்றதையு, மலையா திருக்கின்றதையும் பார்த்தலினுற்,பிரயோசந மின்மையாலு, மதைப் பகுத்துப் பாராது விட்டுக், கிணற்றின் கரையி லிருக்குந் தன தெதார்த்த வடிவத்தைப் பார்த்துச் சுகமா யிருப்பது போலப், பிரம சொருப மாகிய தன்னிடத்தில், விவர்த்த மாகத் தோற்றுகிற சீவேசுவர சகத்துப் பொய் யாதலினலு, மதிற் றுறக்க மென்று, நிரய மென்றும், புண்ணிய மென்றும், பாவ மென்றும், பந்த மென்று, மோட்ச மென்று, மிவை முதலாகப் பார்ப்பதனுற் பிரயோசந மின்மையாலு. மசத்துச் சடந் துக்க மநித்தியமா யிருக்கு மவைகளைப் பகுத்துப் பாராமல் விட்டு, அஞ்ஞாந மாகின்ற மல மில்லா திருப்பதால், நிருமல மாயுஞ், சிருட்டிக்கு முன்னேயும், பின்னேயு மிருக்கின்றமையாற் சந் மாத்திர மாயுஞ், சிருட்டி திதி சம்மார காலங்களையு, மதி லுள்ள காரியங்களையும், விளக்குவித் தறிகின்றமையாற், சிந்மாத்திர மாயுந், துவித மற்றிருக்கின்றமையால், நன்மாத்திர மாயுஞ், சராசர மாகத் தோற்றும் பிரபஞ்ச மெல்லாந் தன்னை விட வே றில்லாமையா, லகண்ட மாயு, மிருக்கின்ற பிரம சொருப மாகவே யிரு வென்பார், 'சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாராமற் றூய சத்துச் சித் தாநந்த பூரண சொருபமா யிருப்பாயே' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) கற்பனையின் மூலந் தெரிந்தவ, னதனிடத்தில் மயங்காமை போல, மாயை மித்த யாகையா, லதனிடத்தி லுண்டான பிரபஞ்ச மித்தை யெனவு, மவைகளைப் பகுத்துப் பாரா தகண்ட சொருப மாகவே யிரு வெனவும் கூறின தாம்.* 90

**(அ—கை)** மாயா காரிய மான பிரம தேவர் முதலிய நன்மை யான பிரபஞ்சத்தையு, மித்தை யென்று தெளியும் பொருட்டுச் சீடன் வினுதல்.

பங்க யாசநன் முதற்பல தேவரும் பாருள பெரியோருங்,
கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலு,
மங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய மெனச்சொன்ன,
லெங்க ணுயக னேயத னுற்குற்ற மில்லையோ மொழிமீரே 91

(ப—ம்) என் போன்ற வறிவிலிகளுக்குந் துன்ப நீக்கி யின்பங் கொடுக்கின்ற வரு ளிறையே யென்பார், ‘யெங்க ணுயகனே’ யென்றார்.

*(தா—ம்) தேவதைகளையு, மகான்களையுந், தீர்த்த மாதிகளை யுஞ், சகலருஞ் சத்திய மென்று, முபாசிக்கத் தகுந்த தென்று, நன் மைகளைக் கொடுக்கப்பட்ட தென்றுங் கருதி, வழிபட்டுக் கொண்டு வருகிறதா யிருக்க, அவைகளைப் பொய் யென்று சொன்னுற் றேஷ முண்டாகாதோ வென வினவின தாம்.* 91

(அ—கை) அவ் வினுவிற் குத்தரங் கூறல்.

சொர்ப்ப நந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது பிழை
லற்ப மாயையிற் றேன்றிய சகங்களை யசத்தேனல் பிழையாமே, [யானு,
சொர்ப்ப நந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்லலா
வற்ப மாயையிற் றேன்றிய சகமெலா மசத்திய மெனலாமே. [மெனின்மைந்தா, 92

(ப—ம்) மண்ணிற் கட சத்தி யேக தேச மாய்க் கற் பித மாய்த் தோற்றுவது போல, மாயை யானது, பிரம சொருப வியாபகத்தில் விவர்த்தமா யேக தேச மாய்த் தோற்றுவதா லும், ஞானிக ளநுபவத்தி லில்லாமற் போகின் றதனுலுந், துச்ச மென்பார். ‘அற்ப மாயை’ யெனவும், சொர்ப்பநத்திற் கண்ட பிரமாதிகள் மனோ கற்பனை யாய்த் தோற்றுவதனுலுஞ், சாக்கிரத்தி லவைக ளில்லாமற் போகி றதனுலு, மவைகளைப் பொய் யென்று சொல்வதனுற், குற்ற முண்டாகாதது போல, வஞ்ஞாந சொர்ப்பநத்திற் றேற்றுந் தேவதைகள், பெரியோர்கள், புண்ணியத் தல மாதிகள், கிஞ்சித்தா யிருக்கின்ற மாயா கற்பனையாற் றேற் றுவதாலும், பிரமத்தைப் போல், நித்தியமா யிராம லநித்தி யமாய் ஞாந சாக்கிரத்தி லில்லாமற் போவதனுலு, மப் பிர மாதிகளை மித்தை யென்று சொல்வதனுற், பாவ முண் டாகா தென்பார், ‘சொர்ப்பநந்தனிற் கண்டதைப் பொய் யென்று சொல்லலா மெனின் மைந்தா அற்ப மாயையிற் றேன்றிய சக மெலா மசத்திய மெனலாமே’ யெனவுங் கூறினர்.

*(தா—ம்) சொர்ப்பநம் போல, மாயா காரிய மான சக சீவ பாவங்க ளென்று மித்தை யாதலி, னவைகளி னியல்பைக் கூறுத லாற் குற்ற மில்லை யென அந்நுவய வியதிரக வுத்தியினுற் றெரி வித்த தாம்.* 92

(அ—கை) முற் கூறியதை வற்புறுத்தல்.

பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று புராணங்கூப்
[பிடுமானுல்,
மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்தசாத் திர
பொய்ய தேதனி னுமநு பங்களாம் பூதமா கியமாயை, [முண்டோ,
மெய்ய தேதேனிற் சச்சிதா நந்தமாய் வியாபித்த மாந்மாவே. 93

(ப—ம்) ஞாந கண்டத்திற் பொய் யென்று கூறிய சொர்க்காதி லோகங்களையும், பிரமாதி தேவதைகளையு, மெய் யாகக் கருதிக் கொண்டு யாகாதி கருமங்களையு, மந்நதாந முதலானவற்றையுந், தியாந தோத்திர நமஸ்காராதி யையுஞ் செய்கின்ற வறி வில்லாதவர்களையே ‘தருமவான்க’ ளென்று காந்த முதலிய பதி னெண் புராணங்களு மநேக விடத்திற் பல தர முறையிடுகின்றதே யென்பார், ‘பொய்யை மெய் யென்ற மூடர் புண்ணிய ரென்று புரா

ணங்கூப்பிடு' மெனவும், அந்தப் பொய் யான சொர்க்காதி, பிரமாதி, தீர்த்த மாதிகளைப், பொய் யென்று பிரதிபாதிக் கின்ற ஞானிகளுக்கு, வேதாகம சாஸ்த்திர புராணாதிகளி, லொன்றினாலும், பா வ ங் கூ ற வில்லையே யென்பார், 'மெய்யை மெய் யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திர முண்டோ, வெனவும், எவ் விடத்தி லு மிருக்கின்ற தாயு, மெல்லாவற்றையு மறிகின்றதாயும்; எல்லாவற்றைக் காட்டிலும் பிரிய மாயு, மெல்லாந் தோன்றி, நின் றழி வதற் கிட மான வியாபக மாயு மிருக்கின்ற, பிரம சொருப மென்பார், 'சச்சிதாநந்தமாய் வியாபிக்கு மாந்மாவே' யென வுங் கூறினார்.

*(தா—ம்) பொய் யான பிரமாதிகளை மெய் யென்று கருதிச் சற் கருமஞ் செய்கின்ற வறிவிலியைக் கூடத், 'தருமவா' னென்று புராணாதிகள் கூறுகின்ற தெனவு, மப் பொய்யைப் பொய் யென்று யதார்த்தங் கூறுகின்ற ஞானிக் கொரு நூலிலும் பாவங் கூற வில்லை யெனவும், ஜகத்தாகா மாய்த் தோற்றுகின்ற மாயை, பொய் யென வுங், பிரம சொருப, மெய் யெனவுங் கூறின தாம்.* 93

**(அ—கை) மாயையின் றன் மை யிஃ தெனத் தோன்ற வறு வகை யாக வினுதல்.**

மாயை யென்பதே துடையரா ரெப்படி வந்தது வருவானேன்,
மாயை யென்பது பிரமத்தின் வேறெனின் வத்துவு மிரண்டாமே,
மாயை யென்பதும் பிரமமு மொன்றெனின் வத்துவும் பொய்யாமே
மாயை யென்றமே கங்களுக் கொருசண்ட மாருதக் குருமூர்த்தி. 94

(ப—ம்) சத்து அசத்து சதசத்து, பின்ன மபின்னம் பின்னாபின்னம், சாவயவம் நிரவயவம் சாவயவ நிரவயவ மாகிய நவ விதங்களி, லெது மாயையின் சொருப மென் பார், 'மாயை யென்பதே' தெனவும், மாயா மயக்கத்தை



யுடையவர், சீவனா? ஈசுரனா? வென்பார், 'உடையரா' ரெனவும், மாயையின தாரம்ப பரிணாம உற்பத்தி (விருத்தி) விவர்த்த மாதிகளி. லெந்தப் பட்சத்தா லுதித்த தென்பார், 'எப்படி வந்த' தெனவும், அம் மாயை, கரும காரணத்தி னால் வந்ததா? அவிசார காரணத்தினால் வந்ததா? வென் பார், 'வருவானே' னெனவும். தகப்ப னிடத்தி லுண் டான பிள்ளை, தகப்பனுக் கந்நியமா யிருப்பது போலப், பிரம சொருபத்துக்கு மாயை யந்நியமானாற் றுவித மாகுமே யென்பார், 'மாயை யென்பதும், பிரமமும் வே றெனில் வஸ்துவு மிரண்டாமே' யெனவும், உப்பளத்திற் சேர்ந் திருக்கு மாம் பழ, மத னுடைய மா துரிய ரச நீங்கி, யுப்புக் கட்டி யாவது போலவும், நதிச் சலமுங், கடற் சலமு மொன் றென்றால், நதிச் சலமு. முப்புச் சல மாவது போலவும், அநித்திய மான மாயையு, நித்திய மான பிரமமு, மொன் றென்றா, லப் பிரமமு மநித்திய மாய்ப் போமே யென்பார், 'மாயை யென்பதும், பிரமமு மொன் றெனில் வஸ்துவும் பொய் யாமே' யெனவும், சகல சீவருக்கு மொன்றுந் தெரி யாது மறைப்ப தாயு, மி கு ந் த மழை பெய்து துன்பங் கொடுப்ப தாயு முள்ள மே க த் தை ப், பிரசண்ட வாயு வானது, சின்னா பின்னப்படுத்திக் கெடுப்பது போலச், சகல ருக்கு மாத்ம சொருபந் தோன்றாது மறைத்து, அநாத்ம சொருப மான சீவேசுவர சகத் தாகத் தோற்றுவித்துத் துன்பஞ் செய்கின்ற வஞ்ஞானத்தை, ஆத்மாநாத்மாக்களை வேறுபடுத்தித் தெரிவித்துத். தத்துவ ஞானங் கொடுக்கின் றது மூல மாய்க் கெடுக்கின்ற ஞானாசாரியரே யென்பார், 'மாயை யென்ற மேகங்களுக் கொரு சண்ட மாருதக் குரு மூர்த்தி' யெனவுங் கூறினார்.

*(தா—ம்) மாயையி னுருவமும், அதன் மயக்கத்தை யுடையவர் களையும், அத னுற்பத்தியும், அஃதுதித்ததற்குக் காரணமும், அது பிரமத்திற்குப் பின்ன மாயின், வஸ்து துவிதமாமே யெனவும், அபின்ன*

*மாயின், வஸ்து மித்தையாமே யெனவும், அத னுன்மையைத் தெரிய வினவின தாம்.* 94

**(அ—கை) அவைகளின், முத நான்கு வினுவிற் குத்தரங் கூறல்.**

அதனை யின்னதேன் றுரைத்திடப் படாமையா லவாச்சிய வடிவாது,
மிதுத னக்குள துடலம்நா னுலதுமெய் யெனுமவ நுடையோர்கள்,
கதையி லாதபோய் வந்ததிப் படியேன்று கண்டபே ரிலைமைந்தா,
விதந மாயையேன் வந்ததேன் றற்புத்தி விசாரமற் றதனுலே. 95

(ப—ம்) சத்து அசத்து, சதசத்து, பிந்ந மபிந்நம், பிந்நா பிந்நஞ். சாவயவம் நிரவயவஞ் சாவயவ நிரவயவ மாகிய வொன்பது விதத்து, ளொரு விதத்திலு நிச்சயிக்கப்படா ததே மாயையின் சொருப மென்பார், 'அதனை யின்ன தென் றுரைத்திடப்படாமையா லவாச்சிய வடிவாகு' மெனவும், தேகேந்திரியாதிகளை, 'யா' னென்றும், வீடு முத லியவற்றை, 'யென' தென்றும், பிரபஞ்சத்தைச், 'சத்திய' மென்றுங் கொள்கின்ற சீவரே, மாயா மயக்கத்தை யுடை யவ ரென்பார், 'இது தனக்குள துடலம் நா னுலகு மெய் யெனுமவ ருடையோர்க' ளெனவும், மாயை யானது, ஆரம்ப பரிணும விவர்த்த முற்பத்தி (விருத்தி) யாதி பட் சங்களி லின்ன விதத்தினு லுண்டான தென்று அறிந்தவர்க ளில்லை யென்பார், 'கதை யிலாத பொய் வந்த திப்படி யென்று கண்டபே ரிலை' யெனவும், அவிசார காரணத்தினு லம் மாயை வந்த தென்பார், 'மாயை யேன் வந்த தென் றற் புத்தி விசார மற்றதனுலே' யெனவுங் கூறினுர்.

(வி—ம்) அவாச்சிய வடி வாகு மென்ற பதத்துக்கு, மாயை ஆத்மாப் போலத், திரி காலத்திலுங் கெடாம லிராது, தத்துவ ஞாநத்தினு லழிவதனு, லதைச் சத் தென்ப தாகவும், முயற் கொம்பு போ, லில்லாமற் போகாது, நா



னஞ்ஞாநி யென் றநுபவ மிருப்பதனு, லசத் தென்ப தாக வும், ஒன்றுக்கே யிரண்டு பட்சங் கூறுவது விருத்த மாகை யாற், சதசத் தென்ப தாகவும், சகத்துக்கு மூல காரணமா யிருக்கையினுற், சாவயவ மென்ப தாகவும், சகத் தாகார மாகப் பரிணமிக்கையினுலே நிரவயவ மென்ப தாகவும், உபயாத்மகம் விருத்த மாகையாற், சாவயவ நிரவயவ மென்ப தாகவும், ஆத்மா வத்துவித மென்கின்ற சுருதிக்கு விரோத மாகையினுலு, 'மாத்ம சத்தையைத் தவிர, மா யைக்குச் சத்தை யில்லாமையாலு, மதை யாத்மாவுக்குப் பிந்ந மென்ப தாகவும், 'ஆத்ம சத்தி' யென்னுஞ் சுருதிக்கு விரோத மாகு மாகையாலும், மாயைக்குச் சேதநத்வமும், ஆத்மாவுக்குச் சேதநாசேதநத்வமும், ஆகையாலும், அபிந்ந மென்ப தாகவும், விருத்த மாகையினுற் பிந்நாபிந்ந மென்ப தாகவு நிச்சயிக்கக் கூடா தெனக் கொள்க.

*(தா—ம்) மாயைக்குச் சொருப மநிர்வசநீய மென்ப தாகவும், அதன் மயக்கத்தை யுடையோர் சீவர்க ளெனவும், அதை யின்ன விதமா யுதித்த தென வறிந்தவர்க ளில்லை யெனவும், அது வுண் டானதற்குக் காரண மவிசார மெனவும் கூறிய தாம்.* 95

**(அ—கை) ஐந்தாவ, தாருவது, வினுவிற் குத் தரங் கூறல்.**

அருவ மாதுமா யாவிவித் தைக்ள்வினை யாடுமுன் றெரியாதே,
வுருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின் வெளியாதும்,
பிரம சத்திக ளநந்தமா மதைக்கண்டு பிடித்திடக் கூடாதே,
பரவு பூதங்க்ள் கண்டநு மாநத்தாற் பலருக்தும் வெளியாமே. 96

*(தா—ம்) மித்தை யான சகந் தோன்றுதலின், அங்ஙனந் தோற்றுவிக்கு மித்தை யான மாயா சத்தி யொன் றுள தென வுணர வேண்டு மென்ப தாம்.* 96

**(அ—கை) இதுவு மது.**

காரி யங்களுதுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமாயம்,
பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்காணும்,
வீரி யந்திகழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோலே,
பேரி யற்பிர மத்துக்கு மூலதுக்கும் பிறிதுசத் திகளுண்டோ. 97

(ப—ம்) மாயா சத்தியின் காரிய மான பிரபஞ்ச, நாம ரூப மாகப் பிரத்தியட்ச மாய்த் தோற்றுவதாலும், அச் சத்தியின் அதிட்டாந மான பிரம மானது, யெப் போது மிருப்ப தாயுஞ், சகலத்தையும் விளக்கி யறிவ தாயு, மெல்லோருக்குஞ் சுகங் கொடுப்ப தாயும், பிரத்தியட்ச மாகத் தோற்றுவதாலும், அவைகளை யறியலா மென்பார், 'காரியங்களுஞ் சத்தி யாதாரமுங் காணு' மெனவும், அவை களைப் போல, மாயா சத்தி பிரத்திட்ச மல்லாததாற் காணக் கூடா தென்பார், 'மற்றது மாய' மெனவும், சத் திய ஞாந வநந்தாநந்த மகத்துவ முடைய பரமாத்மா வென்பார், 'பேரியற் பிரம' மெனவுங் கூறினர்.

*(தா—ம்) பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கின்ற மாயா சத்தி பிரமத்தைத் தவிர வேரு யிருக்கு மென்ப தாம.* 97

**(அ—கை) இதுவு மது.**

சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி,
வித்தை காட்டிய விந்திர சாலம்பொய் வித்துவான் மெய்யாம்
புத்தி மைந்தனே சத்திமா னுகிய பூரண வாத்மாவின்,
வத்து நிர்ணயஞ் சொன்னதிட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே. [போற்'

(ப—ம்) காய்ச்சின விரும்புப் பாளத்தில் விட்ட சலத்தை, வெளியில் விடாமற் கிரகிக்கின்றது போல, நா மநுக்கிரகம்பண்ணுகின்ற வாக்கியங்களை யெல்லா மறவா மல் கிரகிக்குந் தன்மையு, மவைகளி லிவை சார மெனவு,



மிவை யசார மெனவு, மிவை தள்ளத் தக்க தென்று, மிவை கூட்டத் தக்க தென்றும், பகுத் தறிகின்ற மதியு முடைய மாணுக்கனே யென்பார், 'புத்தி மைந்தனே' யென வும், கந்தருவ சேனையைத் தோற்றுவிக்கு மிந்திர சால சத்தி, யவ் வித்தைக்காரனுக்கு வேருனாலும், வேறுபடாது வொன்றே யாம். அது போலப், பிரபஞ்சத்தைத் தோற்று விக்கு மாயா சத்தி, பிரமத்தைத் தவிர வேருனாலும், வே றல்ல வொன்றே யெனவும், இந்திரசால வித்தைக்கார னுடைய சத்தியினு லுண்டாகிய கந்தருவ சேனைக, ளழிவத னுற் பொய் யாகவு, மவைகளைப் போல, அச் சத்தியை யுடைய வித்தைக்கார னழியாமையால்,மெய்யாகவும் இருப் பது போல, மாயா சத்தி காரிய மான சராசரப் பிரபஞ்ச மெல்லா, மழிந்து போவதாற், பொய் யாகவும், அம் மாயா சத்தியை புடைய பிரம மானது, அப் பிரபஞ்சத்தைப் போ, லழியாமையால், மெய் யாகவு மிருக்கு மெனவுந் தெளிந்து கொள்வா யென்பார், 'சத்திமா னுகிய பூரண வாங்மாவின் வத்து நிர்ணயஞ் சொன்ன திட்டாந்தத்தின் வழி கண்டு தெளிவாயே' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) இந்திர சாலக்காரனுஞ், சத்தியு மிரண்டானலு, மென்று யிருப்பது போல், செகத்தைத் தோற்றுவிக்கு மாயா சத்தி, பிரமத்துக்கு வேரு யிருந்தாலு, மிரண்டாகாது ஒன்றுகவே யிருக்கு மெனவும், இந்திரசால சத்தியினு லுண்டாகுங் கந்தருவ சேனை பொய் யாயு, மவ் விந்திரசால சத்தி யுட னவ் விந்திர சாலக் காரன் ஒன்று யிருக்கினும், பொய்யாகாது மெய்யாக விருப்பது போல, மாயா சத்தியி லுண்டாகும் பிரபஞ்சம் பொய் யாகவு, மம் மாயா சத்தியுடன் பிரம மொன்று யிருக்கினும், பொய்யாகாது மெய்யேயா யிருக்கு மெனவும் கூறின தாம்.* 98

**(அ—கை)** அசத் தான மாயா சத்தி யுள தென்ப தெங்ஙன மென்ற விஞவு, மதற் குத்தரமுங், கூறல்.

இல்லை யாகிய சத்தியை யுண்டேன்ப தேப்படி யெனக்கேட்கிற்.

புல்லை யாதியா மசேதநப் பொருளெலாம் பூத்துக்காய்ப் பதைப்
நல்லை யாமக னேயதி லதிற்சிற் சத்தி நடந்திடா திருந்தக்காற், [பா ராய்,
றெல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறுமே.

(ப—ம்) கட்டு வேலையா லுண்டான தாய்த் தானே யசையாததா யிருக்கின்ற பூதம், யானை முதலான, அசைவதனு லதற்குள் ளோர் புருட னிருந் தாட்டுகிரு னென் றறிவது போலப், புல் முதலிய அசர வுயிர்க, ளெந்தக் காலங்களி லெந் தெந்த வஸ்து. பூத்துங் காய்க்கவேண்டு மோ, அந் தந்தக் காலத்தி, லந் தந்த வஸ்து, புட்பித்துக் காய்ப்பதனு, லதி லதிற் சத்தி யிருக்கின்ற தென் றறிந்து கொள் ளென்பார், 'புல்லை யாதியா ம சே த ந ப் பொரு ளெலாம் பூத்துக் காய்ப்பன பாரா' யென்ருர்

(வி—ம்) சூரியனுற் பிரபஞ்ச விவகார மெல்லா நடப் பதைக் தெரிவிக்கும் பொருட்டு, முந்தித் தாமரை மலர்த லாதியைத் தெரிவித்துப், பின்பு மற்றவையைத் தெரிவித் தல் போலப், முந்தி யசரத்தைக், குறித்துக் கூறிய பின்பு, சராசரத்தைக் குறித்துக் கூறினு ரென வறிக. 99

## (அ—கை) இதுவு மது.

கருப்பை முட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்தசித் திரம்பாரா,
யருப்ப மாஞ்சத்தி நியமமில் லாவிடி லாசிலா நகர்போலா,
நெருப்பு நீர்களாங் க்சப்புமே மதுரமா நீசனு மறையோர்தும்,
பொருப்பு மேகமாங் கடலெலா மண்களாம் புவநமிப் படிப்போமே

(தா—ம்) இந்த இரண்டு கவிக்கும் தாற்பரியம். தோன்ரு மையா வில்லை யென்றும், மாயா சத்தி சராசரங்க ளனைத்திற்கு முள்ளீடா யிருந்து நடத்துதலினுலு, மந்தந்த நியம மாருதபடி செய்து கொண் டிருப்பதனுலு முண் டென்ப தாம். 100



## (அ—கை) அத்துவித நிச்சய முண்டாகும் பொருட்டுச் சீடன் வினுதல்.

ஆர்த்துங் காணவு மறியவும் படாதேன்று மவாச்சிய வடிவேன்றுஞ்,
சேர்த்து நாமரு பப்பயிர் வித்தேன்றுஞ் செப்பிய சிற்சத்தி, [றய்ப்,
பேர்த்து மாறெங்ஙன் பிறித்திடப் படாதேனிற் பிரமபா வனையோன்
பார்த்து மாறெங்ஙன் முத்தியா துவதெங்ஙன் பாமசற் தருமூர்த்தி. 101

(தா—ம்) மாயா சத்தியை நீக்கி நின்ற வித மெப்படி, நீக்கப் படா தெனில், அத்துவிதப் பிரஹ்மத்தை த்வைத மின்றித் தரிசிக் கின்ற தெப்படி, அங்ஙனந் தரிசிக்கப் படா தெனில், மாயா நீக்க மாகிய மோட்ச மடைத லெங்ஙன மென்று வினுவின தாம். 101

## (அ—கை) அவ் வினுவிற் குத்தரங் கூறல்.

வாயுத் தம்பநஞ் சலத்தம் பநமணி மந்திர மருந்தாலே,
தேயுத் தம்பநஞ் செய்திடி லதிலதிற் சிறந்தசத் திகளேங்ங,
னீயச் சச்சிதா நந்தமாய் வேறேன்று நினைந்திடா திருப்பாயேன்,
மாயச் சத்திபோ மீதன்றி மந்திர மறைகளிற் காணேமே. 102

(ப—ம்) வாயு வாதியின் சலித்த லாதி யான சத்தி, மணி மந்திர ஔடதத்தால் நீங்குவது போற், கட மென் றெழும் வி ரு த் தி யுதிப்பதற்கு முன்னு, மொடுங்கின பின்னு. மத்தியிலு மிருக்கின்ற மெய் யாயும், அவ் வுற் பத்தி நாச மறிகின்ற ஞாந மாயு, மதை விட்டும் விடப் படாத யின்ப மாயு மிருக்கின்ற பிரம சொரூப மாகவே மனோ லயம் பண்ணி, நிருவிகற்ப சமாதியி லிருந்தால், மாயா சத்தி நீங்கிவிடு மென்பார், 'நீ யச் சச்சிதாநந்தமாய் வே றென் று நினைந்திடா திருப்பாயேன், மாயச் சத்தி போ' மெனவும், மாயா சத்தி நீக்கத்துக்கு, நிருவிகற்ப சமாதிக்கு மேற்பட்ட வுபாயம் வேதத்திற் கூற வில்லை யென்பார், 'ஈதன்றி மந்திர மறைகளிற் காணேமே' யென வுங் கூறினுர்.

(தா—ம்) மனோ நாசஞ் செய்தலே, மாயா சத்தியை நீக்கு கின்ற விதமெனவும், அந்த மாயா சத்தியை நீக்கின லத்துவிதப் பிரமத்தை தரிசிக்கலா மெனவும், அஃதே பரமோட்ச மடைகின்ற விதமெனவுங் கூறினதாம். 102

(அ—கை) எங்ஙன மனோ லயஞ் செய்து பிரமாகாரமா யிருத்த லெனில்?

மேவு மண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித் திடவேண்டில்.
நாவி னன்மண்ணைக் குடமென்ப ரக்குட நசிப்பது நாவாலே,
பாவு நாமரூ பங்களை மறந்துமண் பார்ப்பதே பரமார்த்தஞ்,
சீவ பேதகற் பிதங்களை மறந்துநீ சின்மய மாவாயே. 103

(ப—ம்) மண்ணி லவ்வியத்தமா யிருந்த கட சத்தி, வியத்த மாகி, வாக்கு மாத்திர மாய்க் கட மென விவரிக்கப் பட்டாலு, மதை விட்டு மண் ணைப் பார்ப்பதே யதார்த்தம் போலப், பிரம சொரூபத்தி லவ்வியத்த நாம ரூபமா யிருந்த மாயா சத்தியே, வியத்த நாம ரூப மாகி, வாக்கு மாத்திர மாய்ச் சீவேசுர சகத் தாக விவரிக்கப்பட்டா லு, மங்ஙனம் பாராது, அத்துவித சொரூப மாய்ப் பார்க்கின் றதே யதார்த்த மாகையா, லப் பொய் யான சீவேசுர சகத் தின் வேறுபாடான நினைப் பின்றி, யத்துவித மான சச்சி தாநந்த ஸ்வரூபமா யிருப்பா யென்பார், 'சீவ பேத கற்பி தங்களை மறந்து நீ சின்மய மாவாயே' யெனக் கூறினர்.

(தா—ம்) அநாத்மா வான நாம ரூபம் பொய் யென் றறிந்து, அவைகளி லொன்றையுஞ் சுட்டாது, அத்துவித மான ஆத்ம சொரூபமா யிருப்பா யென்ற தாம். 103

(அ—கை) பொய்யான நாம ரூபத்தில், மெய் யென் றுண்டாகும் விபரீதத்தை நீக்கும் பொருட்டு வினாதலு, மதற் குத்தரமுங், கூறல்.



பூரிக் குங்கந சச்சிதா நந்தத்திற் பொய்சடந் துயர்மூன்றுந்,
தூரத் தாயினுந் தோன்றுபாழ் விபரிதந் துடைப்பதெப் படியென்ற,
னீரிற் றேன்றுந்தன் னிழறலை கீழதாய் நின்றுலை யினுநேராய்ப்,
பாரிற் றேன்றிய தன்னைநோக் கிடிலந்தப் பாழ்நிழல் பொய்யாமே.

(ப—ம்) நீச னல்லாது பிராமணனா யிருந்து, நீச சங்கத்தினுல் நீசத் தன்மையை யடைந்த தாகத் தோற்று கின்றது போல, அகண்ட மா யத்தி பாதிப் பிரிய சொரூப வாத்மாவா யிருக்கவும், கண்ட மா யசத்துச் சடந் துக்கமா யநாத்மா வான தேக சம்பந்தத்தினுல், 'இறப்பே' னென வும், 'அறியே' னெனவுந், 'துக்கி' யெனவும், 'நான் கட் டைய' னெனவும், 'நெட்டைய' னெனவும், வீ ணான வேறுபாடு தோன் றுகின்ற தென்று னென்பார், "பூரிக்குங் கந சச்சிதாநந்தத்திற் பொய் சடந் துயர் மூன்றுந் தூரத் தாயினுந் தோன்று பாழ் விபரீத' மெனவும், கிணற்றின் கரைமே லூர்த்த முகமா யசைவற்றிருக்கும் புருடன், றன் னிழல் கிணற்றுச் சலத்தி லதோமுக மாகவுஞ், சஞ்சல மாக வுஞ், தோற்றுவதைத் தா னாகப் பார்த்து, அம் மித்தை யான தோற்றத்தை நீக்க, வெத்தநத்தா னிங்காது, அந் நிழ லுக் கதிட்டாந மான தன்னைப் பார்த்தா லந் நிழல் பொய் யெனத் தெளிந்து, தா னசைவற் றிருப்பது போலச், சச்சி தாநந்தமா யதிட்டாந சொரூபமா யிருக்கின்ற தான தன்னி டத்தில், விவர்த்த மாய்த் தோற்றிய மாயையினுற் சிதாபாச னாகவும், இறக்கின்றவ னறியாதவன் றுக்கி யாகவும், தோற் றினு, மப் பொய் யான தோற்றத்தை நீக்க, வெத்தநத்தா னிங்காது, அவைக் கதிட்டாநந் தா னெனப் பார்க்கி, லவை பொய் யெனத் தெளிந்து, அத்துவித மான தா னிருந் தபடி யிருக்கலா மென்பார், 'நீரிற் றேன் றுந் தன் னிழ றலை கீழதாய் நின் றுலையினு நேராய்ப் பாரிற் றேன்றிய தன்னை நோக்கிடி லந்தப் பாழ் நிழல் பொய்யாமே' யெனவுங் கூறினர்.

(தா—ம்) ஆரோப மாய்த் தோற்றுகின்ற சகத்துக்கு அதிட்டாந மான அத்துவித சொரூபமே தா னென் றறியி, லவைகள் பொய் யாய் நீங்கு மென்ப தாம். 104

(அ—கை) அத்துவித மான ஆத்ம சொரூபமா யிருக்கி. லநாத்ம சொரூப மான செகத்து, வந்தது, போனது, தெரிய வேண்டாவோ வெனில்.

ஞாநங் காரண மறிதல்காண் காரிய நாமரூ பப்பேய்க,
ளான தேப்படி யழிந்ததேப் படியென வாய்துதல் பலனன்றே,
மான மைந்தனே தீர்க்கசொர்ப் பநசகம் வந்ததும் பாரா்மல்,
போன துநினை யாமலுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பாயே. 105

(ப—ம்) கிரகத்திற் றீப் பற்றி யணைந்த பின், னவ்வக்கிநி பற்றின விவரத்தையு, மணைந்த விவரத்தையும், விசாரிக்கின் றதனாற் பய னின்மை போற், பிரபஞ்ச முண்டான விதமு, மொழிந்த விதமும், விசாரிக்கி லத்துவிதாநந்த மநுபவித்தலுக்குக் குறைவே யன்றி, அதனாற் பய னில்லை யென்பார், 'நாம ரூபப் பேய்க ளான தெப்படி யழிந்த தெப்படி யென வாய்குதல் பல னன்றே' யெனவும், தீப் பற்றின விவரமு, மணைந்த விவரமும், விசாரியாது, சுக மடைவதற்கே முயற்சிப்பது போல, நீண்ட கந வாகிய பிரபஞ்ச முண்டான விதமு. மொழிந்த விதமுஞ் சிந்திக்காது, அத்துவிதாநந்த மநுபவிக்கும் பொருட்டு, அகண்டாகாச போத மான அத்துவித சொரூபமா யிருப்பா யென்பார், 'தீர்க்க சொர்ப்பந சகம் வந்ததும் பாராமற் போனது நினையாம லுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பா' யெனவுங் கூறினர்.

(தா—ம்) அத்துவிதாநந்தாநுபவ மடைய வேண்டியவனுக்கு, அத்துவித சொரூபாகார மா யிருக்க வேண்டுவதே தவிர, அநாத்மாவி னுற்பத்தி நாசம் விசாரிக்க வேண்டுவே தில்லை யென்ப தாம். 105



(அ—கை) அத்துவித சொரூபாகார மா யிருந்தாலு, மசத்துச் சடந் துக்க மான தேகத்துடன் கூடி யிருக்கும் போது, அத்துவிதாநந்த முண்டாவ தெங்ஙன மெனில்?

அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டு,
நிசத்தி லுள்விழிப் பார்வையா மிப்படி நிரந்தரப் பழக்கத்தால்,
வசத்தி லுன்மந நின்றுசிந் மாத்திர வடிவமா யிடின்மைந்தா,
கசத்த தேகத்தி லிருக்கினு மாநந்தக் கடல்வடி வாவாயே. 106

(ப—ம்) விடனுக்குத் தாசி விருப்ப மெவ் வளவு நீங்குகின்றதோ, வவ் வளவுக்கு, மனைவி யி னிடத்தில் விருப்ப முண்டாவது போல, வநாத்மா வான திரிசியத்தி னிடத்தில், சத்திய புத்தியுடன் பார்க்கின்றதை. யெவ் வளவுக்கு விடுகின்றையோ, அவ் வளவுக்குப் பகிர்முகத் திட்டி நீங்கி, யாத்மா வான திருக்கு சொரூபத்தி, லந்தர் முகத் திட்டி யுண்டாகு மென்பார், 'அசத்தி லெம்மட் டுண் டம்மட்டும் பராமுக மாகினு லம்மட்டு, நிசத்தி லுள் விழிப் பார்வையா' மெனவு. மிகுந்த மது பாநஞ் செய்தவனுக்குத் தேகத்தின் வியாதி முதலியவற்று லுண்டான துன்பந் தோன்றுதபடிக்கு, லகிரி மேலீட்டாற் களிப்பா யிருப்பது போல, வெகு கால மிடைவிடாது பிரியத்துடன் றிரிசியத்திற் பராமுகஞ் செய்து, மநதின் வச மாய்ச் செல்வதை நீக்கி, யதை யுன் வசப்படுத்தி, அத்துவித சச்சிதாநந்த சொரூபமா யிருப்பா யாகி, லசத்துச் சட துக்க மான சரீரத்தி லிருக்கினு, மத் தன்மைகள் தோன்றும லத்துவிதாநந்த சாகர மாவா யென்பார், 'இப்படி நிரந்தரப் பழக்கத்தால் வசத்தி லுன்மந நின்று சிந் மாத்திர வடிவ மாயிடின், மைந்தா கசத்த தேகத்தி லிருக்கினு மாநந்தக் கடல் வடிவாவாயே' யெனவுங் கூறினர்.

(வி—ம்) தேக மென்னும் பதத்துக்குத் தூல சரீர மக்கிரியினாலுஞ், சூட்சும சரீரந் தாபத் திரயாக்கிரியினாலுங், காரண சரீரம் ஞானாக்கிரியினாலுந், தகிக்கப்படுவதா லிவற்றிற்குத் தேக மெனப் பேர் வந்த தென வறிக.

*(தா—ம்) அநவரதாப்பியாசத்தாற் றிரிசியத்தில் மித்தியா புத்தி யுண்டாகிறதனாலுந், திருக்கு ருப மான அத்துவித சச்சிதாநந்த ஸ்வ ருபம் தா னாகிறதனாலும், அசத்துச் சட துக்க மான சரீரத்தி லிருக்கினு, மத்துவிதாநந்த சாகர மாவா யென்ப தாம்.* 106

**(அ—கை) ஆத்துமாவி னாநந்த சுபாவம் வெளிப் படும் விதந் தெரியும் பொருட்டுச் சீடன் வினாதல்.**

தானன்றி வேறென்று மில்லாத பூரணச் சச்சிதா நந்ததுண்மா,
யூனின்ற வுயிர்தோறு மொன்றது மென்றலஃ தோக்கின்ற படி
[கண்டிலே,
னானென்ற சீவன்கள் சத்தான வகையொக்கு ஞாநங்கள் வெளி
[கண்டதா,
மாநந்த மிதுபோல வெளியாக வுதியாத வடைவேது குருநாதனே.

(ப—ம்) பழுதையைத் தவிரப் பாம்பு தண்ட மாலை முதலியன வே றில்லாதது போலச், சீவேசுர சகத்துத் தனக் கந்நியமா யில்லாத அகண்ட மாயுந், தேக வுற்பத் திக்கு முன்னு, மிறந்த பின்னு, மத்தியி லு மிருப்பதாயு, மதை யறிவதாயுந், தேகத்தைக் கைவிட்டா லுங், கைவிடப் படாத பிரிய மாயு மிருக்கின்ற வாத்ம சொருப மென்பார், 'தானன்றி வே றென்று மில்லாத பூரணச் சச்சிதாநந்த' மெனவும், பிரமாதி ஸ்தம்ப பரியந்த வுயிர்க ளிடத்தி னான் னென்று விளங்கிக் கொண்டிருக்கின்றபடியா லாத்மா, சத் தென்றது தெரிகின்ற தென்றா னென்பார், 'நா னென்ற சீவன்கள் சத்தான வகை யொக்கு' மெனவும், பஞ்சேந்



திரிய வழி யாகப் பஞ்ச விடயங்களை யறிகின்றபடியினா, லாத்மா சித் தென்றது தெரிகின்ற தென்றா னென்பார், 'ஞாநங்கள் வெளி கண்டதா' மெனவுங் கூறினார்.

*(தா—ம்) ஆத்மா சச்சிதாநந்த சொருப மென் றுணர்த்தின வாசிரியரை நோக்கி, யங்ஙன மாயின், சத்தையுஞ், சித்தையும், போல, வாநந்த மேன் வெளி யாகக் காணப்பட வில்லை யென வினாவின தாம்.* 107

**(அ—கை) அவ வினாவிற் குத்தரங் கூறல்.**

உருவங்க ளிரதங்கள் பரிசங்க ளொருபூவி லொன்றது மென்றலுமே,
கரணங்க ளோரோன்றி லோரோன்று தெரியுங்க ணக்கன்றி
[வாராதுகா,
ணருமந்த சச்சிதா நந்தச்சு பாவங்க ளாத்மாவின் வடிவாகிலும்,
பிரபஞ்ச மயமாம்வி ருத்திபே தத்தினாற் பேதங்களா மைந்தனே 108

(ப—ம்) அமிர்தத்தை யருந்தினோரை, யிறவாமற் பிர காச சரீர மாய்ச் சுகமா யிருக்கச் செய்வது போல, சச்சிதா நந்த சுபாவமு, மதுவே தா னென் றறியுஞ் சிதாபாசனைத் தன் னாகார மாக்குகின்றபடியால், 'அருமந்த சச்சிதாநந்தச் சுபாவ, மென்றார்.

**(அ—கை) (இதுவு மது)**

தாமதவி ராசதஞ் சாத்துவித முக்குணத் தால்வரும் விருத்திமூன்ற,
மாமலைக்கண் மூடமுங் கோரமுஞ் சாந்தமு மபிதாந மாதுமகனே,
யேமுறவி ருக்கின்ற சச்சிதா நந்தங்க ளொன்றென்று மொன்றகிலு,
நாமுறைக் கும்விருத் திப்பிறிவி னாற்சொருப ஞாநாதி பிறிவாதுமே.

(ப—ம்) தன்னை யடுத்த விருத்திகள், விடயத்தில், மநுடாநந்த முதலிய பதி னொரு வகை யாநந்தமுஞ், சுழுத்

தியிற், பிரமாநந்தமுஞ், சமாதியில், ஞாநாநந்தமு மடையும் படி செய்விக்கின்ற ஆத்ம சொரூப மென்பார், 'ஏமுற விருக்கின்ற சச்சிதாநந்தங்க' ளெனவும், செந் தாமரைப் புட்பத்திற் சிவப்பு நிறமும், மதுர விரசமு, மிருது பரிசமுஞ், சட்சு சிங்குவை தொக்கு விந்திரியங்களி லொன் ஷென் றறியுமிடத் தொன் ஷென்று பிறித்துக் காணப்பட்டாலு, மெக்காலமும் பிறிபடா தொன்ரு யிருத்தல் போல, மூட கோர சாந்த விருத்திகளி லொன் ஷென் றுதிக்குமிடத்திற், சத்துச் சித்தாநந்த மூன்றி லொன் ஷென்று பிரிந்து வெளிப்பட்டாலு, மவை யெக்காலமும் பிறிபடா தொன்ரு யிருக்கு மென்பார், 'என் றென்று மொன்ருகிலு நா முரைக்கும் விருத்திப் பிரிவிஞற் சொரூப ஞாநாதி பிரி வாகுமே' எனவுங் கூறினர். 109

(அ—கை) இதுவு மது.

சடமான மூடத்த நுக்கல்லு மண்களிற் சத்தோன்று மேதோன்று [மால்,
விடமான காமாதி கோரத்தி லாநந்தம் விளையாதுமற் றதுகளாந்,
திடமான வொழிவாதி சாந்தத்தி லேசச்சி தாநந்த மூன்றும் வேளியா
மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மநமாகிலா நந்தமே. 110

(ப—ம்) சர்ப்பந் தீண்டினவனுக் கவ் விஷ மானது, மிளகு முதலியவற்றின் ரச பேதந் தெரியாதபடி மாறுபடுத்தி மயக்குதல் போலக், காமக் குரோதாதி குண முண்டானவனுக் கவை யாத்மாநாத்மாவின் பேதந் தெரியாதபடி மாறுபடுத்தி மயக்குதலால், 'விடமான காமாதி' யெனவும், பருப்பத மானது, காற்று முதலிய தொன்றியாதிகள், காமாதி யொன்றினுலு மசையா திருப்பது போல, வைராக்கியம் பொறுமை மான வொழி வாதி' யெனவுங் கூறினர்,



(தா—ம்) செந் தாமரைப் புட்பத்தி னுடைய நிற மாதிகள், சட்சு வாதி யிந்திரியங்களாற், பிரித் தறியப்பட்டு, வொன் றறியப் படு மிடத்து, மற்றவை யறியப்படா திருத்தல் போல, ஆத்மாவின் சச்சிதாநந்த சுபாவங்கள் எக் காலத்திலு மொன்ரு யிருக்கவும், மூட கோர சாந்த விருத்தியிற், பிறபட்டுத் தோன்று மெனவு, மாநந்தஞ் சாந்த விருத்தியில் மாத்திரம் வெளிப்படு, மற்றையதில் வெளிப்படா தெனவுங் கூறின தாம். 110

(அ—கை) சச்சிதாநந்த லட்சணத்தின் பொருள் நன் ருய்த் தெரியும் பொருட்டு விஞதலு, மதற் குத்தர முங், கூறல்.

இகமான துருநாத னேசச்சி தாநந்த மெனுமிலக் கணமறிகிலே,
னகலாத சத்தாவ தேதுசித் தாவதே தாநந்தமே தேன்றிடின்,
மிதுகால மூன்றுங்கே டாதிருப் பதுசத்து வேறுபா டறிதல் சித்தா,
மகிழ்காம நுகர்போது சுகமாது மநுபூதி வாழ்வென்பதா நந்தமே.

(தா—ம்) திரி காலத்திலேயுங் கெடா திருப்பது, சத் தெனவும், சகலத்தையும் பிறித் தறிகின்றது, சித் தெனவும், இஷ்டம் லபித்த போ துண்டாகுஞ் சுகமே, யாநந்த மெனவுங் கூறின தாம். 111

(அ—கை) ஆத்மா சச்சிதாநந்த மென்பதற் கநுபவம் விஞதல்.

நாசச்சு ரீரந்தி நுக்துஞ்ச ரீரிதனை நர்ல்வேத மாவாக்கிய,
நீசச்சி தாநந்த மென்றிடினு மாசிரிய னீபிரம மாதுமெனினு,
மாசற்ற சச்சிதா நந்தநா னென்னுமிவன் மன்னுமநு பவமெங்ஙனே,
கோசப்பு ரங்களைமி டித்துத்த கர்த்துமத குஞ்சரக்கு நநாதனே. 112

(ப—ம்) மதங் கொண்ட யானை யானது, அங்குசத்தையுஞ், சங்கிலியையுங் கடந்து, உதாரமாய் யதேச்சை யா

கச் சஞ்சரித்துக் கொண்டு, கோட்டைகளை யிடித்துத் தூ
ளாக்குவது போலப், பிரமாநந்த மேலீட்டால், விதி நிடே
தங் கடந்து, உதாரத்துடன் யதேச்சை யாகச் சஞ்சரித்துக்
கொண்டு பக்குவர்க ளுடைய பஞ்ச கோசங்களை நேதி
களைந்து வே றாக்கி, யாத்மா நுபவ முண்டாகச் செய்யுந்
தேசிகனே யென்றா னென்பார். 'கோசப் புரங்களை யிடித்
துத் தகர்க்கு மத குஞ்சரக் குருநாதனே' யென்றார்.

*(தா—ம்) சுருதி குரு வாக், குறுதிப்படும் பொருட்டு, அநு
பவந் தெரிய வினாவின தாம்.* 112

**(அ—கை) அவ் வினாவிற் குத்தரங் கூறல்.**

செந்மாந் தரஞ்செய்த வினைகளுட் றநுமெனிற் செல்கால மிவனுண்
[டலோ.
கன்மாநு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற காலத்து மிவனுண்
[டலோ,
வுன்மாத யாதநா வுடல்கடவு ளுடன்மநுட வுடன்மாறி மாறியழியுந்,
தன்மாய வுடல்கெடினு மிவனிருப் பதுகொண்டு சத்தென்ப
[தொக்குமகனே. 113

(ப—ம்) தரித்திரன், செல்வவான், கருமி. யுபாசகன்,
முமுட்சு வாகிய சகல ரநுபவ வசநத்தினால், தேக முண்டா
வதற்கு முன்னும், நசித்த பின்னு, மாத்மா விருப்பது
தெரிய வருகின்றதே யென்பார், 'செந்மாந்தரஞ் செய்த
வினைக ளுட றரு மெனிற் செல்கால மிவ னுண்டலோ, கன்
மா நுபவ நரக சொர்க்க மெனில் வருகின்ற காலத்து மிவ
னுண்டலோ' வெனவும், வேஷதாரி பல வேஷம் போட்
டுக் களைந்து, அவைக ணீங்கினாலுந், தா னிருப்பது போலப்,
புண்ணிய பாவ மிசிர, கருமத்துக் கீடாய்த் தேவ சரீரம்
யாதநா சரீரம், மநுட சரீரந், திரும்பித் திரும்பி
வுண்டாகி யழியவுந், தா னப்படி யவைகளைப் போ,



லழியா திருக்கின்றபடிபடியால். ஆத்மா சத் தென்ப தநு
பவமா யிருக்கின்றதே யென்பார், 'யாதநா வுடல் கடவு ளு
டன் மநுட வுடன் மாறி மாறி யழியுந், தன் மாய வுடல்
கெடினு மிவ னிருப்பது கொண்டு சத் தென்ப தொக்கு'
மெனவுங் கூறினார்.

(வி—ம்) நான் பூருவ செந்மத்தில், யாருக்கு மொன்
றுங் கொடாமற் போனபடியால், இந்தச் செந்மத்திற் றரித்
திரத்தை யநுபவிக்கின்றேன், இந்தச் செந்மத்திலுங்
கொடுப்பதற்கு வகை யில்லாதபடியினால், வருகிற செந்மத்
திலுந் தரித்திர னாகவே பிறப்பே னென்கிற தரித்திர
னுடைய வசநமும். நான் பூருவ செந்மத்திற் பெரியவர்
களுக் குபகாரம் பண்ணினபடியா, லிந்தச் செந்மத்தி லைசு
வரிய மநுபவிக்கின்றே, னிந்தச் செந்மத்திலு முபகாரம்
பண்ணினால் வருகிற செந்மத்திலு, மைசுவரிய மநுபவிப்பே
னென்கின்ற செல்வவான் வசநமும், நான் பூருவ செந்மங்
களிற் சற் கருமஞ் செய்த வாசனையா. லிந்தச் செந்மத்தி
லுஞ், சற்கருமஞ் செய்கின்றேன், இதனா லெனக்குப் பர
லோக முண் டென்கிற கருமி வசநமும், நான் பூருவ செந்
மங்களிற் பகவானை யுபாசித்தவ னாகையா, லிந்தச் செந்மத்
தில். நிரதிசய மாகிய பத்தி வந்தது இதனா லெனக்கு
மேலைக்குப் பகவா னுடைய லோக முண் டென்கின்ற
பத்த னுடைய வசநமும், நான் பூருவ செந்மங்களி, லீசு
ரார்ப்பண மாகக் கருமம் பண்ணினபடியா, லிந்தச் செந்
மத்திற் சித்த சுத்தியுஞ், சற்குரு லாபமுஞ், சிரவணாதிகளு
முண்டாயிற்று, நானே கிருதார்த்த னெனக் கினிமேற்
செநந மில்லை யென்கின்ற முமுட்சுவி னுடைய வசநமு,
மாத்மா சத் தென்பதற்குச் சகல ரநுபவமுமா மெனக்
கொள்க.

*(தா—ம்) மநுட தேக முதலியவை நசிக்கினுந், தா னழியா மன் மூன்று காலங்களினு மிருக்கின்றதே, யாத்மா சத், தென்பதற் கநுபவ மெனக் கூறின தாம்.* 113

'அல்லவோ' என்பது, 'அலோ' எனத் திரிந்து நின்றது.

**(அ—கை) இதுவு மது.**

இருளாக மூடுஞ்சு ழுத்தியிலி ராத்திரியி லிரவிசுட ரற்றபொழுது,
மருளாம லிருளையும் பொருளையுந் தெரிகின்ற வகைகொண்டுசித்
தாகுமே,]
பெருவாழ்வு மிக்கதா னேதன்னி டத்தினிற் பேராத பிரியமனுத,
லருகாத பிரியஞ்சு கத்தில்வரு மாதலா லாநந்தமா மைந்தனே. 114

(ப—ம்) சகல கரணங்களு மடங்கிய சுழுத்தி யவத்தையி,லறியாமையையு,மாநந்தத்தையுங் கண்டு. 'ஒன்று மறியேன் சுகமாய் நித்திரை போனேன்' னென்கின்ற வநுபவ வசநத்தினுலுஞ், சூரியாதிப் பிரகாச மில்லாத சொப்பநத்திலு, மநோ ராச்சியத்திலு, மதிற் றோற்றுகின்ற பொருள்களை யறிந்து சொல்வதனுலுஞ், சாக்கிர அவஸ்த்தையிற் சூரியப் பிரகாசத்தையு, மதில் வேறு வே ருய்த் தோற்றும் வஸ்த்துக்களையு, மறிந்து சொல்கின் றதனுலுஞ், சூரியாதிப் பிரகாச மில்லாத இருளையும், அதிற் பொது வாயத் தோற்றும் வஸ்துக்களையு, மறிந்து சொல்லு மநுபவத்தினுலு, மாத்மாச் சித் தென்ப தநுபவமா யிருக்கின்றதே யென்பார், 'இருளாக மூடுஞ் சுழுத்தியி லிராத்திரியி லிரவி சுடரற்ற பொழுது மருளாம லிருளையும் பொருளையுந் தெரிகின்ற வகை கொண்டு சித்தாகுமோ' யெனவும், புருடன், தான் கட்டி யிருக்கின்ற வஸ்திரத்தைக் கைவிட்டாலுந், தன்னைக் கைவிடப்படாதிருக்கின்றது போல, அகண்டாநந்த சொரு மான ஆத்மா, எதை யெதைக் கைவிட்டாலுந், தன்னைக் கைவிடப்படாத பிரிய வஸ்துவா யிருப்பதனுலும். பிதாவுக்குப் புத்திர னிடத்திற் பிரியத்தைக் குறித்து, அவன் பந்துக்க ளிடத்திற் பிரிய முண்டாவது போலத், தன்னைக் குறித்துச், சுகத்துக் கேது வான வஸ்துக்களிடத்திற் பிரிய முண்டாவதாலும், ஆத்மா வாநந்தமென்ப தநுபவமா யிருக்கின்றதே யென்பார், 'பெருவாழ்வு மிக்க தானே தன்னிடத்தினிற் பேராத பிரியமதனு, லருகாத பிரியஞ் சுகத்தில் வரு மாதலா லாநந்தமா' மெனவுங் கூறினுர்.



*(தா—ம்) அவத்தாத் திரயத்திலுஞ், சகலத்தையுஞ் விளக்குவித் தறிகின்றதே, யாத் மாச்சித் தென்பதற் கநுபவ மெனவும், கைவிடப்படாத அதிப்பிரிய வஸ்துவா யிருக்கின்றதுங், தன்னைக் குறித்து விடயங்களிடத்திற் பிரிய முண்டாவது, மாத்மா வாநந்த மென்பதற் கநுபவ மெனவுங் கூறிய தாம்.* 114

**(அ—கை) அதிகப்பிரிய வஸ்துவே யாத்மா வானு, லஃ தாநந்தத்திற்குச் சாதந மாகாதோ வென விஞதலு, மதற் குத்தரமுங், கூறல்.**

அந்நபா நாதிசுக சாதநம தாகையா லார்க்கும்வேத பிரியமாத,
மின்னவா றந்மாவு மாநந்த சாதநமே னக்கருதல்பொ நளல்லவே,
சொன்னவாந் மாவையொரு சுகசாத நங்களோடு சொல்லுவா
[யாகின்மகனே,
வுன்னதா நந்தம்வே றேதநுப விப்பதா நுபயவாந் மாவுளதோ.

(ப—ம்) சுக சாதநமா யிருக்கின்ற மாம் பழம் வேருகவும், அதை யநுபவிக்கின்ற புருடன் வே ருகவு மிருக்கின்றது போல, ஆத்மா ஆநந்தத்துக்குச் சா தந மென்று சொன்னு, லவ் வாத்மா வே ருகவும், அநுபவிக்கின்ற வாத்மா வே ருகவு மிருக்க வேண்டுமே, அப்படி யில்லாத படியினு, லாத்மா வாநந்தத்துக்குச் சாதந மல்ல வென்பார், 'உன்ன தாநந்தம் வே றே தநுவிப்பதா ருபயவாந்மாவு முளவோ' வென்றுர்.

*(தா—ம்) சாதந மிறந்து சாத்திய மான விடத்திற், சேடித்த நிரதிசயாநந்தம் வேறு, மதையநுபவிக்கு மாத்மா வேறு மின் ருதலி, னவ் வாத்மாவே யாநந்த மாவ தன்றி, யதற்குச் சாதந மாகா தென்ப தாம்.* 115

**(அ—கை) விடயங்களிற் பிரிய மிருக்கின்றது போல, வாத்மாவி னிடத்திலும் பிரிய மிருக்கின்றதனு, லாத்மா வாநந்த சொருப ரென்ப தெப்படி யெனில்?**

விடயசுக மதில்வருதல் பிரியமாத் திரமாதும் வெதுபிரிய மாந்மா
[விலாம்,
விடயசுகம் வருபிரிய மாறிவரு மாந்மாவில் வெதுபிரியமா றதுகாண்,
விடயசுகம் விடலுமாங் கோளலுமா மாந்மாவை விடுவதேவர்
[கோள்வதேவர்பார்,
விடயசுக போகங்கள் விடுமவனை யவனுல்வி டப்படாதொரு
[நாளுமே. 116

(ப—ம்) விடயத்தி னிடத்தில் விஷங் கலந்த தேன் போல, ஆயிரந் துக்கதுட னணு மாத்திரமாய்ப் பிரிய முண்டாவதனுல், விடய மாநந்த மல்ல. ஆத்மாவி னிடத்தி லணுவுந் துக்க மில்லாம, லள வில்லாத பிரிய மிருக்கின்றதா, லாத்மாவே யாநந்த மென்பார், 'விடய சுகமதில் வருதல் பிரிய மாத்திரமாகும் வெகு பிரிய மாந்மாவிலா' மெனவும். ஸ்திரி முதலான விடய, முபாதி யுள்ளது, வாகையா, லதி லுண்டாகும் பிரியம், வியாதி யாதியால் நீங்கி நீங்கி யுண்டாகு, மாத்மா நிருபாதிக ரானபடியினு, லவ் வாத்மாவி னிடத்தி லிருக்கின்ற மிகுந்த பிரிய, மொரு விதத்தி லு நீங்காதென்பார், 'விடய சுகம் வரு பிரிய மாறிவரு மாந்மாவின் வெகு பிரிய மாருது' எனவுங், விடயங்களந்நியமா யிருப்பதாற் கூட்டவுந், தள்ளவுங் கூடு, மாத்மா வநந்யமா யிருப்பதாற் கூட்டவுந், தள்ளவுங் கூடா தென்பார், 'விடய சுகம் விடலுமாங் கொளலுமா மாந்மாவை விடுவதெவர் கொள்வ தெவர் பா' ரெனவும், தேகத்தி லிருக்கின்ற வஸ்திராபரணுதியை நீக்கினு, மத் தேகத்தை நீக்கக் கூடாதது போல, வாத்மாத் தனக் கந்நிய மான விடயங்களை நீக்கினுந்,தன்னை யெக்காலமு நீக்கக் கூடா தென்பார். 'விடய சுக போகங்கள் விடுமவனை யவனுல் விடப்படா தொருநாளு' மெனவுங் கூறினுர்.



*(தா—ம்) விடயங்களிற் பிரிய மநேக துக்கத்துட னணுவா யிருப்பதனுலு, மது மாறி வருவதாலும், விடயந் தள்ளக் கூட்டத் தக்கதா யிருப்பதனுலு, மது வாநந்த மல்ல மெனவுங், ஆத்மாவி னிடத்திற் பிரிய மானது, அற்பமுந், துகக்மு, மில்லாம, லள வற்றதா யிருப்பதனுலு, மொருக்காலு, நீங்கா திருப்பதனுலு, மாத்மாத் தள்ளக் கூட்டப்படாததா யிருப்பதனுலு, மாத்மாவே யாநந்த சொரூப ரெனவுங் கூறின தாம்.* 116

**(அ—கை) ஆத்மா ஆநந்த சொருபராய்த் தள்ளக் கூட்டப்படாதவரா யிருக்கிற், றன்னை வெறுப் பாக நீக்காரோ வென விஞுதலு, மதற் குத்தரமுங், கூறல்.**

வேகின்ற கோபங்க ளாலேன்னை நான்கோன்று விடுகிறே னென்று
[சிலபேர்;
சாகின்ற படியினுற் றன்னையே தான்கோன்று சாவனெனல் சங்கை
[யென்றுற்,
றேகந்த னைக்கோல்லு மவனுல்வீ டப்பட்ட தேகமவ னன்றுமகனே
யாகந்த னிற்கோப மலதுதனை யொருநாளு மாந்மாவெ றுப்ப
[திலையே. 117

(ப—ம்) மழை காலத்திற் குளிருக் காகக் கம்பளியைத் தரித்துக், கோடை காலத்து உஷ்ட்ண நிமித்த மதை நீக்கிவிடுகின்றவ னெப்படி யதற்கு வேருே, அக் கம்பளி தன் சுகத்துக் கேது வான தல்ல வென், றெப்படி யதை வெறுக் கின்ருனே, தன்னை வெறுக்க வில்லையோ, அது

போல,வாத்மாத் தன் பிரியத்தைக் குறித்துச் சுகத்துக் கேது வான தா யிருக்கும் போது. தேகத்தைப் பேணிச், சுகத்துக் கேது வான தல்லாத போது. அதை விடுகின்ற ஆத்மா, வதற்கு வேறே, அது, தன் சுகத்துக் கேது வான தல்ல வென், றதை வெறுக்கின்ருரே தவிரத், தன்னே வெறுக்க வில்லே யென்பார், ‘தேகந் தனேக் கொல்லு மவனுல் விடப் பட்ட தேக மவ னன்று மகனே, ஆகந்தனிற் கோப மலது தனே யொரு நாளு மாங்மா வெறுப்ப திலேயே’ யென்ருர்.

*(தா—ம்) ஆத்மா தேகத்துக்கு வே றெனவுங். தற் பிரியத் திற்குக் குறைவு வாராமற் றேகத்தை நீக்குகின்றதே யன்றித், தன்னே வெறுக்கின்ற தில்லே யெனவுங், தா னெப் போதுஞ் சுக சொரூப ரெனவு மறிவித்த தாம்*

117

(அ—கை) ஆத்மாவே யாநந்த சொரூப ராஞற், றந முதலியவை யாநந்த மாகத் தோற்றுவானே னெனில், (முக்கியம்)

(அ—கை) மூக்கிய மான கூடத்தரே யாத்மா வென்ருற். புத்திரனேயு யாத்மா வெனச் சுருதி கூறு வானே னெனில்.

தாகப்ப டும்பொருளி லுமகன் பிரியமாந் தனேயனிலு முடல் பிரியமா,
மாகத்தி லும்பரிய மிந்திரிய மாங்கரண மதனிலும் பிரியமுயிரா.
மேகப்பி ராணனிலும் வெகுபிரிய மாந்மாவி லிந்தவாந் மாமுக்கிய,
மூகத்தி னுற்கேளண மித்தைகர்த் தாமுன்று மோரோன்றி லதிக
[மகனே. 118

(ப—ம்) ராச கலக முதலியவற்ருற் காணி யாதியை விட் டேகுமிடத்திற், கையி லடங்கின தநம் பிரிய வஸ்து, அந்தத் தநத்தைச் செலவு செய்து புத்திரனுக் குற்ற வியாதி யையும், விலங்காதியையுங், தீர்க்கின்ற தா, லந்தத் தநத்தி



திலும், புத்திரன் அதிகப் பிரிய வஸ்து என்பார். ‘தாகப் படும் பொருளிலும் மகன் பிரியமாம்’ எனவும், புத்திரனு டன் ரு னிருக்குங் கிரகந் தீப் பற்றிய’விடத் தவனே விட்டுத், தன் றேகம் பிழைக்க வேண்டு மென் ரேடுகையிஞலும், புத்திரனேக் குறித்துத் தனக்கு விலங்காதி யுற்ற விடத் தவ னேக் காட்டிக் கொடுத்துத் தான் தப்புகையிஞலும், அப் புத்திரனிலுந் தன் றேக மதிகப் பிரிய வஸ்து வென்பார், ‘தனேயனிலு முடல் பிரிய’ மெனவும், தூளிக் காற்றுக் கொசுகாதி யுற்ற விடத்தி, லிந்திரியங்களேப் பதநம் பண் ணித் தேகத்தைக் கைவிடுகையாற், றேகத்திலும் ஞாந இந் திரியங்க ளதிப்பிரிய வஸ்து வென்பார், ‘ஆகத்திலும் பிரிய மிந்திரிய’ மெனவும், யோசனே செய்யும் போதுங், தியாநஞ் செய்யும் போது, மதற்கு விக்கிந மான இந்திரியங்களே யடக்குகையால், ஞாநேந்திரியங்களிலு, மந்தக் கரண மதிப் பிரிய வஸ்து வென்பார், ‘கரண’ மெனவும், நித்திரை செய்யுமிடத்து, மநோ லயஞ் செய்யுமிடத்தும், விட்சேப மான சங்கற்பத்தை யொழிக்கையிஞலே, அந்தக் கரணத் திலுஞ், சீவ னதிப்பிரிய வஸ்து வென்பார், ‘அதனிலும் பிரிய முயிரா’ மெனவும். பிராண கண்டந மான ஆக்கினே வந்த விடத்தி, லிச் சீவன் நமக்குத் தகா தென் றுபேட்சிக கையிஞலு, மரண காலத்தி விந்த வேதனேப்படுகிறதிலு, மென் சீவன் போகாதோ வென்று தோற்றுகையிஞலு, மொன்றைச் சுட்டு மிடத்தி, லென்றைக் கிச் சுட் டற்றுச் சும்மா விருக்கலா மெனத் தோற்றுகையிஞலுஞ், சீவ னிலு, முற்பத்தி நாச மன்றி யசங்கமா யெப் போதுங் கை விடப்படாததா யிருக்கின்ற கூடத்த ராகிய வாத்மாவே யதிகப் பிரிய வஸ்து வென்பார், ‘ஏகப் பிராணனிலும் வெகு பிரிய மாங்மாவி’ லெனவும், புத்திரன் றேகஞ் சீவன் மூன்றையு மாத்மா வெனச் சுருதி பூருவ பட்ச மாய்க் கூறினும், யுத்தியாற் பார்க்கு மிடத்தி, லவைக ளோ ரோர் வகையிற் பிரதாநமா யிருப்பதஞற், புத்திரனே யாத்மா வென்ற திம் மூ வகையி லொன்றை யல்லாம லப் புத்திரன்

முக்கிய வாத்மா வல்ல, கூடத்த ரப்படிக் கில்லாம லெப்போது முக்கிய மான வாத்மாவா யிருப்பா ரென்பார், ‘ஊ க த் தி னு ற் கௌண மித்தை கர்த்தா மூன்று மோ ரொன்றி லதிக’ மெனவுங் கூறினர்.

*(தா—ம்) தந முதலிய வாறு, மோ ரொரு காலத்தி லாநந்தமா யிருந்து கைவிடப்படு மெனவும், ஆத்மா வெப் போதுங் கைவிடப் படாத பரமாநந்த சொருப ரெனவும், புத்திரனை யாத்மா வென்பது, வேறொரு வகையிற் றேகத்தையுஞ், சீவனையும், ஆத்மா வென்பது போலேயே தவிரப், புத்திர னு த் ம ா வல்ல வெனவுங் கூறினதாம்.*

118

**(அ—கை) இந்த நாலு வகை யாத்மாவி, லெது முக்கிய மெனில்.**

கேடலான பொழுதிவன் காணிக்கு மகனுன கேவுணவாந் மாமுக்
விடலாத வுடலம்ப ரிக்குநா ளுடலான மித்தையாந் மாமுக்கியந். [கியம்,
திடமான நன்மைகதி வேண்டினுற் கர்த்தனுஞ் சீவவாந் மாமுக்கியஞ்,
சடமாயு முத்தியினின் ஞானவாந் மாவான தானேமு காமுக்கியம். 119

(ப—ம்) புருடனைப் பார்த்துச் சிங்க மெனச் சொல்லு மிடத்திற், சிங்கத்தின் சௌரிய குண மப் புருட னிடத்தி லிருப்பது போலத், தகப்ப னுடைய குணங்களிற் சிறிது புத்திரனிடத்தி லிருப்பதைக் குறித்துக் கௌணுத்மா வென்கின்ற அப் புத்திர னுனவன், மரண காலத்திற் றுன் செத்தாலும், பிள்ளை பிழைத்தாற் போது மென்றுந், தனக்குப் பின் தன் னதீநத்தி லிருந்து பிள்ளை யானது பாடும், பழியு மிரணமுந் தன்ன தாக ஒப்புக் கொண்டு, குடும்பத்தை ரட்சிக்கு மென்றுந், தோற்றுவதைக் குறித்து, வந்த வவசரத்தில் முக்கிய மானுலு, மந்தக் கௌணுத்மா வான புத்திரனெப் போது மங்ஙனந் தோற்றுதபடியால், முக்கிய மல்ல



வென்பார், ‘கெட லான பொழுதிவன் காணிக்கு மகனுன கெவுண வாந்மா முக்கிய’ மெனவும், கட்டை யானது பிராந்தியினுலே கள்ள னெனத் தோற்றுவது போல. மித்தையா யநாத்மாவா யிருக்கின்ற தேகம், விபரீதத்தினு லாத்மாப் போற் றோற்றுவதைக் குறித்து. மித்தை யாத்மா வென்கிற வத் தேக மானது, அதை விரும்பிப் பேணுகின்ற காலத்தில், புத்திராதியைப் பேணுது, அருந்தல் பொருந்த லான விடயங்களைச் சம்பாதித்து. அத் தேகத்தையே சவ ரெட்சணை செய்கின்றதைப் பற்றி, யந்த வவசரத்தி, லது முக்கிய மானுலு, மெப் போது. மங்ஙன மில்லாதபடியால், முக்கிய மல்ல வென்பார், ‘விடலாத வுடலம் பரிக்கு நாளுடலான மித்தை யாந்மா முக்கிய’ மெனவும், சூரியப் பிரதிபிம்ப மானது, மயக்கத்தாற் சூரிய னெனத் தோற்றுவது போலக், கர்த்திருத்வாதியை யுடையதா யநாத்மாவா யாத்மாவின் பிரதிபிம்பமா யிருக்கின்ற சீவ, னறியாமையினு லாத்மாப் போற் றோன்றுவதைக் குறித்துக், கர்த்திருத்துவமா மென்கின்ற வச் சீவ னுனவன், சொர்க்க முதலிய நற் கதியை விரும்பின காலத்திற். றேகாதிகளைப் பேணுது, மந்திர லோப, கிரியா லோப, திரவிய லோப மில்லாமல், மிகுந்த வருத்தத்துடன் செய்கின்ற யாகங்கள், பஞ்சாக்கினி மத்தி யாதிப் பிரயாச மான தவங்கள் முதலிய வற்றூ, லச் சீவனுக்கு நரக துன்பம் வராது, சுகந் தேடுகின்றதைப் பற்றி, யந்த வவசரத்திற், சீவன் முக்கிய மானுலு, மெப் போது மங்ஙன மிராதபடியால், முக்கிய மல்ல வென்பார். ‘திடமான நன்மை கதி வேண்டினுற் கர்த்தனுஞ் சீவ வாந்மா முக்கிய’ **மெனவும்,** மயக்க மில்லாது, கட்டையைக் கட்டையாகத் தோற்றுவது போலச், சச்சிதாநந்தமா யாத்மாவா யிருக்கின்ற சாட்சியை, ஐயந் திரி பின்றி, யாத்மா வாகத் தோற்றுவதைக் குறித்து.முக்கிய வாத்மா வென்கின்ற வச் சாட்சி, பத்தாவான் றன்னைத் தா னென்று அறிய விரும்புவது போலச், சீவேசுர சகத்தின் றோற்ற

மில்லாத பரமோட்ச மடைய விரும்புங் காலத்திற், புத்திரன் றேகஞ் சீவனை வெறுத்துச், சாதந சதுட்டயத்தைப் பெற்று. ஞாநாசாரியரை யடைந்து, சிரவணுதி செய்து. நான் நிச்சங்கன். நான் நிராகார, ஞன் நிர்ச் சீவ, ஞன் சுயம் பிரகாச னென்கின்றதைக் குறித்து. வச் சாட்சி யந்த வவசரத்தில் மாத்திரம், முக்கியம் போலத் தோற்றினும். புத்திராதிக ளோ ரோர் காலத்தில் முக்கிய மாய்த் தோற்றிப், பின்பு மாறி, அமுக்கிய மாய்ப் போவது போல வின்றிச், சாட்சி முக்கிய மெனத் தெரிந்த பின்பு, மாருது எப்போது முக்கிய மாகவே யிருப்பதனுலு, மசத்துச் சடந் துக்க மான வவைகளைத் தள்ளினுலுஞ், சச்சிதாநந்த மான தான் தள்ளப்படாததா யிருப்பதனுலு. மச் சாட்சியே மிகவு முக்கிய மென்பார். ‘ச ட மா யு முத்தியினின் ஞாநவாங்மா வான தானே மகா முக்கிய’ மெனவுங் கூறினுர்

(தா—ம்) *புத்திராதி மூன்று மோ ரோர் காலத்தில், முக்கிய மாகத் தோற்றினும், பின்பு மாறுவதால், முக்கிய மெனவும், ஞாநவாத்மா வான சாட்சி, முக்கிய மாய் மாரும லிருப்பதனுல் மகா முக்கிய மெனவுங் கூறின தாம்.*

119

(அ—கை) மகா முக்கியமா யிருக்கின்ற வாத்மாவே, மாருத வாநந்த சொருப ரென்ப தெங்ஙன மெனில்,

புலியுமநு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி னும்
[வெறுப்பா,
முலகிலிரு வகையுமல் லாதபுல் லாதியி லுதாசீந மாமாதலான்,
மலிநமறு சிந்மயன் பலவகையு மிப்படிம கிழ்ச்சியில் விருப்ப
[மிகழா,
னலகிலா நந்தவடி வாதுமன் சொருபத்தை யாராய்ந்துபார் மைந்
[தனே. 120

(ப—ம்) அந்நியமா யெப்போது மப்பிரியமா யிருக்கின்ற வியாக்கிர மாதி சீவர்களின் மூல மாய்ச் சீவனுஞ் செய்கின்றவனுக்குத் திரவி யாதி யடைவதற் கேதுவாகின்றதனுற் பிரிய மாகு மென்பார், ‘புலியு மநுகூல மெனி லிட்டமா’ மெனவும். அயலா, யெப்போதும் பிரியமா யிருக்கின்ற புத்திராதிக ளொருவனுக்குத் தன் னிஷ்ட மான காரியத்துக்கு விக்கிநம் பண்ணுகின்றதனு லப்பிரிய மாகு மென்பார், ‘பகை செயிற் புதல்வ னெனினும் வெறுப்பா’ மெனவும், வேரு யெப் போது முபேட்சையா யிருக்கின்ற துரும்பாதிக ளொருவனுக்குப் பல்லுக் குத்த லாதிக் குதவுகின்றதனுற் பிரியமுஞ், சிரங்கிற் படுத லாதியா லப்பிரியமு மாகு மென்பார், ‘உலகி லிருவகையு மல்லாத புல்லாதியி லுதாசீநமா’ மெனவும், அந்நியமா யிருக்கின்றதனுலே புத்திர புலி புல் லாதியினிடத்திற். பிரிய மாதிகள், மற் றென் ருக மாறுபடுவது போல, அஞ்ஞாநாதி மல மற்றுச் சுயம்பிரகாசமா யிருக்கின்ற வாத்மா வநந்ய மாயிருப்பதனுலே, தற் பிரிய மாரு தென்பார், ‘மலிந மறு சிந்மயன் பலவகையு மிப்படி மகிழ்ச்சியில் விருப்ப மிகழா’ னெனவும், வாக்கு மநதுக் கெட்டாத ஆநந்த சொருப மென்பார், ‘அலகி லாநந்த வடிவ’ மெனவுங் கூறினுர்.

(தா—ம்) *புத்திரப் புலி யாதி யந்நியமா யிருப்பதனு, லவைகளிடத்திற் பிரிய மாதி மாறு மெனவும், ஆத்மா அநந்நிய மாகையினுல், தற் பிரிய மாரு தெனவும், ஆகையினுலே, அவரே, மாருத வகண்டாநந்த சொருப ரெனவுங் கூறின தாம்.*

120

(அ—கை) ஆநந்த மெத்தனை வகை யென்று விஞதலு, மதற் குத்தரமுங், கூறல்.

மாநந்சி றந்ததரு நாதனே யாநந்த வகைகளைத் தனையென்னிலோ,
ஞாநந்தி கழ்ந்தபிர மாநந்தம் வாசநா நந்தம்விடயா நந்தமென்,
றநந்த மூன்றுவித மெட்டுவகை யென்பர்சில ரவ்வைந்து மிதிலடக்க,
மாநந்த வகைசொலக் கேண்மைந்த னேயெட்டு மிவையின்ன
[தின்னதெனவே. 121

(ப—ம்) பிரம ஞாந, மீசுர பத்தி, சிவ காருண்யம், பாச வைராக்கிய நான்குமே திரு மேனி யாக வெழுந் தரு ளிப் பிரமாதிகளா லுந் துதிக்கும் பெருமை யுடைய தேசிக ராசனே! யென்பார், 'மாநஞ் சிறந்த குரு நாதனே' யென வும், அறிவினல் விளங்குவ தாயுந், திரி புடி யற் றிருப்ப தாயும், வாசநாநந்தம் விடயாநந்தங்களினு மிகுந்ததாயு மிருக்கின்ற சுழுத்தி யவத்தையி லுண்டாகின்ற சுக மென் பார், 'ஞாநந் திகழ்ந்த பிரமாநந்த' மெனவும், பிரமாநந்தத் தில், முக்கியாநந்தமும், வாசநாநந்தத்தில், நிசாநந்தமும், விடயாநந்தத்தி, லாத்மாநந்தமு, மத்துவிதாநந்தமும், வித் தையாநந்தமு, மடங்கியிருக்கின்ற தென்பார், 'அவ் வைந்து மிதி லடக்க' மென வொருமை யாகக் கூறினர்.

*(தா—ம்) ஆநந்தத்தின் றொகை முக்கிய பக்ஷ மூன் றென வும், பகுப் பெட் டெனவுங் கூறின தாம்.* 121

**(அ—கை) அவ் வஷ்ட விதாநந்தங்களைக் கூறல்.**

போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப் போதுளது பிரமசுகமா,
மோகத்த நந்தலிற் சுகம்வாச னைச்சுக முமப்பிரிய மாந்மசுகமாம்,
யோகத்தி லுளதுமுக் கியசுகமு தாசீந முற்றசுக நிசசுகமதா,
யேகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கியமெ ழுந்தசுக ஞாந
[சுகமே. 122

*(தா—ம்) சுருக்க மான அருத்தத்துட னவ் வாநந்தங்களி ஞமங் கூறின தாம்.* 122

**(அ—கை) அவற்றில், விடயாநந்த விலக்கணங் கூறல்.**

இவ்வா றுரைசெய்த சுகபே தங்களி னியல்பாம் வகைசொல
[மகனேகே,
ளோவ்வா நனவினி லுழல்வா ரிடர்கேட வுறங்குஞ் சயநம துறு
[நோந்,
சேவ்வா மநமக முகமா மதிலொளி சித்தின் சுகநிழல் சேருங்கா,
ணவ்வா றிவனுள மகிழ்வா மநுபவ மதுதான் விடயசு காநந்தம். 123



(ப—ம்) சுழுத்தி யவத்தையி லுண்டாகின்ற சுகத் தைப் போலத், தெரிசந சாமிப்பிய சையோகத்தினு லருந் தல் பொருந்த லாகிற விடயங்களி லுண்டாகும் பிரிய மோ தப் பிரமோதமே விடயாநந்த மென்பார். 'அவ்வா றிவ னுள மகிழ்வா மநுபவ மதுதான் விடய சுகாநந்த' மென்றுர்.

*(தா—ம்) மநது விடய நாட்டம் விட்டுச், சுழுத்தியி லடங்கும் போது சுக முண்டாவது போலச், சாக்கிரத்தில் விடயம் லபித்த துக்குத் தக்கபடி, மநது சாந்தப்படும் போ துண்டாகுந் திருப்தியே, விடயாநந்த மெனக் கூறின தாம்.* 123

**(அ—கை) பிரமாநந்த விலக்கணங் கூறல்.**

ஈநந் தருசுக விடயந் திரிபுடி யிடரா மெனமந மசையாமற்,
சேநந் தனதுத லாயந் தனில்விழ செயல்போல் நித்திரை சேறி
[சீவன்,
றனந் தமில்பா னுடனோன் றுவனெரு தனையல் லதுபிற நினையாம,
லாநந் தமயனு மாவன் சுகமிது மதுதா னுயர்பிர மாநந்தம், 124

(ப—ம்) விடயாநந்தத்தி லென் னுடையது, பிற ருடையது, வென்று அபிமாநிக்கின்ற ஞாதிருவும், செவ் வையா யிருக்கவேண்டு மென்னு மாசையுங், கெட்டுப் போ கு மெனும் பயமுந், தோற்றுவ தாகிய ஞாநமும், நல் விடயந் தீ விடய மாகிய ஞேயமுங் கூட விருக்கின்றதனுற் றுன்ப மென்பார், 'ஈநந்தரு சுக விடயந் திரிபுடி யிடரா' மென வும், பருந் தானது, தன் கூண்டி லதி வேகமா யடைவது போலவும், கையி லிருந்து விட்ட வல் லூறு, திரும்பி யதி வேக மாய்க் கையில் வந் திருப்பது போலவுஞ், சாக்கிர வவஸ்தையிற் சாதி யாதி வேறுபாட்டுடன் நாநா வியா பார முற்று, அதி லுண்டாகுந் துன்பத்தை யடைந்த சிதா பாச, னத் துன்பத்தை நீக்கும் பொருட்டு, அத் தொழிலை யும் விட்டு, மதிற் செல்லு மநதையு மடக்கிக் கொண்டு, ஒரு விடயத்திலுஞ் செல்லாம, லதி வேக மாகச் சுழுத்தி

யவத்தையிற் பொருந்துவ னென்பார், 'மந மசையாமற் சேநந் தனது குலாயந்தனில் விழு செயல் போ னித்திரை செறி சீவ' னெனவும், அச் சுழுத்தி யவத்தையி லிருக்கின்ற சிதாபாசன், நாச ரகித மாய்ப் பரிபூரணமா யிருக்கின்ற பிரம சொருபத்திற், கட நிறைந்த சல மானது, அக் கடத்தைக் கயிற்றினற் கட்டிக் கிணத்துள் விட்ட போது, அச் சலத்துடன் கலவாம லொன்ரு யிருப்பது போலப், பொருந் தாமல் பொருந்துவ தான வத்தியாச வயிக்கியமா யிருப்பா னென்பார். 'தா னந்தமில் பர னுட னென்றுவ' னெனவும், அச் சுழுத்தி யவத்தையிற், பரிபூரணப் பிரம்ம சொருபத்தி லத்தியாச வயிக்கிய மான சிதாபாசன். ராகத் துவேஷமற் றிருக்கின்ற குழந்தையுஞ், சிந்தனை யற்றிருக்கின்ற மகா ராசாவுங், கற்கவேணு மென்னுங் கவலை யற் றிருக்கின்ற மகாப் பிராமணனுஞ், சுகமாய் யிருக்கின்றது போல, ஒரு சுட்டுதலு மற்று, ஆநந்த வடிவமா யிருப்பா னென்பார், 'ஒரு தனை யல்லது பிற நினையாம லாநந்த மய மாவ' னென வும், அச் சுழுத்தி யவத்தையிற் றிரி புடி யற் றுண்டாகுஞ் சுகமே பெரி தான் வாநந்த மென்பார், 'சுக மிகு மதுதா னுயர் பிரமாநந்த' மெனவுங் கூறினர்.

*(தா—ம்) விடயாநந்தந் திரி புடியுடன் கூடிய துன்ப மென நீத்துச், சிதாபாசன் மந மடங்கின சுழுத்தி யவத்தையை யடையும் போ துண்டாகு மாநந்தமே பரமாநந்த மென்ற தாம்.* 124

**(அ—கை) சுழுத்திச் சுகமே பிரமாநந்த மென்பதற்குப் பிரமாணம் யாதெனில்?**

தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்விழி துயில்
[வோர்க,
டாங்கு மலரணை நன்ற கச்சிலர் சம்பா திப்பது தானாகந்,
தீங்கு நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியா தமளிசெய்
[பொழுதேபோ,
லாங்குள் வெளிகளு மறியா தநுபவ மதனு லதுபிர மாநந்தம். 125



(ப—ம்) சாக்கிர சொப்பநத்தில், விக்ஷேபத்தினெனுந்த மநது, சுழுத்தியிற் சுக மடைதலா, லது பிரமாநந்த, மதற்குத் திட்டாந்தம், வல் லூறு, பருந்து, குழந்தை மகா ராசா, மகாப் பிராமண னென்று வேதங் கூறுகின்ற தென்பார், 'தூங்குஞ் சுகமது பிரமச் சுக மெனல் சுருதிப் பொரு' ளெனவும், சுழுத்தியில் பிரமாநந்த மில்லாவிட்டா, லிச் சுழுத்தி யடைவதற் கேது வான, பாய் தலை யணை முத லானவற்றை யேன் தேடுகின்ருர்கள், என்ற யுத்தியினுலுஞ், சுழுத்தியிற் பிரமாநந்த முண் டென்பார், 'விழி துயில்வோர்கள் தாங்கு மல ரணை நன்ருகச் சிலர் சம்பா திப்பது தா னாக' மெனவும், சுழுத்தியில் ஆநந்த மில்லா விடில், ஸ்திரியினுற் றழுவப்பட்டு விடயாநந்த மநுபவிக் கின்றவனுக்கு, வீட்டிற்குள் காரியமும், வெளியிற் காரிய முந் தெரியாதது போல, உள்ளே சொப்பந வியாபாரமும், வெளியிற் சாக்கிர வியாபாரமு மேன் தோன்ரு திருக்கின் றது, என்னும் அநுபவத்தினுலுஞ், சுழுத்தியிற் பிரமாநந்த முண் டென்பார், 'தீங்கு நன்மையும் ஆண் பெண் முறை மையுந் தெரியா தமளிசெய் பொழுதே போ லாங்குள் வெளிகளு மறியா தநுபவ,, மெனவுங் கூறினர்.

*(தா—ம்) சுழுத்தி யாநந்தம், பிரமாநந்த மென்றதைச் சுருதி யுக்தி யநுபவத்தினு லுணர்த்திய தாம்.* 125

**(அ—கை) அவத்தாத் திரயத்திலும், விவகரிக்கின்ற வி சுவ தைசதப் பிராஞ்ஞனை, யொன் றென் றறியும் பொருட்டுச் சீடன் வினுதல்?**

உதவும் புவியினி லொருவன் னநுபவ மொருவன் மநதினி லுதி
[யாதே,
மதியுங் கெடுகின்ற துயில்கொண் டாந்நத மயனன் றேசுக முறு
[கின்ற,
னிதுவிந் ஞாநம யனுந் சிந்தையி னினைவாய் வந்திட லழகன்றே,
சுதைவிண் ணேர்புகழ் தருவே நீரிது சொல்லீர் சகலமும்
[வல்லிரோ. 126

(ப—ம்) சொர்க்க லோக முத லான போகமும், பிரம லோக முத லான அபர மோக்ஷமும், அவித்தையா நிவிர்த்தி யான அகண்ட சொருபந் தா னுகின்ற பரமோக்ஷமு மடை வதற் கேது வான கரும முபாசனை ஞாநத்தை யநுட்டிப்ப தற்குச் சகாய மா யிருக்கின்றது பூ லோக மென்பார், 'உத வும் புவி' யென்றார்.

*(தா—ம்) சுழுத்தி யவத்தையிற், பிராஞ்ஞனுக் குண்டாகு மநு பவஞ், சாக்கிர வவஸ்தையில், விசுவனுக் கெங்ஙனம் தோற்று மென் றிடையில் வினாவினா னென்ப தாம்.* 126

**(அ—கை) அவ் வினாவிற் குத்தரங் கூறல்.**

நெய்யும் வெண்ணெயு மிருபேர் களுமறி நினைவிற் பிறிவறி வினி
செய்யு நநவினி லிறுதும் மநதோடு சேருஞ் சிந்மய விஞ்ஞாந [லில்லைச்,
னையுந் துயர்மந நழுவும் பொழுதுணர் ஞாநச் சுகமுணு மாநந்தன்,
பெய்யுந் துளிகளும் நீருங் குளமொடு பாகும் போலிவர் பிறி
[வன்றே, 127

(ப—ம்) கடிநமா யிருக்கின்ற வெண் ணெ யானது, உருகி யிளகலா யிருக்கின்ற நெய் யாகி, மநதினால் நாம ரூப மாகப் பார்க்குமிடத்தில், வேறு போலத், தோற்றி னும், விவேகத்தினால் நன் றாய்ப் பகுத்துப் பார்க்குமிடத்தி, லவைகளின் சுவை யொன்றா யிருப்பது போலக், காமாதி யாற் றூல மான மநது, இந்திரியங்களுடன் சாக்கிராவஸ்த் தைத் தொழிற் செய்து, துன்புறுகின்ற பிரபஞ்சத்தை நா நாவித மாக விசேட மாய்ச் சுட்டி யறிவதால், 'விஞ்ஞாந மய' னென்னும் பரியாய நாமத்தை யுடைய வித் தூல மான விசுவன், சொற்பந வவத்தையி லிந்திரியங்களை விடுத்துச், சூக்ஷுமமான மநதுடன் வாசநா ரூப மாய்ச் சூக்ஷுமமான தொழிற் செய்து, துன்புறுகின்ற, 'தைசத' னென்னும் பெயரை யடைந்து, சுழுத்தி யவத்தையி, லச் சூக்ஷுமமான தொழிலையுந், துன்பங் கொடுக்கின்ற மநதை



யும் விடுத்து, ஞாநத்தினா லறிந்து, ஆநந்த மநுபவிக்கின்ற, 'ஆநந்த மய' னென்னும் பரியாய நாமத்தை யுடைய, 'பிராஞ்ஞ' னென்னும் பெயரை அடைகின்றபடியால், மூட புத்தியாற் பார்க்குமிடத்து, விசுவ தைசதப் பிராஞ்ஞ னென்று மூன் றாகத் தோற்றினும் விவேக புத்தியால் பார்க்கு மிடத்திற், சிதாபாச னொருவ னாகவே தோற்று மென்பார், "நெய்யும் வெண்ணெயு மிரு பேர்களுமறி நினை விற் பிறிவறி வினில்லைச் செய்யு நநவினி லிறுகு மந தொடு சேருஞ் சிந்மய விஞ்ஞாநன், னையுந் துயர் மந நழுவும் பொழுதுணர் ஞாநச் சுகமுணு மாநந்த" னெனவும், அற்ப மாயிருக்கின்ற துளி நாநா சேர்ந்திருந்து சல மென்னும் பெயரை யடைந்தாலு, மத் துளியை விடச் சலம் வே றில்லாதது போலவு, மிளக லான பாகு கடிந மான வெல் லக் கட்டி யென்னு நாமத்தை யடைந்தாலும், பாகை விட வெல்லக் கட்டி வே றல்லாதது போலவுஞ், சுழுத்தியில் விருத்தி யற்று ஆநந்த மநுபவிக்கின்ற பிராஞ்ஞன், சொப் பந, வவத்தையிற் சூக்ஷ்ம மான மநதுடன் சேர்ந்து, சூக்ஷ்ம மான வியாபரஞ் செய்து, 'தைசத' னென்னும் பெயரை யடைந்து, சாக்கிர வவத்தையிற் றூல மான மநதுடனும், இந்திரியங்களுடனும், சேர்ந்து, தூல வியாபாரஞ் செய்து, 'விசுவ' னென்னும் பெயரை யடைந்தாலும். பிராஞ்ஞனை விட, விசுவ தைசதர்கள் வே றல்ல, ஒன்று தா னாகையால், பிராஞ்ஞ னநுபவித்த ஆநந்தம், விசுவனுக்குத் தெரியலாமே என்பார், "பெய்யுந் துளிகளுந் நீருங் குள மொடு பாகும் போலிவர் பிறீ வன்றே" யெனவுங் கூறினார்.

*(தா—ம்) சீவ னொருவனே விசுவ தைச பிராஞ்ஞ னெனச் சாக்கிர சொப்பந சுழுத்தி யவத்தையினால், வேறு நாமங்களை அடைந் திருப்பதனால், பிராஞ்ஞ னாநந்தாநுபவம் விசுவனுக்குத் தோற்றலா மென் றறிவித்த தாம்.* 127

(அ—கை) சுழுத்தி அவத்தையிற் பிரமத்துடன் சேர்ந்து, ஆநந்த மநுபவிக்கின்ற பிராஞ்ஞ, னவ் வாநந் தத்தை விட்டு. நீங்குவானே னென விஞதலு, மதற் குத்தரமும், வாசநாநந்த விலக்கணமும், கூறல்.

ஒன்ற கியபிர மாநந் தச்சுக மொழிவா னேன்வெளி வருவானே,
னென்றன் முன்செய்த கருமம் வெளியினி லிழுக்குஞ் சுழுத்திவிட்
[டெழுந்தோனும்,
நன்ரு யினசுக மகலான் வெளியிலு நடவான் மறதியும் பெற
[மாட்டா,
னன்ற மெனவிருந் துறங்குஞ் சிலகண மதுவே வாதனை யாநந்
[தம். 128

(ப—ம்) ஒருவன் பூருவஞ் செய்த சாமாநிய விசேட கருமங்களிற், சுழுத்தி யவத்தையைக் கொடுக்கின்ற சாமாநிய கருமம் நீங்கும் போது, விசேட கரும மானது அப் புருடனைச் சாக்கிராவஸ்தையில் வரும்படி செய்யு மென் பார், 'முன் செய்த கருமம் வெளியினி லிழுக்கு' மெனவும், சயநித் திருந்த புருடன், நித்திரையை அத்தியந்த நீக்காது, எழுந் துட்கார்ந் திருப்பதனுலும், ஒரு வியாபாரமும் செய்யா திருப்பதனுலுஞ் சுழுத்தி சாக்கிர மிரண்டு மாகா மலு, மப்பொழுது ஒரு பகுப்புந் தோன்ருது, சுழுத்தி யாநந் தத்தையும் நீங்கா திருப்பதனுலு மவன் யங்கியர்கள் கூப் பிடும் சத்தத்திற் கே னென்பதனுலுஞ், சுழுத்தி சாக்கிர மிரண்டு மாகியு மிருக்கின்ற அநந்தலி உள்ள சுகமே, வாசநா நந்த மென்பார், 'அன்ரு மெனவிருந் துறங்குஞ், சிலகண மதுவே வாதனை யாநந்த' மெனவுங் கூறினுர்.

*(தா—ம்) சிதாபாசன் சுழுத்தி யவத்தையினின்று சாக்கிரா வத்தையில் வருவது, பிராரத்த கன்ம பலம் புசிப்பதற் காக வென வும், சுழுத்தியுஞ், சாக்கிரமு மில்லாத வநந்தலி உள்ள சுகமே, வாசநாநந்த மெனவுங் கூறின தாம்.*

128



(அ—கை) நிசாநந்த விலக்கணங் கூறல்.

அந்தக் கண்முட லகமென் றிடரீகளி லலைந்தே சுகந்தனை மறந்
[தேபோ,
முந்தைச் செயும்வினை சுகதுக் கந்தரு மோநந் தருநடு வடிவேகா,
ணெந்தப் புருடனு மொருசிந் தையுமற விருந்தே னெனலநு பவ
[மாது,
மிந்தப் படிதன் னுதாசீ நச்சுக மிதுவே நிசமெனு மாநந்தம். 129

(ப—ம்) பூருவத்திற் செய்த புண்ணிய கருமத்தாற் சுகமும், பாவ கருமத்திஞற் றுக்கமு, முண்டாகின்ற காலதுக்கு, மத்தி யாகிய தூஷ்ணீம் பூத (சும்மா இருக் கும்) அவஸ்தையில், வாக்கு மநதுக் கெட்டாத, மத்திய கத மான சுபாவ சொருப மானது, ஆண் பெண் அலி யென்று சொல்லப்பட்ட வனைவரா லு மொரு சிந்தனையு மில்லாமற் சுகமா யிருந் தநுபவிக்கப்படுகின்ற தென்பார், 'முந்தைச் செயும் வினை சுக துக்கந் தரு மோநந்தரு நடு வடிவே காண், எந்தப் புருடனு மொரு சிந்தையு மற விருந்தே னென லநுபவ மாகு' மெனவும். சுக துக்க மிரண்டு மில் லாத தூஷ்ணீம் பூத அவத்தையிற், ரேற்ருநின்ற சுபா வாநந்தமே நிசாநந்த மென்பார், ''இந்தப்படி தன் னுதா சீநச் சுக மிதுவே நிச மெனு மாநந்த'' மெனவும் கூறினுர்.

*(தா—ம்) சாக்கிர வவத்தையிற் சுக துக்க மில்லாத தூஷ் ணீம் பூத வேளையில் தோற்றும் சுபாவாநந்தமே நிசாநந்த மெனக் கூறின தாம்.*

*(வி—ம்) இதை முக்கியாநந்த மெனக் கூறுவாரு முளர்* 129

(அ—கை) நிசாந்த மெங்ஙன முக்கியாநந்தமா மென விஞதலு, மதற் குத்தரமு, முக்கியாநந்த விலக் கணமுங், கூறல்.

நிசமா னதுழக் கியமோ துடத்துள நீரன் றேவெளி யிரந்தான்,
வசமா வகங்கர மறைந்தா னிசமது படிந்தான் மூக்கிய வகையாதும்,
திசையார் திரிசய மறியா தேதுயில் செறியர் தேயுட றறிபோல,
அசையா தேமதி சமமா கியநிலை யதுதான் மூக்கிய வாநந்தம். 130

(ப—ம்) தத்துவ ஞாநத்தினுல் சகத்துப் பொய்யாகி, யதைச்சுட்டுகின்ற மந திறந்தி ருத்தலாற், சாக்கிர வவத்தையா யிராமலும், இந்திரியங்க ளிறந்துபோகாமற், றன் றன் கோளகத்தில் வியாபார மற் றிருத்தலாற், சுழுத்தி யாவத்தையா யிராமலும்; பூரணாநந்தா நுபவ மிகுத்தலாற், சொப்பந மநோராச்சியமா யிராமலு மிருக்கின்ற, நிருவிகற்ப சமாதியி லுண்டாகின்ற வகண்டாநந்தமே முக்கியாநந்த மென்பார், "திசையார் திரிசய மறியாதே துயில் செறியாதே உடறறி போலே. அசையாதே மதி சம மாகிய நிலை யது தான் முக்கிய வாநந்த" மென்ருர்.

(வி—ம்) இதை நிசாநந்த மெனக் கூறுவாரு முள ரெனலும், சமஸ்த்தத்திலும் தா னதிப்பிரிய வஸ்து வென் றறியுமிடத்தி லுண்டாகு, மாநந்த மாத்மாநந்த மெனவும், மாயை யாகின்ற துவிதமற் றத் துவிதமாயறியு மிடத் துண்டாகு மாநந்த, மத்துவிதாநந்த மெனவும், மகா வாக்கியத்தினுல், "நானே பிரம சொரூப" மென்று, "நானே துக்க மற்றவன், நானே சகலருமா யிருந்து புசிக்கின்றவன், "நானே கிருத கிருத்திய" னென்று முண்டாகின்ற வாநந்தம், வித்தையாநந்த மெனவும், நிரதிசயாநந்த மான வில் வஷ்ட விதாநந்தங்களு மதிசய மாக நவ நவ மாய் விளங்குதலி னிவை யதிசயாநந்த மெனவும் கொள்க

(தா—ம்) ஆத்மா வகங்கார வசமா யிருக்கும்போ துண்டாகிய நிசாநந்தமே, அவ் வகங்காரத்தை நீங்கின போது முக்கியா நந்தமாகு மெனவும், அவத்தா திரய மின்றி, யகம் பாவ மற்ற ஞாந சமாதியி, லகண்டாநந்தமா யிருத்தலே முக்கியாநந்த விலக்கண மெனவுங், கூறின தாம். 130



(அகை) முக்கியாநந்த மாகான்மியங் கூறல்.

மநுடன் மநுடகந் தருவன் றேவகந் தருவன் பிதிர்கரு மத்தேவன்,
றனுட னசுரன் சுரனிந்திர னுசானும் பிரசா பதியானேன்,
கனகவி ராட்ட ணிரனிய கருப்பன் கருதுமிப் பதினுெரு பேர்கள்,
பினவா நந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மாநந்
[தம். 131

(ப—ம்) மநுடாநந்த முத லிரணிய கருப்பாநந்தம் வரைப் பதி ெனுரு வகை யாநந்தமும், இராக்த் துவேஷாதிகளுடன் யா னென தென்று வுயர்ச்சி தாழ்ச்சியா யநுபவிக்கப்படுகின்றபடியால், அவைகள் திவலை போ லற்ப மாகவும், முக்கியாநந்த மாகிய பிரமாநந்த, மங்ஙன மநுவிக்கப் படாதபடியா லது கற்பாந்த சாகரம் போல, மகத் தாகவு மிருக்கு மென்பார், 'பதி ெனுரு பேர்கள் பின வாநந்தகண்ணுரையாம் பிரளய வெள்ளக் கடல் பிரமாநந்த' மென்ருர்.

(தா—ம்) மநுடாநந்த முத லிரணியகருப்பாநந்தம் வரையிலுள்ள ஆநந்தங்கள் நிருவிகற்ப சமாதியி லுண்டாகும் பிரம்மாநந்தத்தின் லேசங்களா மென்ப தாம். 131

(அ—கை) இப் பிரமாநந்த முடையவ ரநுபவத்துக்குத் திட்டாநந்தம் யா தெனில்?

எவனு கிலுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியி லிருந்தானே,
லவனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரநுபவ சுக
[போதம்,
விவகா ரதிர்சய மிதுவே யநுபவ மேனமுன் சொல்லிய விவகாரி,
யுவமா நமுமறி மகனே யவனடி யுதிரும் பொடிகளேன் முடி
[மேலே. 132

(இ—ள்) எவனுகிலும், யாவனுகிலு, மிந்த-இப் பிரமாநந்த முள்ள, துரியாதீதத்தில், துரியாதீத மென்னும்,

ஏழாம் பூமியில்-ஏழாவது பூமியில், இருந்தானேல்-இருப்ப
னுகில், அவன்-அப் புருடனுக்கு, போதம்-தத்துவ ஞாந
மும், சுகம்-பிரம்மாநந்தமும், விவகார அதிர்சயம் - பிரபஞ்
சத் தோற்ற மிலாமையு மாகிய, இதுவே, இவைக ளிருக்
கின்றதுவே, அநுபவ மென-சுவாநுவ மெனவும், சிவன்
மா லயன் - அரன் அரி அயன் என்னும் மும் மூர்த்திகளுக்
கும், நாரதன் சுகன் முதல்-நாரதன் சுகர் முதலிய, அறிவோர்
– அறிஞருக்கு முள்ள, அநுபவம் - சுகாநுப்வமே முன்
சொல்லிய-முற் கூறிய, விவகாரி- (துரீயாதீத) விவகாரியி
னநுபவத்திற்கு, உவமாநமும் - திருஷ்டாந்த மெனவும்,
மகனே அறி - மைந்தா தெரிந்து கொள்வாய், அவ னடி-
(அவ் வேழாம் பூமி யாகிய) துரியாதீதத்து முக்கியாநந்தம்
அநுபவக்கின்றவனுடைய பாதத்தினின்றும், உ தி ரு ம்
பொடிகள் - உதிராநின்ற தூளிக ளானவை. என் முடி
மேலே-எனது சிரசின் மீது தரிக்கத் தக்க தென்ற வாறு.

(ப—ம்) தூல தேக முதலிய ஒன்பதும்சேதநமும்
சேர்ந்த வாச்சியமும். விராட்டாதி ஒன்பதும்சேதநமும்
சேர்ந்த வாச்சியமும், நேதி களைந்து, லக்ஷிய மான கூடத்
தரே பிரமம், அப் பி ர ம மே கூடத்த ரெனவும், நேதி
களைந்த வாச்சியார்த்தங்களும், பிரத்தியக் கபிந்ந பிரமத்தை
விட வே றல்ல வெனவு மறிந்து, அந்தச் சத்திய ஞாநாநந்த
வஸ்துவே நா மென்று, அசம்பாவனை சம்சய பாவனை விப
ரீத பாவனை யின்றி, யறிகின்ற தத்துவ ஞாந மென்பார்,
'போத' மென்றுர்.

*(தா—ம்) துரியாதீதத்தை யடைந்த ஞாநிக ளநுபவத்திற்குத்,*
*திரி மூர்த்தி முதலானவர்க் ளநுபவம் சமாந மெனவுங், அத் துரியா*
*தீதம் பெற்ற ஞா நி க ள் அருமை யாகையா, லவரது மகிமை*
*தோன்ற, அவரது பாத ரேணுக்க ளெனது சிரசின் மேல் தரிக்கத்*
*தக்க தெனவு, மாசிரியர் சீடனுக்ககுக் கூறின தாம்.* 132



**(அ-கை) ஏனை யாநந்த விலக்கணம் யா தெனில்?**

இந்தவா றைந்துசுகஞ் சொல்லினேம் வித்தைசுக் மினிமேற் சொல்
[வோம்,
மூந்தமா யையுஞ்சச்சி தாநந்தப் பொருளுமே மொழியும் போதி,
லந்தமா மத்துவித சுகமாந்ம சுகமிரண்டு மங்கே சொன்னேம்,
தொந்தமாற் றியமகனே யின்னமுனக் கையமுண்டேற் சொல்லு
[வாயே. 133

(ப—ம்) தத்துவ ஞாநத்தினுல் சகல பிரபஞ்சமும்,
பொய் யாகக் கண்டிருப்பதனுல். நல்லது, பொல்லாது,
விருப்பு, வெறுப்பு, சுக, துக்கம், பு ண் ணி ய ம். பாவம்,
சொர்க ந ர க மாதி துவந்துவங்களை நீக்கி யிருக்கின்ற
குழந்தா யென்பார், 'தொந்த மாற்றிய மகனே' யென்றுர்.

*(தா —ம்) அத்துவிதாநந்த, ஆத்மாநந்த இலக்கண முன்னர்க்*
*கூறி யிருக்கின்ற தெனவும், வித்தையாநந்தத்தை இந் நூ லந்தத்*
*தில் கூறுகின்றோ மெனவும், வேறே சந்தேகங்க ளுளதேற் கேட்பா*
*யெனவுங் கூறின தாம்.* 133

**(அ—கை) ஆத்மா சச்சிதாநந்த சொரூப மெனத்
தெரிந து, அதன உண மைய ான, சுவாநுபூதி வெளிப்படு
நிமித்தஞ், சுருதி யுத்தி அநுபவங்களுக் கொத்திருக்கு,
மவற்றி ஞெருமையைத் தெரிய விஞதல்.**

துகன்றனையு மேனையுமல கினையுமீன் றளித்தருளுங் குருவே
[கேளீர்,
புகன்றச்சி தாந்தப் பதங்கடனித் தனியாகிப் பொருள்வே றனு,
லுகண்டமந முறைப்பதேங்ஙன் பரியாய பதங்களைப்போ லுறவு
[காணே,
னகண்டமா யொருசுவையாய்த் தேனீக்கூட் டியமதுவா யறிவிப்
[பீரே. 134

(ப—ம்) சுப்பிரமணியர், விநாயகர் முத லான நூத நேசுவரர்களையும், வைசுவாநரன், சூத்திராத்மா, அந்தரி யாமி, அம்சன், பரமாம்ச னென்னுங் காரியேசுவரர்களை யும், பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுவரன், சதாசிவ னென்னுங் காரணேசுவரர்களையும், உத்தம, மத்திம, அத மமா யிருக்கின்ற, சராசர உயிர்களையும், பஞ்ச பூதாதி ஜெகத்தையும், விவர்த்த மாகத் தோற்றுவித்து, அநுக்கிர கஞ் செய்யாநின்ற பரிபூரண சொரூப மான சற் குரு நாதனே யென்றா னென்பார், 'குகன்றனையு மெனையு முல கினையு மீன் றளித் தருளுங் குருவே' யெனவுந், தான் போனதே வழி யாய்ச், சஞ்சலமே சுபாவ மாய், ஆற்றுச் சுழியி லகப்பட்டுச் சுற்றுகின்ற புழுப் போல், விடயங்களிற் சுழலாநின்ற மந மானது. சச்சிதாநந்தப் பதங்களுக் கொ ருமை தோன்றுவிடி னெங்ஙன மசைவற் றிருக்கு மென்றா னென்பார், 'உகண்ட மந முறைப்ப தெங்ங' னெனவுங் கூறினார்,

(தா—ம்) சச்சிதாநந்தப் பதங்களுக் கேகார்த்தந் தோன்றுவிடி, னெங்ஙன மந மடங்கு மெனவும், பல புஷ்பங்களிலிருக்கின்ற தேனை ஈ யான தெடுத்து ஒன் றாக்குவது போல, அம் மூன்று பதங்களுக்கு மேகார்த்தந் தோன்றும்படி அறிவிக்க வேண்டு மெனவுஞ் சீடன் கூறின தாம். 134

(அ—கை) சச்சிதாநந்த ஒருமையைச் சுருதிப் பிரமாணத்தாற் கூறுவான் றொடங்கிப், பிரம்ம சொரூ பத்தைச் சச்சிதாநந்த மென்றதற்குக் காரணமு, மப் பதங்களி னர்த்த ஒருமையுங் கூறுகின்றார்.



துளிரிளகல் வெண்மையென்ற பதங்களினால் நீர்மூன்று கூற
[யிற்றே,
வொளிதவநஞ் செம்மையென்ற பதங்களா லக்கினியு மொருமூன்
[றமோ,
வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட ரெனப்பிரித்து விலக்கி வேத,
மெளிதறிய முரண்மொழிந்த சத்தாதி யெனும்பிரம மேகந்
[தானே. 135

(ப—ம்) தேகாதிப் பிரபஞ்சத்தின் அசத்துச் சட துக்க சுபாவத்தை ஆத்ம சுபாவம் போ லாக்கி, 'நான் செத்துப் போகின்றவ, னான் சட, னான் துக்கி' யென்று தோற்றுவிக்கின்ற விபரீதத்தை நீக்கும் பொருட்டும், சில சமய வாதிக, ளாந்மாவுக்குச் சித்து, மாநந்தமுங் குண மென் றங்கீகரித்ததை நீக்கும் பொருட்டும், வேத மானது பிரமம் சச்சிதாநந்த சொரூப மெனக் கூறினதே தவிர, அப் பதங்களைப் பிந்ந மாகக் கூற வில்லை ஆனதால், அப் பதங் களின் அர்த்தம் பிரம மொன்றே யன்றி வே றல்ல வென் பார், 'வெளி முதலாஞ் சக மசத்து மூட மிட ரெனப் பிரித்து விலக்கி வேதம் எளி தறிய முரண் மொழிந்த சத் தாதி யெனும் பிரம மேகந் தானே' யென்றார்.

(தா—ம்) ஜெகத்தை யசிர்த சட துக்க மெனக் கண், டதனை நீக்குதற்காகக் குறித்த நாமம், சச்சிதாநந்த மெனவும், அத னர்த்த மொன்றான பிரம மெனவுங் கூறின தாம், 135

(அ—கை) சச்சிதாநந்த மொருமை யென்பது உறுதிப்படு நிமித்தம், வேதம் ஒருமை யாகச் சொரூபத் துக்கு விதி யாயும், விலக் காயுஞ் சொல்லிய, அநந்த நாமங்களில், விதியா யிருக்கின்ற நாமங் கூறல்.

நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதாநஞ் சாந்தஞ்,
சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடஸ்தன் சாக்ஷி போதஞ்,
சுத்தமிலக் கியஞ்சநா தநஞ்சீவன் றத்துவம்விண் சோதி யாந்மா,
முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம் விதிகுணங்கள் மொழியும்
[வேதம், 136

(இ—ள்) நித்தியம்-நித்திய மெனவும், பூரணம்-பூரண
மெனவும், ஏகம்-ஏக மெனவும், நிதாநம்-நிதாந மெனவும்,
சாந்தம்-சாந்தம் எனவும், சத்தியம்-சத்திய மெனவும், கேவ
லம்- கேவல மெனவும், துரியம்-துரிய மெனவும், சமம்-
சம மெனவும், திருக்கு - திருக் கெனவும், கூடஸ்தன்-
கூடஸ்த னெனவும், சாக்ஷி-சாக்ஷி யெனவும். போதம்-
போத மெனவும், சுத்தம்-சுத்த மெனவும், இலக்கியம்-
லக்ஷிய மெனவும். சநாதநம்-சநாதந மெனவும், ஜீவன்-ஜீவ
னெனவும். தத்துவம்- தத்துவ மெனவும், விண்-விண்
ணெனவும், சோதி-சோதி யெனவும். ஆந்மா- ஆந்மா
வெனவும், முத்தம்-முத்த மெனவும், விபு-விபு வெனவும்,
சூக்குமம்-சூக்கும மெனவும், இவ் வண்ணம்- இந்தப் பிர
காரம், விதி குணங்கள்- (நியாமக) குணங்க ளான வநேக
நாமங்களை, வேதம் - சுருதிகள், மொழியும் - சொல்லு,
மென்ற வாறு.

(ப—ம்) பிராகாபாவம், பிரத்வம்சாபாவம், அந்நி
யோந்நியாபாவம், அத்தியந்தாபாவ மாகிய நான்கு மற்று,
நிலை யுள்ளதா யிருத்தலின், 'நித்திய' மெனவும், ஒரு
தேசத்தி லொரு தேசமு, மொரு காலத்தி லொரு காலமு,
மொரு வஸ்துவி லொரு வஸ்துவு மில்லாதது போ லின்றி,
எல்லாத் தேசத்திலு. மெக் காலத்திலு. மெல்லா வஸ்து
விலு நிறைந் திருத்தலின், 'பூரண' மெனவும், ஈட்டி வாலா
வாள் முத லான பல வாகத் தோன்றினுலும். அயம் ஒன்
ருகவும், கட கலசாதி பல வாகத் தோன்றினும், மண் ஒன்
ருகவும், கடக மகுடாதி பல வாகத் தோன்றினுலும்,
பொன் ஒன் ருகவு, மிருப்பது போலப், பிரம மானது



சீவேசுர சகத் தாகத் தோன்றினுலும். ஒன் ருக இருத்த
லின் 'ஏக' மெனவும். கிளிஞ்சிலிற் றேன்றும் வெள்ளி,
அபரமார்த்த மாயும், கிளிஞ்சில் பரமார்த்த மாயு மிருப்பது
போல, கநவிற் றேன்றும் பதார்த்தங்க, ளபரமார்த்தம்,
நநவிற் றேன்றும் பதார்த்தம் பரமார்த்தம். அதிலு மேக
முதலான தபரமார்த்தம், வீ டைசுவரிய புத்திர தாரம் சரீ
ராதி பரமார்த்தம், வைய மபரமார்த்தம், சொர்க்காதி
லோகம் பரமார்த்தம், வைய மபர மார்த்தம், பிரம்ம லோ
காதி பரமார்த்தம்; இச் சீவேசுர சகத் தெல்லாம் உற்பத்தி
நாச வஸ்து வாய், வாக்கு மாத்திரமா யிருக்கின் றபடியா
லபரமார்த்த மாயு, முற்பத்தி நாச மில்லாத சச்சிதாநந்த
சொருப, மிவைகள் தோற்றுவதற் காதார மாயு. மிவை
களுக்குப் பரமர்ர்த்த மாயும். அதற்கு மேலொரு பரமார்த்த
மில்லாத தாயு மிருப்பதா. லங்ஙன மிருக்கின் ற சச்சிதாநந்த
சொருபம் சத்தியமா யிருத்தலின், 'பரமார்த்த' மெனவும்,
பசு பிராமணர்கள் வேதம் பிரணவம் பிரமாதி தேவதைக
ளாகின்ற பிரமத்துக்கு மே லான, சத்திய ஞாந வநந்தாநந்
தப் பிரம சொருப மா யிருத்தலின், 'பரப்பிரம' மெனவும்,
சக சீவ பரத்திற்குக் காரண மான பிரகிருதிக்கு மூல மான
ஆதி காரண மாதலின், 'நிதாந' மெனவும், காட்டத்தில்
செநித்த நெருப்புக், காட்டத்தைச் சுட்டுத் தான் தணிகின்
றது போலப், பிரகிருதி புருஷ சையோகத்தினுலும். சாத்திர
விவேகத்தினுலும், பிறந்த வகண்டாகார விருத்தி ஞாநம்,
பிரமத்திற் கந்நியமா யுள்ள. பிரகிருதி புருஷ சாஸ்திர முத
லானவற்றை அற்பமு மிஞ்சாமற் சுட்டுத், தானுஞ் சாட்
சியா யிருக்கின்ற அப் பிரம சொருபத்தில் நசிக்கின்றபடி
யால், நிஷ்பிரபஞ்ச மாக வமைதியா யிருத்தலின், 'சாந்த'
மெனவும், திநந் தோறும், மாதந் தோறும். வருடந் தோ
றும், யுகந் தோறும், பஞ்ச கோசங்க ளுற்பத்திக்கு
முன்னு, மொழிந்த பின்னு, மொருபடி யாய் மெய்யா
யிருத்தலின், 'சத்திய' மெனவும், ஆகாயம் சாதுர்ப் பூதத்
திலும், தாக் கற்றுத் தனியா யிருப்பது போலப், பிரகிருதி,
யதன் காரிய மான சர அசரப் பிரபஞ்சத்தின், றேற்றந்

திதி நாசத்தில் தாக் கற்றுத் தனியா யிருத்தலின், ‘கேவல’
மெனவும், நநவு கநவு சுழுத்தியில் விளங்குகின்ற தூல
சூட்சும காரண பிரபஞ்ச மல்லாம, லறிவா யிருத்தலின்,
‘துரிய’ மெனவும், தார தம்மிய மான பூ லோக முத லான
லோகங்கள், உத்தம மத்திம மென், றேற்றத் தாழ்ச்சியா
யிருக்கின்ற பிரமாதி தம்ப பரியந்த மான சரீரங்கள், பா
மரன், கன்மி, யுபாசகன். யோகி, ஞாநி யென்னு மவை
களி, லேக தேச முள்ளவ னென்றும், காணப்பட்ட சீவ பே
தங்கள், பிரமாதீசுவர பேதங்களாகிய தார தன்மிய வஸ்துக்
களில், சத்தாகாரமாய்த் தாரம்மிய மற்று, எப்போதும்
சைதந்நிய மாய் ஒப்பமா யிருத்தலின், ‘சம’ மெனவும்,
திரிசியமா யிருக்கின்ற தேக இந்திரியப் பிராண
மநம் புத்தி அவித்தை சீவ ஞகிய இவைகள், பஞ்ச விஷயங்
களை யறிகின்ற திருக் காகிய ஆத்மா வாகத் தோன்றிஞ
லும், தானே யறியாத தாயும். உற்பத்தி நாச வஸ்துக்க
ளாய், ஆத்துமா வல்லாத தாயு மிருக்கின்ற இவைகளுக்
கதிட்டாந மாய், இவைகளி னுடைய அந்வய வியதிரே
கங்களைக் காணுகின்ற ஆத்மா வாய். ஞாநமா யிருத்தலின்,
‘திருக்’ கெனவும், கொல்லன் அடைகல் நிர்விகாரியா
யிருந்தாலும், அதனிடத்தில், இரும்பின் விகார மெல்லாந்
தோன்றி யடங்குவதற், கது காரணமா யிருத்தல் போல,
பிரம சைதந்யம் நிருவிகாரமா யிருந்தாலும். அதனிடத்
திற் றோன்றின மூலப் பிரகிருதியும், இதன் சாத்வீக ராசத
மான சர்வஞ்ஞ, கிஞ்சிஞ்ஞ சைதந்நியங்களும், தாமத
விகார மான பூத பௌதிகங்களும், தன் றன் விவகார வழி
யெலாஞ் சென்று, லயித்தற்கு, அப் பிரம சைதந்யம்,
அறிவு சொரூப மான காரண மாதலின், ‘கூடத்த’ரெனவும்,
சகல பிரபஞ்ச வியாபாரத்துக்கும் ஆதித்தன் சந்நிதாநமே
காரணமா யிருந்தாலும், அவற்றில் பற்ருது சாக்ஷியா யிருக்
கின்ற அவ் வாதித்தன் போலச், சகல இந்திரியங்களும்,
சகல பிரபஞ்சங்களிலும் சைதந்யத்தின் சந்நிதாநங்
கொண்டு விவகாரஞ் செய்தாலும், அச் சைதந்யந், தா



ஞகவும், பிரவிர்த்தி நிவிர்த்திகளைப் பண்ணுமல்,
ஒன்றைக் கொண்டு பண்ணுவியாமல், இவை கட்
கெல்லாம் மத்தியஸ்த மாகப் பார்த்துக் கொண்டு,
தோற்றுவிக்கின்ற மாத்திரமே வடிவ மாய்ச் சான்ருக
விருத்தலின், ‘சாக்ஷி’ யெனவும், முப் பத் தைந்து தத்துவங்
களையு, மத னதன் விவகாரங்களையும். விளக்குவித் தறிகின்ற
வுணர்வா யிருத்தலிற், ‘போத’ மெனவும். சாதி, வர்ணச்
சிரம, புண்ணிய, பாவ, சொர்க்க, நரக, ஜெநந. மரணுதி
யசுத்த முடைத் தான ஜீவர்களும். ராம கிர்ஷ்ணுதி யவதா
ரம், கிருபை மாச்சரிய மாதி அசுத்த முடைத் தான ஈசுவர
னும், உற்பத்தி நாச மாதி யான அசுத்த முள்ள பூதங்களு
மாகிய இவைகளுக் கெல்லாம் அந்நிய மாய், இவைகளுடன்
கூடிநின்ருலும், அசுத்தம் பற்ருமல், நித்திய மாய், நிராகார
மாய், நிறை வாய், சைதந்ய மா யிருக்கின்ற தூய தாக
லின், ‘சுத்த’ மெனவும். தூலாதி, விராட்டாதி சரீரங்க
ளும், சாக்கிராதி சிருட்டி யாதி அவத்தைகளும், விசுவ
நாதி, வைசுவாநராதி யபிமாநிகளு மாகிய, முக்கிய மல்லா
திருக்கின்ற விசேட வஸ்து வாதலின். ‘இலக்கிய’ மெனவும்,
அநாதி யென்று நிச்சயித்த, சோபாதிக மான கன்மம், அஞ்
ஞாநம் வேதம் சீவ னீசுவரன், நிருபாதிக சைதந்ய மான
பிரமம் ஆக ஆறிற் குள்ளாக, கற்பித வநாதியா யிருக்
கின்ற வவ் வைந்திற்கு மந்தமுண்டானபடியினுலும்,
அவைகளுக் கதிட்டாந மான சைதந்யத்துக்கு ஆதி யந்த
மில்லாதபடியினுலும், அநாதியா யிருத்தலின், ‘சநாதந’
மெனவும், தேகாதி. சகல பிரபஞ்சமும், நசித்த
காலத்தும், அங்ஙனம் நசியாது எப்போதும் சீவித்திருக்
கின்றவ ணுதலின். ‘சீவ’ னெனவும், மேலானதை யறிகிற
வரைக்குந் தத்துவ மென் றிருக்கின்ற தூல தேகமாறு,
பூத மைந்து, சூட்சும தேகம் இருபது, அவித்தை
சீவன் 2 மாயை யீசுவரன் 2 ஆக இந்த முப் பத் தைந்து

தத்துவங்களைப் போல, ஒருகால் தத்துவ மாயும், ஒரு கால் அதத்துவ மாயு மிராமல், எக் காலத்தும் ஒரு படியா, யுண் மையா யிருத்தலின், 'தத்துவ' மெனவம், அதி சூட்சும மாயும், நிரவயவ மாயும், சுத்தம் வரைப் பிரபஞ்சமும், ஏக தேசத்தில் தோற்றி யிருந் தொடுங்க, இடங் கொடுக் கும் வியாபகமா யிருக்கின்ற சிதாகாச மாகலின், 'விண்' ணெனவும், சூரியன் சந்திரன் அக்கினி நக்ஷத்திர மின்ன லையும், இந்திரியங் கரணஞ் சீவனையும் மாயை ஈசுவரனை யும், அவைகளின் தோற்றம் திதி நாச முதலானவைகளை யும், பிரகாசிப்பித்துத் தான் ஒன்றினுலேயும், பிரகாசிக்கப் படாத சுயம்பிரகாசமா யிருத்தலின், 'சோதி' யெனவும், ஆத்மா வாகத் தோற்றின புத்திர மித்திர களத்திர பூதாதி கள், வெவ் வேறு பெய ரடைந்து, தனக்குப் புறம்புபட்டுத் தோற்றுவது போலவும், புறம்புபடாமற் ருனுகத் தோற் றின, தேக மிந்திரியம் பிராணன் மநம் புத்தி யவித்தை சீவ னுனவை, 'என் தேகம்.' 'என் னிந்திரியம்,' மென் பிராண னென் மந, மென் புத்தி, யென் அவித்தை, யென் சீவ' னென்று, வெவ் வேறு பெய ரடைந்து, தனக்குப் புறம் பட்டுத் தோற்றுவது போலவு, மிவைகளுக் கெல்லா மப் பாற்பட்டுத் நிர்விகார சைதந்யமா யிருக்கின்ற பிரமம், புறம்புபடாமற் ருனுக விருத்தலின், 'ஆத்மா' வெனவும், காணி யாதி தநம், புத்திராதி தேகம், இந்திரியம் கரணம் சீவ னுனவை, ஒரு காலத்தில் பிரிய மாயும், ஒரு காலத்தில் அப்பிரியமாயுந் தோற்றுவது போல வின்றி, எப்போதுங் கைவிடப்படாத பிரிய வஸ்துவா யிருத்தலின், 'முத்த' மெனவும், ஒன்றுக் கொன்று வியாபகமா யிருக்கின்ற அவித்தியா விசிட்டன், சூட்சும தூல சரீரம், தூலப் பிரு திவி அப்பு தேயு வாயு ஆகாசம், இரணிய கர்ப்பம், அவ்



யாகிருதம் அவ்வியத்தம் சுத்தம் மாயாவிசிட்ட, னெவனி லும் விரிந், திவைகளை வியாபித்துச் சச்சிதாநந்த மாய், அதற்கு மே லொரு வியாபக மில்லாது, வியாபகமா யிருத் தலின், 'விபு' வெனவும், சூட்சும மென்று சொல்லப்படும் பரமாணுவிற் கோடியி லொரு பங்கு கநமு மில்லாமல், ஆறு இந்திரியங்களாலு மறியப்படாமல். ஞாந சொருப மாய் நுண்மையா யிருத்தலின், 'சூக்ஷ்ம' மெனவும் வேதங் கூறிற்று.

அசலநிரஞ் சநமமிர்த மப்பிரமே யம்விமல மநுபாதேய,
மசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகோ சரம கண்டம்,
அசமநந்த மவிநாசி நிர்குணநிட் களநிரவ யவம நாதி,
யசரீர மவிகார மத்துவித மேனவிலக்கா மநேக முண்டே. 137

(இ—ள்) அசலம்-சலந மற்ற தெனவும், நிரஞ்சநம்-அஞ்சந மற்ற தெனவும், அமிர்தம்-மிருத மற்ற தெனவும், அப்பிரமேயம்-பிரமேய மற்ற தெனவும், விமலம்-மலமற்ற தெனவும், அநுபாதேயம் - உபாதேய மற்ற தெனவும், அசடம் - சட மற்ற தெனவும், அநாமயம் - ஆமய மற்ற தெனவும். அசங்கம் - சங்க மற்ற தெனவும், அதுலம்- துல மற்ற தெனவும், நிரந்தரம் - அந்தர மற்ற தெனவும், அகோ சரம் - கோசர மற்ற தெனவும், அகண்டம் - கண்ட மற்ற தெனவும், அசம் - சம் அற்ற தெனவும், அநந்தம் - அந்த மற்ற தெனவும், அவிநாசி - நாச மற்ற தெனவும், நிர்க்குணம் - குண மற்ற தெனவும், நிஷ்களம் - கள மற்ற தெனவும், நிரவயவம் - அவயவ மற்ற தெனவும், அநாதி- ஆதி யற்ற தெனவும், அசரீரம் - சரீரம் அற்ற தெனவும், அவிகாரம் - விகார மற்ற தெனவும், அத்துவிதம் - துவித மற்ற தெனவும், விலக்கு ஆம் - நீக்கமான (நாமங்களும்,) அநேக முண்டு - அநந்த முளவா, மென்ற வாறு.

(ப-ம்) தூல சரீரம், சூட்சும சரீரம். அவித்தை ஜீவன் பஞ்ச பூத பௌதிக சமட்டிகள் மாயாப்பிரதி விம்ப ரான ஈசுவர னாகிய இவைகள், அசைவதற் கிட மாய் அங் கங்கதற்குச் சாக்ஷி யாய், அசைவற்றிருத்தலின், 'அசல' மெனவும், தண்ணீரில் மூழ்கினவன் பேரில், சலம் பற்றுகின்றது போலப், பற்றியிருக்கக் காணாமல், சகல பிரபஞ்சத்தி னுள்ளும் புறம்பும் நிறைந் திருக்கின்ற தன்னிடத்தி, லமிழ்ந்திய தூலசரீர முதல் சுத்த பரியந்தமான பிரபஞ்சத்தி, லாகாசம் போல், பற்றுத லற்றிருத்தலின், 'நிரஞ்சந' மெனவும், யோகாமிர்தம் தேவாமிர்தம் ஒவ் வொரு காலத்தில் நசித்துப் போகின்றது போலின்றி, மோக்ஷாமிர்த மானது ஒரு காலத்து நாசமற்றிருத்தலின், 'அமிர்த' மெனவும், பஞ்சேந்திரியத்தினா லறியப்படும் பஞ்ச விடயத்துக்கும், அந்தக்கரண ஞானத்தினால் அறியப்படும் இந்திரியம், பிராணன் கரணம் அவித்தை சீவன் மாயை ஈசுவர னாகின்ற இவைகளுக்கு மந்நிய மாய், சச்சிதாநந்த மாய், அவ் வந்த ரிந்திரிய, பகி ரிந்திரியங்களை யறிகின்ற தாய், அவைகளா லறியப்படுதலற் றிருத்தலின், 'அப்பிரமேய' மெனவும், மலம் மூத்திரம் குப்பை சேறு கலங்கல் புகை புழுதி முத லான மலம் பொருந்திய பஞ்ச பூதங்களுக்கும். சீ ரத்தம் பித்தம் கோழை முத லான மலம் பொருந்திய தூல சரீரங்களுக்கும், காமக் குரோதம் காசம் படலம் ஊமை செவிடு முதலான மலம் பொருந்தி யிருக்கின்ற சூட்சும சரீரங்களுக்கும், அறி வறியாமை மலம் பொருந்தியிருக்கின்ற அவித்தையா விசிஷ்டர்களுக்கும், ஜீவர்களிடத்தில் கிருபையினால் சிருட்டி திதி சம்ஹாரம் பிறப்பு முத லான மலம் பொருந்தி யிருக்கின்ற மாயா விசிஷ்டர்களுக்கும், அந்நிய மாய் அவைகளுடன் கூடினவன் போலத் தோற்றினும், பிரகாச



வாநந்த வடிவ மாத்திர மாய், மலங்கள் அற்றிருத்தலின், 'விமல' மெனவும், சொர்க்காதி சுகத்தை விரும்பி, அதற்குக் கன்ம காண்டத்தில் கூறிய சாதந மான நித்திய நைமித்திய காமிய பிராயச்சித்த மென்னும் நால்வகைக் கர்மத்தைச் சாங்க மாக அநுட்டித்தவன், அந்தச் சுவர்க்க பல போக மடைவன், மோக்ஷார்த்த மாய்ச் சிவன் விஷ்ணு முத லான தேவர்களைக் குறித்துத் தீட்சா சுத்தி மந்திர யந்திர தந்திரங்களை யுபதேசம் பெற்று, அந்தப்படிக்கு ஜெபம் தியாநம் பூஜை தோத்திரம் தர்ப்பணம், பிராமண போசந முத லான பத்தி காண்டத்தில் கூறிய சாதநங்களை சாங்க மாக வெகு காலம் அநுட்டித்தவன், நால் வகை யான சாலோகாதி அநித்திய முத்திகளி லொன்றை யடைவன்.

நித்திய முத்தி யான மோக்ஷத்தை விரும்பிச் சாதந சதுட்டய முள்ளவ னாய், ஞாந காண்டத்திற் கூறிய சாதந மான சிரவணாதியைச் சாவதாந மாக வெகு கால மநுட்டித்தவனுக்குப் பிரதிபந்த நிவிர்த்தி யான வுடனே விரும்பித் தேடின மோக்ஷமா யிருக்கின்ற சச்சிதாநந்த சொரூப மானது, அந்தக் கன்ம காண்ட பத்தி காண்டங்களா லடையும் பொருள் போ லின்றி, யடையப்படாத பொருளா யிருத்தலின், 'அநுபாதேய' மெனவும், அறிவில்லாமல் சடமாய் தோற்றுகின்ற சகல பிரபஞ்சங்களையும், இயற்கை யறிவா யிருந்து கொண்டு காண்கின்றதா யிருக்கின்ற சிந்மாத்திர சொரூப மானது மூட மற்றிருத்தலின், 'அசட' மெனவும், தூல சரீரம் வாத பித்த சிலேட்டும முத லான வியாதியும், இடி சூடு முறிச்சல் முத லான பீடையும் உடைய தாயும், சூட்சும சரீரம் காமக் குரோத லோப மயக்கம் ஊமை செவிடு முத லான சுர முடைய தாயும், காரண சரீரங், காரிய சரீரங்களை யுண்டாக்குவிக்கின்ற சுர முடையதாயு மிருத்தல் போ லின்றி, நிருபத்திரவ மான சாக்ஷி சொரூப மானது நோ யற்றிருத்தலின், 'அநாமய' மென

வும், அஞ்ஞாந காலத்தினும், ஞாநம் வந்த பின்னும், மூன்று அவத்தையினும் வருகின்ற பிரபஞ்சங்கள், வரும் போதுங் கூட வராமல், போகின்ற போதுங் கூடப் போகாமல், இவைகளை யெல்லாம் காண்கின்ற அறிவு சொரூப மாய்த் தொடர்பற்றிருத்தலின், 'அசங்க' மெனவும், தூல சூட்சும காரண சரீரங்களும், விராட் டிரணிய கர்பப அவ்வியாகிருத சரீரங்களும், ஆகார மாய், கநமா யிருப்பது போ லின்றி. நிராகார சொரூப மானது, கந மற்றிருத்தலின், 'அதுல' மெனவும், ஒன்றுக் கொன்று இடைவெளி யுள்ள வஸ்துக்களில், ஆகாசம் இடை வெளி யற்றிருத்தல் போல், இடைவிட் டிருக்கின்ற சராசரப் பிரபஞ்களில், பிரம சொரூப மானது இடையற் றிருத்தலின், 'நிரந்தர' மெனவும், பதினாலு இந்திரியங்களா லறியப்பட்ட தூல சூட்சும காரணப் பிரபஞ்சம் போ லின்றி, அவைகளின், அந்வய வியதிரேகங்களை காண்கின்ற சாக்ஷி சொரூப மானது, அவைகளா லறியப்படாத வஸ்து வாதலின், 'அகோசர' மெனவும்.

ஒன்றை யொன்று கண்டிக்கின்ற யோக சித்தாந்தம், அருகனாதி யாகமம், தேவ கந்தருவ ராகமம், பிரமாவின் ஆகமம், விஷ்ணுவி னாகமம், உருத்திர னாகமம், புராணம், பாரதம், நீதி சாரம், வேதத்தின் கன்ம காண்டம், பத்தி காண்டம் போலக், கண்டிக்கப்படாத உபநிடதத்தால் நிர்ணயிக்கப்பட்ட சச்சிதாநந்த சொரூப மானது, தள்ளுத லற்றிருத்தலின், 'அகண்ட' மெனவும், மூர்த்த மாய், அவயவ மாய், கண்டமா யிருக்கின்ற தூல சூட்சும காரணப் பிரபஞ்சங்கள், உற்பத்தியாதல் போ லின்றி, அமூர்த்த மாயும், நிரவயவ மாயும், அகண்ட மாயும், இருக்கின்ற சொரூப மானது. உற்பத்தி யற்றிருத்தலின், 'அச' மெனவும், சரீரம், இந்திரியங்களுக்கும், அந்தக் கரணாதிகளுக்கும், பஞ்ச பூதங்களுக்கும், மாயா விசிட்டருக்கும், அந்தங் காண்கினும், அந்தங் காணப்படாத சாக்ஷி



சொரூப மானது, முடி வற்றிருத்தலின், 'அநந்த' மெனவும், பிராரப்தத்தில், நாச மடைகிற தூல சரீரத்துக்கும், பிரளயத்தில், நாச மடைகின்ற சூட்சும சரீரத்துக்கும், ஞாந உதயத்தில், நாச மடைகின்ற காரண சரீரத்துக்கும், அப்பாற்பட்ட, அக்ஷர சொரூப மான சாக்ஷி சைதந்யம். ஒருக்காலும் அழிவுரு திருத்தலின், 'அவிநாசி' யெனவும்,

சாத்விக குணத்தில் ஈசுவரனைக் கற்பித்தும். இராசத குணத்திலே சீவனைக் கற்பித்தும், தாமத குணத்திலே ஜெகத்தைக் கற்பித்தும், இவைகளை விரித் தடக்கி விளையாடுகின்ற பிரதாநத்திற் கப்பாற்பட் டவைக் கதிஷ்டாந மாய், அபரிச்சிந்ந மா, யாநந்த மா யிருக்கின்ற சொரூப மானது, சத்துவ ராசத தாமத குண மற்றிருத்தலின், 'நிர்க்குண' மெனவும், தாமத குண விகார மான, சூட்சும பூத. தூல பூத பௌதிகங்கள், ராசத குண விகார மான, விசுவ தைசத பிராக்ஞ னென்னுஞ் சீவர்கள். சத்துவ குண விகார மான, பிரம்மா விஷ்ணு ருத்திர னென்னும் ஈசுவர னாகிய இவைகள், சகளமா யிருத்தல் போ லின்றி, சச்சிதாநந்த பிரம சொரூப மானது, மூர்த்த மற்றிருத்தலின், 'நிஷ்கள' மெனவும், கர சரணாதி அவயவ முடைத்தாயிருக்கின்ற சரீரத் திரயங்களுக்கு மந்நிய மாய், அவத்தாத் திரய சாக்ஷியா யிருக்கின்ற சிதாகாச சொரூப மானது, தனக் கென்னக் கற்பித மான பிரபஞ்சத்தைத் தொட்டும், உறுப் பற்றிருத்தலின், 'நிரவயவ' மெனவும், சரீரம், கடாதி பூதங்கள், அவைக் காதி விட்சேப சக்தி, யதற் காதி யவித்தை மாயை, யிவைகளுக் கெல்லாம் ஆதி வஸ்து வாய், அதற்கு மற்றொரு ஆதி வஸ்து வில்லாத தாயிருக்கின்ற சைதந்யம் முத லற்றதாதலின், 'அநாதி' யெனவும், சரீர முடைத்தா யிருக்கின்ற கன்மிகள், யோகிகள், லோக பாலர்கள், பூதாதிபதிகள், கன்ம பலத்தினாலடையப்பட்ட வைசுவநராதி யாகிய சகல அவித்தையாப் பிரதிவிம்பருக்கும், செகத் தென்னும் சரீரம் படைத்த

மாயா விசிஷ்டருக்கு, மங்கியமா யிருக்கின்ற சச்சிதாநந்த சொரூப மானது. தேக மற்ற தாதலின், 'அசரீர' மெனவும், பிறப் பிறப்பாதி விகார முடைய அந்ந மய கோசம், பசி தாகம் கொடுக்கல் வாங்கல் முதலான விகார முடைய பிராண மய கோசம், காமக் குரோதாதி விகார முடைய மநோ மய கோசம், சுக துக்கங் கேட்ட லாதி விகார முடைய விஞ் ஞாந மய கோசம், அறி வறியாமை, பிரிய மோதம் பிரமோதம் முத லான விகார முடைய ஆநந்த மய கோச மாகிய பஞ்ச கோசங்க ளல்லாத தாயும், இவைகளுக்கு வருகின்ற விகாரங்களையும், விகார நிவிர்த்திகளையும், காண்கின்ற தாயு மிருக்கின்ற சொரூப மானது, வேற்றுமை யற்றிருத்தலின், 'அவிகார' மெனவும், மரஞ் செடி கொடி முதலாயின, பூமியிலே யுண்டாய்ப் பூமியிலே யிருந்து, பூமியிலே யழிந்து, பூமி மாத்திர மிஞ்சுகின்றது போல, அவத்தாத்திரயப் பிரபஞ்சங்கள், அவைகளை யறியாநின்ற சாக்ஷியினிடத் துண்டா யிருந் தழிந்து. சாக்ஷி மாத்திர மாய் மீந்து போகின்றபடியினாலும், தன்னைத் தவிர, ஒரு வஸ்துவு மில்லா திருத்தலின், சாக்ஷி சைதந்ய மானது, இரண் டற்றதாதலின், 'அத்துவித' மெனவும், வேதங் கூறிற்று. 137

(அ—கை) சொருப நாமங்களின் ஒரு மையைக் கூறல்.

இன்னவகை விதிவிலக்குக் குணங்கணன்றுய்ச் சேர்ந்தொருமித்
[தெல்லாங் கூடிச்,
சொன்னபொரு ளொன்றன்றி யிரண்டில்லை யோர்பொருளைச்
[சொல்லும் சொற்கள்,
பிந்நபத மாமதனாற் சத்தாதி குணப்பொருளாம் பிரம மேக,
மன்னமொரு ளொருமையறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே.

(ப—ம்) யானைக்கு உரல் போலக் கா லிருப்பதைக் குறித்துக், 'கறையடி' யெனவும், துவார முள்ள கையா



யிருப்பதைக் குறித்துப், 'புழைக் கை' யெனவும், மலை போலக் கையுட னிருப்பதைக் குறித்துக், 'கை மலை' யெனவும். பெரி தான மிருக மா யிருத்தலைக் குறித்துப், 'பெரு மா' வெனவும், வெவ் வே றுருத்த முள் ள பல நாமஞ் சொல்லப்பட்டு, வெவ் வேறு வஸ்துப் போலத் தோற்றினாலும், அவைகளாற் கூறும் யானை யாகின்ற வஸ்து, ஒன்று யிருத்தல் போலப், பிரம்ம சொருபம், நிலையுள்ள தாய் இருப்பதைக் குறித்து, 'நித்திய' மெனவும், நிறைவா யிருப்பதைக் குறித்துப், 'பூரண' மெனவும், அசைவற்றிருப்பதைக் குறித்து, 'அசல' மெனவும், அஞ் சந மற்றிருப்பதைக் குறித்து, 'நிரஞ்சந' மெனவும், வெவ் வே றுருத்த முள்ள பல நாமம் சொல்லப்பட்டு, வெவ் வேறு போலத் தோற்றினாலும், அவைகளாற் சொல்லும் பிரம மாகின்ற வஸ்து, ஒன்றே யென்பார், 'இன்ன வகை விதி விலக்குக் குணங்க ணன்றுய்ச் சேர்ந் தொருமித் தெல் லாங் கூடிச், சொன்ன பொரு ளொன் றன் றிரண்டில்லை ஒரு பொருளைச் சொல்லும் சொற்கள், பிந்ந பதமா' மென வும், விதி விலக்கு நாமங்க ளநேகத்தையு முடைய பிரமம் ஒனறுதல் போல, சத்துச் சித்தாநந்த நாமங்களை யுடைய பிரம மொன் றாகையால், அங்ஙனம், அநுசந்தாநம் செய் யிற், சஞ்சல மான மநது சலியாமல் சொருபத்தில், திர மாய் நின்று கண்டிக்கப்படாத தாய், மூன்று பரிச்சேத மில்லாத சொருப மாவாய் என்பார், 'அதனாற் சத்தாதி குணப் பொருளாம் பிரம மேக, மன்ன பொரு ளொருமை யறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே' யெனவுங் கூறினர்.

*(தா—ம்) இவ் விதி விலக்கு நாமங்கள் பல வாயினு, மதனா லுணர்த்தப்படும் பொரு ளொன்றுதல் போலச், 'சச்சிதாநந்த' மென் னும், பதங்கள் மூன்றாயினு, மதனா லுணர்த்தப்படும் பொரு ளொன் றான வத்துவித வஸ்துவேயா மெனவும், அங்ஙன மொன் றென் பதை யுணர்ந்து, அகண்ட சொருபமா யநுபவிப்பா யெனவுங் கூறின தாம்.* 138

(அ—கை) குணாதீத மான வஸ்துவுக்குக் குணங் கூறலாமோ வென வினாதலும், அதற் குத்தரமுங் கூறல்.

நிர்க்குணவஸ் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென நிகரேன்
[றதே,
சற்குணனே வஸ்துநிலை யுரையாம லறியவல்ல சதுர நுண்டோ,
நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப்பிரம ஞானந் தோன்றச்,
சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களன்று பிரமமாஞ் சொருபந்
[தானே. 139

(ப—ம்) வைராக்கியாதியாற், காமாதி குணங்களைப் போக்கிச், சிரவணாதியாற், றத்துவ ஞானம் பெற்றிருக்கின்ற சீடனே!, ரத்தின மாதி வஸ்து வானது சட் சிந்திரியத்தினா லறியத் தக்கதா யிருந்த போதிலு, மத னதன் சுபாவங்களை யறிந்தவர் கூறக் கேட்டே, யறிய வேண்டியது போற், பதினா லிந்திரியத்தினாலு மறியக்கூடாத நிர்க்குண சொருபத்தைக் கூறக் கேட்டா, லறியலாமே தவிர, இல்லாவிடி லெவ்வளவு சமர்த்த ராலு மறியக்கூடா தாகையால், முமுட்சுக்கள் சொருபத்தை யறியும் பொருட்டு, வேதஞ் சத்துச் சித்தாந்த மெனக் கூறிற் றென்பார், 'சற்குணனே வஸ்து நிலை யுரையாம லறிய வல்ல சதுர ருண்டோ' வெனவும், மண்ணி னுடைய கடின குணஞ், சல சம்பந்தத்தினால் நீங்கி மண் வேறா யிருப்பது போலச், சச்சிதாநந்த குணங்களில் நீங்கிப் பிரமம் வேறா யிராமற், சத்தே பிரமம், சித்தே பிரமம், ஆநந்தமே பிரமமா யிருக்கின்ற தென்பார்' சொற் குணங்கள் பிரமத்தின் குணங்க ளன்று பிரமமாஞ் சொருப' மெனவும் கூறினார்.

(தா—ம்) *நிர்க்குண சொருபத்தை முமுட்சுகளுக்கு அறிவிக்கும் பொருட்டு, வேதம் சச்சிதாநந்த மெனக் கூறிற் றெனவு, மவைகள் பிரமத்தின் சொருபமே யன்றிக், குணங்க ளல்ல வெனவும் கூறின தாம்.*
139



(அ—கை) சச்சிதாநந்தப் பொரு ளொன் றென்பதைச் சுருதியாற் காட்டினது போல, யுத்தியினாலுங் காட்ட வேண்டு மென்று வினாதல்?

மோகவிருள் கெடக்கோடி யருணனென் வருகுருவே மொழியக்
[கேளீ,
ரேகபரி பூரணமா மென்சொருப மென்னுளத்தி லிறுதும் வண்ண,
மாகமங்கள் சொன்னபடி யென்னையகண் டார்த்தமா யறிந்தே
[னய்யா,
ஊகமொத் திடவுரைத்தாற் பசுமரத்தி லாணிபோ லுறைக்கு
[நெஞ்சே. 140

(ப—ம்) ஒரு சூரியன் உதிக்கும் போதே நீங்கிப் போகத் தக்க பதார்த்தங்களை மறைக்கு மிருட்டை நீக்குகின்றதற் காக, அநேக சூரிய ருதித்தா லெப்படியோ, அப்படி ஓர் மொழி உபதேசித்த மாத்திரமே கெடுக்கும்படியான ஆத்மப் பொருளை மறைத்த வஞ்ஞாந வந்தகாரத்தை நீக்குகின்றதற்காகப் பூரணமே திரு வுருவா யெழுந்தருளிக் கருணையினா லநேக வாக்கியங்களுஞ், சுருதி யுத்தி யநுபவமுங், கூறுகின்ற தேசிகரே யென்று னென்பார், 'மோக விருள் கெடக் கோடி யருண னென வரு குருவே' யென்றார்.

(தா—ம்) *அகண்டாநுபவ முண்டாகும் பொருட்டுச் சச்சிதாநந்த மொருமை யென்பதற்கு யுக்தி கூறும்படி வேண்டிக் கொண்டதாம்.*
140

(அ—கை) அவ் வினாவிற் குத்தரங் கூறல்.

சத்தேசித் தாதுமய லெனிலசத்தா மசத்தானாற் சாட்சி யெங்கே,
சித்தேசத் தாதுமய லெனிற்சடமாம் சடங்களுக்குத் திதியு மில்லை,
யொத்தேதோன் றியசத்துஞ் சித்துநல்ல சுகமாது மூகத் துக்கோர்,
வித்தேயந் நியமாயிற் சடமசத்தாஞ் சுகாநுபவம் விளைந்தி டாதே.

(இ-ள்) சத்தே-யா தொன் றிருக்கின்றதோ அதுவே, சித்தாகும்-அறிகின்றதாம், அய லெனில் (சத்துக்குச் சித்து) வே றென்ருல், அசத்தாம் - (சத்துக்கு வேருன சித்து) இல்லாததேயாம், அசத்தாருல் - (அச் சித்து அப்படி) யில்லாததே யாமாகில், சாட்சி யெங்கே - (அவ் வில்லாத சித்துக்கு அறிகின்ற) சாக்ஷித் தன்மை யெவ்விடத் துள வாகும், சித்தே - யா தொன் றறிகின்றதோ யதுவே, சத் தாகும் - இருக்கின்ற தாம், அய லெனில்- (அச் சித்துக்குச் சத்து) வேறென்ருல், சடமாம்- (சித்துக்கு வேருன சத்து) மூடமாம், (சத்து அப்படி மூட மாருல்,) சடங்களுக் குத் திதியு மில்லை - (அங்ஙன மூடமானவற்றிற்கு) இருக் குந் தன்மை யில்லாததேயாகும், சத்தும் - இருக்கின்றதும், சித்தும் - அறிகின்றதும், ஒத்தே - பொருந்தினது யாதோ வதுவே, தோன்றிய - விளங்காநின்ற, நல்ல சுக மாகும் - நிரதிசயாநந்த மாகும், அந்நிய மாகில்-(ஏகமான சத்துச் சித் துக்கு ஆநந்தம்) வே றென்ருல். சடம் அசத்தாம்-அவ் வேக மான சத்துச் சித்துக்கு வே ருன ஆநந்த. மூடமு, மில்லா தது மாகும். (அவ் வாநந்த மப்படியாருல்,) சுகாநுபவம் விளைந்திடாது - ஆநந்தாநுபவ முதியாது, ஊகத்துத்கு - (இங்ஙனம் கூறிய யுக்தியே மற்றவற்றிற்கும்) யுக்தி செய் கின்றதற்கு, ஓர் வித்து-ஒப் பற்ற மூலமாம், என்ற வாறு.

(ப—ம்) திரி காலத்திலு மிருக்கின்ற சத்தே, சித் தாகாது, சித் தந்நிய மாகில், சித்துக் கிருந் தறியுந் தன்மை யில்லைச் செடமே யாகு மென்பார், 'சத்தே சித்தாகு மய லெனி லசத்தா மசுத்தாருற் சாக்ஷி யெங்கே' யெனவும், திரி காலத்து மறிகின்ற சித்தே சத் தாகாது. -சித்தந்நியமா கில் அச் சத்துக் கறிந்து கொண் டிருக்குந் தன்மை யில்லை, யசத்தே யாகு மென்பார். 'சித்தே சத்தாகு மய லெனிற் சட மாகுஞ் சடங்களுக்குத் திதியு மில்லை' யெனவும், சத்துஞ் சித்து மேக மானதே யாநந்த மாகாது, ஆநந்த மந்நிய மாகி, லவ்வாநந்தத்துக்கு அறிந்து கொண்டிருந்து சுக மாகுந் தன்மை யில்லை துக்கமே யாகு மென்பார், 'ஒத்தே தோன்



றிய சத்துஞ் சித்து நல்ல சுகமாகு-மந்நியமாகிற் சட மசத் தாஞ் சுகாநுபவம் விளைந்திடா' தெனவும், 'ஆத்மாவே நித் தியம் பூரண முதலான' தென்றும், அசல நிரஞ்சந முத லான தென்று மறிதற்கு, இங்ஙனமே யுக்தி செய்ய வேண்டு மென்பார், 'ஊகத்துக் கோர் வித்' தெனவுங் கூறிஞர்.

*(தா—ம்) இருக்கின்றதே யறியு மாகையாற், சத்தே சித் தெனவும், அறிகின்றதே யிருக்கு மாகையாற், சித்தே சத் தென வும், இருந் தறிகின்றதே சுக மாகு மாகையாற், சத்துஞ் சித்து மேக மானதே யாநந்த மாகு மெனவும், யுத்தியிஞற் சச்சிதாநந்த வொரு மையை யுணர்த்திய தாம்.* 141

(அ—கை) சச்சிதாநந்த வொருமைக்கு யுத்தியை வற்புறுத்திக் கூறுதல்.

வீயாத சத்துமுன்னம் விளங்குவது தன்ஞலோ வேறென் றலோ,
வாயால்வே றெனிலதுவு மசத்தோசத் தோவசத்தேன் மலடி
[மைந்தன்,
பேயாகா ரியஞ்செயுமோ சத்தெனிலிப் படியதையும் பிரித்துச்
[சொன்ஞ,
லோயாத வத்தையாங் குதர்க்கவிகற் பங்களைவிட் டொழிந்தி
[டாயே. 142

(இ—ள்) வீயாத சத்து - திரி காலங்களிலும் நசியா திருக்கின்ற சத் தானது, முன்னம் விளங்குவது - ஆதியிற் பிரகாசிப்பது, தன்ஞலோ - சுய மாகவா, வே றென்ரு லோ - மற் ஞென்ருலேயா, வாயால் வே றெனில் - வாக் கிஞ (லிச் சத்து) வந்நியத்திஞற் பிரகாசிக்கிற தென்பாயா ஞல், அதுவும் - அவ் வய லானதும், அசத்தோ - இல்லா

ததோ, (அன்றி) சத்தோ - இருக்கின்றதோ, அசத்தேல் - இல்லாததே யென்றால், பேயா - பேய்த் தன்மை யுடையவனே, மலடி மைந்தன் - வந்தியா புத்திரன், காரியஞ் செயுமோ - ஒரு தொழிலைச் செய்வானோ. (அது போல,) அசத்துச் சத்தை விளக்குமோ? விளக்காது, அதையும் - அவ்வயலானதையும், இப்படி - இந்தச் சத்தைப் போல, சத்தென - சத் தென்று, பிரித்துச் சொன்னால் - வேறொரு சத் தாகக் கூறினால், ஓயாத அவஸ்தையாம் - அநவஸ்தா தோஷ முண்டாகும், (அதனாலே,) குதர்க்க விகற்பங்களை - இந்த துர்ப்புத்தி யான வேறுபாடுகளை, விட்டொழிந் திடாய் - தவிர்ந்து விடுவாய், என்ற வாறு.

(ப—ம்) எப்போது மிருக்கின்ற வாத்மாத், தானே பிரகாசிக்கின்றதே யன்றி. மற்றொன்றினால் பிரகாசிக்கப் படாததே யென்பார், 'வீயாத சத்து முன்னம் விளங்குவது தன்னாலோ வே றொன்றாலோ' வெனவும், அசத் தான வந்தியா புத்திரன், சத் தான ராஜரீக விவகாரஞ் செய்தலில்லாதது போலக், காலத் திரயத்திலு மில்லா திருக்கின்றது, எப்போது மிருக்கின்ற ஆத்மாவை எங்ஙனம் பிரகாசிப்பிக்கு மென்பார், 'அசத்தேல் மலடி மைந்தன் பேயா செய்யுமோ' வெனவும், இருக்கின்ற ஓர் தீப மானது மற்றோர் தீபத்தினால் பிரகாசிக்கின்ற தென்றால், அத் தீபம் சமான மாகையா, லதனால் பிரகாசிக்கின்ற தென்பது கூடாது, அந்த மறு தீபம் வே றொன்றினிடத்தில் பிரகாசம் பெற்றுக் கொண்டு, இந்தத் தீபத்தைப் பிரகாசிக்கின்ற தென்றால், அத் தீபம் மற்றொன்றினிடத்தில் பிரகாசம் பெற்றுக் கொண்டு பிரகாசிப்பிக்கிறது, அத் தீபம் வேறொன்றினிடத்தில் பிரகாசம் பெற்றுக் கொண்டு பிரகாசிப்பிக்கிற தென்று, மேலு மேலுஞ் சொல்ல வரும், அது போலத், திரி காலத்திலு முள்ள சத்து, மற்றோர் சத்தினாலே பிரகாசிக்கின்ற தென்றால், அச் சத்து சமான மாகையினால், அதனால் பிரகாசிக்கின்ற தென்பது கூடாது.



அந்த மறு சத்து வே றொரு சத்தினிடத்தில் பிரகாசம் பெற்றுக் கொண்டு, இந்தச் சத்தைப் பிரகாசிக்கின்ற தென்றால், அந்தச் சத்து மற்றோர் சத்தினிடத்தில் பிரகாசம் பெற்றுக் கொண்டு பிரகாசிப்பிக்கின்றது, அந்தச் சத்து வேறோர் சத்துனிடத்தில் பிரகாசம் பெற்றுக் கொண்டு பிரகாசிப்பிக்கின்றது என்று அநவஸ்தா தோஷ முண்டாகி, ஆத்ம நிச்சய முண்டாகாது, அதனால், ஜெநந மரணம் நீங்கா தென்பார், 'சத் தென விப்படி யதையும் பிரித்துச் சொன்னா லோயாத வவஸ்தையா' மெனவும். சத்தை மறு சத்துப் பிரகாசிப்பிக்கிற தென்றா, லச் சத்து, தான் ஸ்வதா வாகப் பிரகாசித்துக்கொண்டே பிரகாசிப்பிக்கிற தென்று சொல்ல வேண்டு மாகையாலும். வேதாந்தத்தில் இரண்டு சத்து இல்லை. ஆகையாலு, மெந்தச் சத்து, தான் சுதா வாகப் பிரகாசிப்பிக்கின்றதோ, அந்தச் சத்தே சித் தென்றும், மற்றது சத் தல்ல வென்றும். சித் தான சத்து. அத்துவித மாகையால், அதுவே யாநந்த மென்றும், சயுக்தியினாலே தெளிந்து கொண்டு, சுகத்தை யடைவா யென்பார், 'குதர்க்க விகற்பங்களை விட் டொழிந்திடா' யெனவுங் கூறினார்.

*(தா—ம்) சத்தை மறு சத்துப் பிரகாசிப்பிக்கிற தென்றால், மேலும் மேலும் சத் துண் டென்று அநவஸ்தா தோஷ முண்டாகும். ஆகையால், சத்தே சித் தெனத் தெளிவா யென்ப தாம்.* 142

**(அ—கை) சச்சிதாநந்தப் பொரு ளொன் றென் பதற் கநுபவங் கூறல்.**

சுருதியுக்தி யொத்ததுபோ லநுபவமுங் கேள்சுழுத்திச் சுகவா நந்த,
மிருதிவடி வாதலினவ் வாநந்த மேயறிவாம் வேறங் கில்லை,
கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் காண்கின் றாயே,
யிருதயத்திப் படிநோக்கி யேகபரி பூரணமா யிருந்தி டாயே. 143

(இ—ள்) சுருதி-சுருதிப் பிரமாணத்தினுலும், யுக்தி-யுக்திப் பிரமாணத்தினுலும், ஒத்தது போல்-(சச்சிதாநந்தப் பொரு ளொருமையை யுணர்த்திய உனக்குச்) சம்மத மானது போல், அநுபவமுங் கேள்-அதற் கநுபவப் பிரமா ணமும் (கூறுதும்) கேட்பாய், சுழுத்திச் சுக வாநந்தம்-சுழுத்தி அவத்தையி லுள்ள சுக மாகிய வாநந்த மானது, மிருதி வடி வாதலின் - (நித்திரையில் அஞ்ஞாநத்தை அறிந்து, ஒன்றையும் அறியா திருந்தே னென்று) நினைப்பு ரூப மாய் வெளிப்படுதலின், அவ் வாநந்த மே - அந்தச் சுகமே, அறி வாம் - சித் தாகும்.

(அ—கை) அவ் வஞ்ஞாநம் வே ருென்றினுலே அறியப்படுகிற தென்று சொல்லுவோ மெனில்.

வே றங் கில்லே-(அச் சுழுத்தியில் அதை அறிதற்கு, ஆநந்தத்தை விட)வேருெரு பிரகாசமும் இல்லே.) ஆன தனுல், ஆநந்தமே சித்து) பிரளயம் - கற்பாந்தமும், கருது சுழுத்தி- (சுக மடைய) விரும்புகின்ற சுழுத்தி அவத்தையு மாகிய, இரண்டிலும் - (இவ்)விரண் டவத் தையிலும், நீ யிருந்து - நீ (சத் தாக) விருந்து, இருளே-(மாயையு மவித்தையு மாகிய) வந்தகாரத்தை, காண் கின்ருயே - அறிகின்ரு யல்லவா, (ஆனதால் சித்தா கிய ஆநந்தமே சத்து), இருதயத்து- (உனது) திருதயத் தில், இப்படி நோக்கி-இவ் வித மான அநுபவத்தினுல் (சத்தே சித்து, சித் தான சத்தே, ஆநந்த மெனவும், அச் சச்சிதாநந்த மான அத்துவித சொருபமே நீ யென வும்) அறிந்து. ஏக பரிபூரணமா யிருந்திடாய் - ஒன் ருன அகண்ட சொருப மாகவே யிருப்பாய், எ-று

(ப—ம்) சுழுத்தி யவத்தையில் அப்பிரகாச மான அஞ்ஞாநத்தைச், சூரிய சந்திர அக்கிநி மின்னல் நட்சத்திர இந்திரிய கரணப் பிரகாசங்க ளொான்று மில்லா திருக்க, சொப்பிரகாச மான ஆநந்த மாத்திரமே யிருந் தறிகின்ற



படியினுல், ஆநந்தமே சித் தென்பார், 'சுழுத்திச் சுகவா நந்த மிருதிவடி வாதலின் அவ் வாநந்தமே யறிவாம் வே றங் கில் லே ' யெனவும், எதை யறிய வேண்டுமானுலு, மிருந்தே யறிய வேண்டு, மில்லா தறியக் கூடா தாகையால், அப் பிரமம் பிரளய அவத்தையிற் சகலப்பிரபஞ்சமும், லீந மான மாயா வந்தகாரத்தையுந், திநப் பிரளய மாகின்ற சுழுத்தி யவத்தையில், தேகேந்திரியாதி சகலமும் லீந மான அவித்தையாந்தகாரத்தையு மறிகின்ற, ஆநந்த ரூப மான சித்தே சத் தென்பார், 'பிரளயஞ் சுழுத்தி யிரண்டிலும் நீ யிருந் திருளேக் காண்கின்ருயே' யெனவுங் கூறினுர்.

*(தா—ம்) ஆநந்தமே அஞ்ஞாநத்தை யறிகையினுல், அதுவே சித் தெனவு, மிருந்தே யறிகையினுல், அந்தச் சித் தான வாநந்தமே சத் தெனவுங் கூறின தாம்.* 143

(அ—கை) சுருதி யுக்தி அநுபவப்படி சீடன் சகச நிட்டையிற் பெற்ற அநுபவங் கூறல்.

பலகலேயு முணர்ந்ததரு மொழிந்தபடி யிவனுமநு பவம்வி டாமற்,
பலமலரின் மதுப்போலச் சச்சிதா நந்தமோன்றும் பரமார்த் தத் [தைப்,
பலபொழுதும் கண்மூடிச் சமாதியிருந் தான்விழித்துப் பார்த்த [போது,
பலவடிவாஞ் சாரசரசித் திரங்களெலாந் தோன்றுமொருப டமா [னுனே. 144

(ப—ம்) காண்டத் திரயங்களேயும், ஐயந் திரி பின்றி, நன் ருய் விசாரித்துக், கன்ம காண்டம் பத்தி காண்டத்திற் கூறியவை, பூர்வ பக்ஷ மெனவும், ஞாந காண்டத்திற் கூறிய வஸ்து, சித்தாந்த மெனவும், கண்ட பூர்வ பக்ஷங் களே விடுத்து, அச் சித்தாந்த மான வஸ்துவைத் தா ஞகை அபரோக்ஷமா யறிந்து, சகலருக்கும் வஸ்துவின் அநுபவம் உண்டாகும்படி போதிக்கின்றவரா யிருக்கின்ற ஞாநா

சாரிய ரென்பார், ‘பல கலையு முணர்ந்த குரு’ வெனவும், சேதநாசேதங்களா யிருக்கின்ற சகல பிரபஞ்சங்களுக்கும் ஆதார மாயும், அவைகளுக் கதிஷ்டாந மாயும், சர்வாத்மக மாயு மிருக்கின்ற அத்தி பாதிப் பிரிய மாகிய அத்துவித சொரூப மானு னென்பார், ‘பல வடிவாஞ் சராசர சித்தி ரங்க லெல்லாந் தோன்று மொரு படமானுனே’ யெனவுங் கூறினுர்.

*(தா—ம்) சச்சிதாநந்த ஒருமை யான அத்துவித சொரூபமே தா னுகி, தானே யாவு மாகி விளங்குகின்ற சாக்ஷாத்கார அநுபவம் பெற் ருரூட னுயினு னென்ப தாம்.* 144

**(அ—கை)** அவ் வகண்டாநுபவம் பெற்ற சீடன், முன் துரியாதீத மேழாம் பூமி, முக்கிய மென்ற தின்ன தெனவும், அதன் வகை யின்ன தெனவுங், கூற வேண்டு மெனல்?

இதயமோத்த சற்குருவே நமக்கிதுவே விநோதமன்றி யினிவே
[றுண்டோ,
வதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றே ஞாநிகளுக் கான நீதி,
முதலுரைத்த துரியாதீ தமேழாம் பூமியுமுக் கியமா மென்ற,
பதமதின் வகையுமெனக் கெளிதாகத் தெளியும்வண்ணம் பணித்தி
[டீரே. 145

(ப—ம்) சகல பிரபஞ்சமும் தன்னைத் தவிர வே றல்ல வென்றும், சாக்ஷாத்கார அநுபவம் பெற்று, வே ருென்று மடையத் தக்க தில்லா திருப்பதனுலே, நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமாநந்த அத்துவிதப் பிரம சொரூபத்தை லீலை யாகத் தியாகித்துக் கொண்டும், அதைப் பிரதிபாதித் துக் கொண்டும், இருக்க வேண்டுவதே யன்றிச், சற்குரு நாதனே! இனி மேல் நமக்குக் கன்மாதித் தொழிற் செய்ய வேண்டுவ தின்றே யென்ரு னென்பார், ‘நமக்கிதுவே



விநோத மன்றி யினி வே றுண்டோ’ வெனவு, முயர்ந்த ரத்ந முள்ளவ. னதன் விலை தெரிந்தோரு, மதை விலைக் குக் கொள்வோரும் வந்தால், அதைக் குறித்துப் பேசியும், தனித் திருக்கும் போது இவ் வளவு உயர்ந்த ரத்நம் வைத் திருக்கிறே மென்று நினைத்து மகிழ் வடைந் திருப்பதும் போல, அகண்ட சொரூபாநுபவம் பெற்ற ஞாநிக, ளவ் வநுபவ முள்ள ஞாநிக ளாவது, அதனை அடைய விரும்பு கின்ற முமுக்ஷுக்க ளாவது கூட விருந்தா, லிச் சொரூபத் தைச் சந்தோஷ மாய்ப் பிரதிபாதித்துக் கொண்டுந், தனித் திருந்தா லச் சொரூபத்தை தியாநித்துத் திருப்தி யடைந்து கொண்டு மிருக்கின்றது தானே சுபாவ மென்பார், ‘அதை யுரைத்தும் அதை நினைத்தும் இருப்பதன்ரே ஞாநிகளுக் கான நீதி’’ யெனவுங் கூறினுர்.

(இ—ம்) ஆருடர்க ளாத்ம சொரூபத்தைப் பிரதி பாதித்துக் கொண்டிருப்பது லீலையே யன்றி, அப்பியாசி களைப் போ லல்ல வென்ப தாம். 145

**(அ—கை)** சுவாநுபவத்திற் செல்லு, மநோ லய மார்க்க மான ஞாந சத்த பூமியைக் கூறுவான் ருெடங்கி, யவற்றிற்குக் காரண மான ஏழு அஞ்ஞாந பூமியை முற் கூறுகின்ருர்.

வினவுமிடத் தஞ்ஞாந பூமிகளேழ் ஞாநபூ மிகளே ழேன்பா,
ரினியவற்று ளஞ்ஞாந பூமிகளே ழையுமுந்தி யியம்பக் கேளாய்,
தனிவித்துச் சாக்கிரஞ்சாக் கிரமகா சாக்கிரஞ்சாக் கிரத்தைச் சார்ந்த,
கனவுகநாக் கனவுசாக் கிரஞ்சுழுத்தி யென்றேழபேர் கணித்தார்
[மேலோர். 146

*(தா—ம்) அஞ்ஞாந பூமிகள் ஏழின் நாமங்களைக் கூறின தாம்.* 146

**(அ—கை) அவற்றி ளுன்கு பூமிகளி னிலக்கணங் கூறல்**

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல்வித் தாகு.
மிந்தவறி விற்பண்டில் லாவகந்தை முளைபோலா மிதுந நாவாம்,
வந்துவந்து பிறவிதோறு மகமதை வளருமது மகாந நாவாம்,
நந்துமகங் கோடுநநவின் மநோராஜ் ஜியஞ்செயலே நநாக்க
[நாவே. 147

(ப—ம்) பரிபூரண பிரம்ம சொருபத்தினின்று நாமமும் ருபமு மின்றி, மே லுண்டாகும் மந முதலிய நாம ருபக் கிரியைகளுக் காதார மாகிய விதை போன் றிருக்கும் போதமே, முத லாவ தான அஞ்ஞாந பூமி யென்பார், 'முந்த வகண்டத் தெழு மோ ரறிவு மாத்திரம் அது தான் முதல் வித்தாகு' மெனவு, மந்தப் போத மாகிய சீவனுக்கு, அதற்கு முன் னில்லாதபடியினுலே அற்ப மாகத் தேகேந் திரியாதிகளில், யா னென்றும், பிரபஞ்சத்தி லென்னது வென்று முண்டாகின்ற நிச்சயமே, யிரண் டாவ தான அஞ்ஞாந பூமி யென்பார், 'இந்த வறிவிற் பண்டில்லா வகந்தை முளை போலா மிது நநாவா, மெனவும், அச் சீவ னுக்கு, மே லுண்டாகின்ற ஜெநநந் தோறும், முற் பிறப் பின் வாசனைத் தொடர்பினுலே, "நா னின்ன வர்ணுச்சிரமா தியை யுடையவ' னென்று, "மிவ னெனக் குயர்ச்சி" யென்று, 'மிவ னவ' னென்று. மிது நல்ல, திது பொல்லாதது, என் னுடையது, பிற ருடைய, தென்றும், விருத்தி யடைகின்ற நிச்சயமே, மூன் ருவ தான அஞ்ஞாந பூமி யென்பார், 'வந்து வந்து பிறவி தொறும் அக மமதை வளருமது மகா நநாவா' மெனவும், அந்தச் சீவ னுனவ, னறிந்த விடயத்தைக் குறித் தானுலு, மறியாத விடயத்தைக் குறித் தானுலும், சாக்கிர வவத்தையில், மேலும் மேலுஞ் சங்கற்ப விகற்பமா யெழுகின்ற மநதி னுல், அந் தந்த விடயாகாரமா யழுந்திச் சிந்தனை செய்கின்



றதே, நான் காவ தான அஞ்ஞாந பூமி யென்பார், 'நந்து மகங் கொடு நனவில் மநோராஜ்ஜியஞ் செயலே நநாக் கநா' வெனவுங் கூறினுர்.

*(தா—ம்) பிரம்ம சொருபத்தி, ஞம ருப ரகித மா யுண்டான பிரஞ்ஞையே வித்துச் சாக்கிர மெனவும், அவ் வறிவுக்குச் சூட்சும மாய், யா னென தென்று தோற்ற முண்டானதே, சாக்கிர மெனவும், யா னென தென்னு மத் தோற்றம் விருத்தி யடைந்ததே, மகா சாக்கிர மெனவும், பார்த்த விடயத்தையும் பாராத விடயத்தையுங் கருதிப் பய னின்றி, சாக்கிரத்தில் மநோ ராஜ்ஜியம் செய்வதே, சாக்கிர சொப்பந மெனவுங் கூறினுர்.* 147

**(அ—கை) ஏனைய மூன்று பூமிகளின் இலக்கணங் கூறல்.**

உண்டுறங்கி மநோரர்ஜ் ஜியஞ்செயல்சொப் பநமெனும்பெய
[ருடைய தாதும்,
பண்டுகநாக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பதுசொற் பநந நாவாம்,
மண்டுமிருள் மூடுவது சுழுத்தியா மஞ்ஞாந வகைகள் சொன்னேம்,
விண்டுநிறை முத்திதரும் ஞாநபூ மிகளேழும் விளம்பக் கேளாய். 148

(ப—ம்) சாக்கிரத்தில், கான னீ ராகவும், கிளிஞ்சில், வெள்ளி யாகவும், சந்திரன், இரண் டாகவு. மாறித் தோற் றுவது போல, அச் சீவன், நித்திரை மயக்க மான சொப்ப நத்தில், அற்ப காலத்தில், அநேக வருடம் சென்றது போல வும். தாரித்திரியன். த ந வா ன் போலவும், தன் தலையை வெட்டி, தான் தூக்கிக் கொண்டது போலவும். இவை முதலான விபரீதத் தோற்றத்தைக் கண்டு. சாக்கிரத்தில் விழித் தவைகளை நினைக்கின்றதே, ஐந் தாவ தான அஞ்ஞாந பூமி யென்பார், 'உண்டுறங்கி மநோ ராஜ்ஜியஞ் செயல் சொப்பந மெனும், பெய ருடைய தாகு' மெனவும், அச்

சீவன், வெகு காலத்துக்கு முன் சொப்பநத்திற் கண்டு மறந்த வஸ்துவை, சாக்கிரத்தில் எதிரே யிருக்கின்ற வஸ்துக்கள் தோன்றுதபடிக்கு மறந்துவிட்டு, வெகு நேரம் ஞாபகப்படுத்திப் பார்க்கும் போது, சாக்கிரம் போலத் தோன்றுகின்றதே, யாறுவ தான அஞ்ஞாந பூமி யென்பார், 'பண்டு கநாக் கண்டு மறந் ததை மீண்டு நினைப்பது சொப்பந நநாவா' மெனவும், சகல பிரபஞ்சத்தையு மடக்கி யிருக்கின்ற தாயும், அந்தகார மாயும், சட மாயும், அநேக துக்கத்துக் கேது வான பிரஞ்ஞை யுடையதாயு மிருக்கின்றதே, ஏழாவ தான அஞ்ஞாந பூமி யென்பார், 'மண்டு மிருள் மூடுவது சுழுத்தி யா' மெனவுங், கூறினர்.

*(தா—ம்) நித்திரை மயக்கத்திற் காண்கின்ற நாம ரூபத்தை நினைப்பது சொற்பந மெனவும், சொப்பநத்தில் கண்டு மறந்த வஸ்துவை, வெகு நாட் கழித்து நினைத் துணர்கின்றது, சொப்பந சாக்கிர மெனவும, சகலத்தையும் அடக்கிக் கொண் டிருக்கின்ற அந்தகாரமே, சுழுத்தி யவத்தை, யெனவுங் கூறின தாம்.* 148

**(அ—கை) ஞாந பூமிக ளேழின் நாமங்களைக் கூறுகின்றார்.**

புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம் பூமி யாதும்,
நலதநுமா நசிமூன்றம் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி, [பேரும்,
சோலுமசஞ்சத் திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேரும் துரியப்
மலிநமறு மகனேயைந் தாறேழ பூமிகளாய் வகுத்தார் மேலோர்.

(ப—ம்) அநேகங் கோடி சீவர்களி, லநேகங் கோடி ஜெங்மம் நிஷ்காமிய புண்ணியம் பண்ணிய ஒருவனுக்குக், கிடைக்கத் தக்க அருமை யுள்ள தானதனாலும். மற்றைப் பூமிகள் கிடைப்பதற்கு ஏதுவா யிருப்பதனாலும், மகான்களால் துதிக்கப்படுகின்ற சுபம் விரும்ப லென்பார், 'புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சை' யென்றார். 149



**(அ—கை) அவற்றுள், நான்கு பூமிகளி னிலக்கணங் கூறல்,**

துர்ச்சங்க நிவிர்த்திவந்து சிவஞாநம் விரும்புவதே சுபேச்சை
[யாதும்,
நற்சங்க மொழிவினவி ஞாநநூல் பழகல்விசா ரணையா நம்பி,
மூற்சங்க விடணைகள் விடறநுமா நசியிந்த மூன்றி னாலும்,
சற்சங்க மநதிலுண்மை யறிவுதித்தல் சத்துவா பத்தி தானே. 150

(ப—ம்) பிறவிக் கேது வான மூட சங்கத்தையும், பிரவிருத்திகளையும் விடுத்து, மிருது வாயு. மன் புள்ள, உபசார மாயும், சாமார்த்திய மாயும், தேச காலங்களுக்குத் தகுந்த தாயு மிருக்கின்ற சொற்களை வசநித்துக் கொண்டு, பாவத் தொழில் பண்ணப் பயந்து, துன்பத்துக் கேது வான விடய போகத்தி லாசை யில்லாமல், ஜெநந மரண துன்ப நீங்குவதற் கேது வான மோக்ஷ பதம் யாதென்று கருதி, யென்றைக்குச் சற்சங்கத்தைச் சேர்ந்து சாஸ்திர விசாரஞ் செய்து, அதை அடைவோ மென்று விரும்புகின்றதே, சுபம் விரும்ப லென்பார், 'துர்ச்சங்க நிவிர்த்தி வந்து சிவ ஞாநம் விரும்புவது சுபேச்சையாகு' மெனவும், அப் பூமி அப்பியாசத்தால், திரி வித கரணமு மொத்து, சாதுக்களைச் சார்ந்து. வேதாந்த சாஸ்திர. மெவ் விடத்திருந்தாலும், போய்க் கொண்டு வந்து அப்பியாசித்து, சற் குருவி னிடத்தில் உபதேசம் பெற்றபடி, ஆத்ம அநாத்மாக்களை நன் றாய் விசாரித்துக் கொண் டிருக்கின்றதே, விசார மெய்த லென்பார், நற் சங்க மொழி வினவி ஞாந நூல் பழகல் விசாரணையா' மெனவும், சுபேச்சை விசாரணை இரண்டு பூமி யப்பியாசத்தால். சச்சிதாநந்த நித்திய பூரண வஸ்து லட்சியார்த்த மென்றும். அசத்துச் சடம் துக்கம் அநித்தியம் கண்ட மான தேகாதி பிரபஞ்சங்கள் சேர்ந்த சேதநம் வாச்சியார்த்த மென்று அறிந்து, வாச்சியார்த்தங்களுள் விரோத பாகங்களைத் தா னன் றென

நீக்கி, யந்த லக்ஷியார்த்த மான வஸ்துவே தா னென்று நிரந்தரம் தியாநித்துக், காமாதி வாசனைகள் சாந்த மடைந்து, நினைவு குவிவதுவே, மநம் சிறுக லென்பார், 'முற் சங்க வீடணைகள் விட றநுமாநசி' யெனவும், முன் மூன்று பூமி யப்பியாசத்தினுல், ஜெகத்து சங்கற்ப'மாத்திர மாய், மனோ லய மாகி, சத்திய ஞாந வநந்தாநந்த சொரு பமே தா னென் றபரோக்ஷமா யறிகின்றதே, யுண்மை யிலே மன்னி நிற்ற லென்பார், 'சற்சங்க மநதி லுண்மை யறிவுதித்தல் சத்துவாபத்தி' யெனவுங் கூறினுர்

*(தா—ம்) சாதந சதுட்டய முதித்து, விடய தோஷ திருஷ்டி யுண்டாய்த், தன்னைத் தரிசிக்க விரும்புவதே, சுபேச்சை யெனவும், அவ் விருப்பத்தாற் ருேஞகிய சித்தருவமும, தா னல்லாத சட வுருவமும், இஃதென விசாரித்தல் விசாரணை யெனவும், அவ் விசாரத்தி லுள்ள அச் சித்தில் வாசனை யுண்டாய்ச், சட வாசனை விட்டு, மநம் அடங்குதலே தநுமாநசி எனவும், அச் சித்து வாசனை மிகுந்து அது அநுபவ மாக வெளிப்படுதல், சத்துவா பத்தி யெனவுங் கூறின தாம்.* 150

**(அ—கை) ஏனைய மூன்று பூமிகளின் இலக்கணங் கூறுதல்.**

தத்துவத்தின் மநமுறைத்து மித்தையெலா மறப்பதசஞ் சத்தி யாது,
மத்துவிதா நந்தம்வரும் திரிபுடிபோம் பதார்த்தாபா வனைய
[தாதும்,
வத்துநிலை யிருந்தபடி யிருந்தமௌ நச்சுபாவம் துரிய மாது,
மித்துரிய பூமியைமுன் துரியாதீ தப்பதமென் றதுவுங் கேளாய். 151

(ப—ம்) முந்தின நான்கு பூமி யப்பியாசத்தினுல், தான் அத்துவித சொரூப மாத்திர மாகச் சேடித்துக், காமாதி வாசனைகள் நீங்கி, மித்தை யான பிரபஞ்சத்தை மறந்திருத்தலே. சங்கற்ப மற லென்பார், 'தத்துவத்தின் மந முறைத்து மித்தை யெலாம் மறப்பது அசஞ் சத்தி யாகு' மெனவும், முந்தின ஐந்து பூமி அப்பியாசத்தினுல், அத்தியந்தம் வாசநா க்ஷயமும், மாயையு நீங்கி, யகங்காரக் கிரந்தி யற்று, ஆநந்த சமுத்திரமா யிருக்கின்றதே, பதார்த்த வெண்ண மறுத்திட லென்பார், 'அத்துவிதாநந் தம் வரும் திரிபுடி போம் பதார்த்தாபாவனையதாகு' மென வும், சுபேச்சை முதலிய ஆறு பூமிகளி னப்பியாசத்தினு லும், உபசாந்த மாயும், பதினுலு இந்திரியங்களினுலு மறி யக் கூடாததாயுஞ், சம மாயும், சூட்சும மாயுந்,தற் சுபாவ மாயு மிருக்கின்றதே, துரியகை யென்பார், 'வத்து நிலை யிருந்தபடி யிருந்த மௌநச் சுபாவந் துரியமாகு' மெனவும் கூறினுர்.



*(தா—ம்) அத்துவித சொரூபத்தில் மந மழுந்திச், சீவேசுர சகத்தை மறத்தல், அசம்சத்தி யெனவும், துவிதத் தோற்றம் நீங்கி யத்துவிதாநந்தமா யிருத்தல், பதார்த்தாபாவனை யெனவும், சசாதீய விசாதீய சுவகத பேத ரகித மான சைதந்ய மாக விருத்தல், துரிய மெனவும், இதுவே முக்கிய மான பத மெனவுங் கூறின தாம்.* 151

**(அ—கை) இத் துரிய பூமியே துரியாதீத மாகு மியல்பு தோன்றச் சத்த பூமி யையும், பஞ்ச வவத்தை யாகப் பகுத் ததன் வகையும் அதன் இலக்கணமுங், கூறுகின்றுர்.**

முப்புவிமுன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமாம் மூன்றுக்
[கப்பால்,
சொப்பநமா மதுவுமெள்ள நழுவுமஞ்சாம் பூமியே சுழுத்தி யாது,
மற்புதமாஞ் சுகாநுபவ மிதுமாறும் புவிதுரிய மதற்கப் பாலோர்,
கற்பனையி லாதவிட மதீதமென்று மௌநமாய்க் காட்டும் வேதம்.

*(தா—ம்) சுபேச்சை விசாரணை தநுமாநசி யாகிய, மூன்று பூமியிலும், பூரண ஞாந மின்மையினுல், பிரபஞ்ச மானது சம மாய்த் தோற்றுது மெய் போ, லுயற்சி தாட்சி யாய்த் தோற்று*

தலின், அவைகளைச் சாக்கிர மெனவும், சத்துவாபத்தியில், பூரண ஞாந முண்டானதனால், பிரபஞ்ச மானது உயர்ச்சி தாழ்ச்சியாய்த் தோற்றாது, மித்தை யாய்ச் சம மாய்த் தோற்றுதலி, னது சொப்பந மெனவும், அசம்சத்தியில்; நினைப் பிறந் தாநந்தா நுபவத்தினால், சகந்தோற்றாமையின், அதைச் சுழுத்தி யெனவும், பதார்த்தாபாவ னையிற், சுட் டறிவு இறந்து ஆநந்த சாகரமா யிருத்தலின், அதைத் துரிய மெனவும், துரிய பூமியில், வாக்கு மநதுக் கெட்டாததா யிருந்தபடி இருத்தலின், அதைத் துரியாதீத மெனவுங் கூறினதாம்.

152

(அ—கை) இங்ஙனம் ஓர் கற்பனை இலாத விட மாகிய 7வது பூமியைத் துரியாதீத அவஸ்தை யென்று வேதங் கூறுகிற பிரகாரம் குரு நாதனே நீர் கூறினதாயின், அவ் வேழாவது பூமிக்குத் துரிய மெனப் பேர் வகுத்தா ரென்று நீர் சொல்லிய மேலோர், எதைத் துரியாதீத அவஸ்தை யெனக் கூறுவார்க ளெனில்?

துரியநிலந் தனைத்துரியா தீதமெனில் மயக்கமென்று கருதி மே
[லோர்,
அரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கி லாறம்பூமி,
மருவுசுழுத் தியிற்காட்சி சுழுத்தியென்பா ரென்பதுநீ மநத்திற்
[கொள்வாய்,
பெருமைதரு ஞாநபூ மியின்விகற்ப மின்னமுண்டு பேசக் கேளாய்.

(இ—ள்) சுருதி மேலோர் - (ஏ ழாவது பூமிக்குத் துரிய மெனப் பேர் வகுத்த மகத்துக்க ளான) சாஸ்திர கர்த்தாக்கள், துரிய நிலந்தனை - (அவர்கள்) துரிய மென்ற ஏழாவது பூமியைத் தானே, துரியாதீத மெனில் - (நான் கூறிய பிரகாரம்) துரியாதீத வவஸ்தை யென்றுங் கூறுவார் களே யாகில், மயக்க மென்று - (ஒரு பூமியைத் தானே யிரண் டவஸ்தை யாகக் கூறப்படுகிறதே யென்று) மோக முண்டா மெனக் கருதி, அரிய தொரு விதேக முத்தி-



அருமை யாய் கிடைப்ப தாயும், ஒப்பற்ற தாயு மிருக்கின்ற, (சீவந் முத்த னுடைய உடல் நீங்கிய பின் சித்திக்கின்ற தான மோட்ச மாகிய) விதேக முத்தியை, அதீத மென்பார் - துரியாதீத வவஸ்தை யெனக் கூறுவார்கள்.

(அ—கை) (ஆனு லவர்கள், துரிய மென்ற ஏழாவது பூமிக்கு முந்தின ஆறு பூமியையும், சாக்கிர சொப்பந சுழுத்தி மூன் றவஸ்தைக்கு ளெங்ஙன மடக்கிக் கூறுவார்க ளெனில்).

அது கணக்கில் - (அவர்கள் ஏழாவது பூமியைத் துரிய வவஸ்தை யென்றும், சீவந் முத்தன் உடல் மரித் துண்டாகும் விதேக முத்தியைத் துரியாதீத வவஸ்தை யென்று கூறும்). அந்தப் பக்ஷத்தில், ஆறும் பூமி, மருவு சுழுத்தியில் காக்ஷி சுழுத்தி யென்பார் - (முத லாவ திரண் டாவது மூன் றாவது பூமியைச் சகஞ் சத்திய மாய்த் தோற்றுவதால் சாக்கிர மென்றும், நாலாவது பூமியைச் சகம் பொய் யாய்த் தோற்றுவதால் சொப்பந மென்றும், 5வது பூமியை, பொய்த் தோற்றமும், மெள்ள நழுவுவதால் சுழுத்தி யென்று, நா முரைத்த பிரகாரமே கூறி, ஆறாவது பூமிக்கு முன் பொருந்திய 5வது பூமியாகிற சுழுத்தி யவஸ்தை, ஒன்றுக் குள்ளேயே யவ் வாறாவது பூமியையும், அற்புத சுழுத்தி யென் றடக்கிக் கூறுவார்கள், என் பது - என்று நா மிங் கதற்கு குரைத்த விபரத்தையும், நீ மநத்திற் கொள்வாய் - மாணாக்கனே! நீ யுன துளத்திற் றரித்துக் கொள்வாய்.

(அ—கை) (இந்த ஞாந சப்த பூமியைக் குறித்தும் அடியேனுக்கு இன்னமும் தெரியவேண்டும். வகை யுளவோ வெனில்).

பெருமை தரும்-மகிமையைக் கொடுக்கின்ற ஞாந பூமியின் விகற்பம் - யோக சத்த பூமியின் வேறுபாடு, இன்னமுண்டு - மேலும் இருக்கின்றன, பேசக் கேளாய் - (யாங்) கூறக் கேட்பா, யென்ற வாறு.

(ப—ம்) சகல மன்னருக்கு மே லான சம்ராட் டாதல் கிடைப்பது எப்படி யருமையோ, அப்படிச் சாலோகாதி சகல அபர கதிக்கு மே லான பரமா யிருக்குங் கதி கிடைப்பது அருமை யாதலின், ‘அரிய’ தென்றும், சீவந் முத்தி வரைப் பதங்களி லுவமிக்கும்படி வேறிருத்தல் போல, விதேக முத்தியில் ஒப்புச் சொல்ல வே றொன்று மின்மையால், ‘ஒரு’ வென்றும், அற்புதமாஞ் சுகா நுபவ மிகும் புவி யாதலால், அற்புத சுழுத்தி யென்பார், ‘காட்சி சுழுத்தி’ யெனவும், இரும் புண்ட நீர் போலத், திரும்பாத மகிமை யுள்ள விதேக முத்தியைச் சித்திக்கச் செய்வ தென்பார், ‘பெருமை தரு’ மென்றும் கூறினர்.

(வி—ம்) ஆறும் பூமியைக் கூறினமையால், அதற்கு முந்தின பூமி விபரமும் வருவிக்கப்பட்டது.

(தா—ம்) ஏழாம் பூமி, வஸ்து நிலை யிருந்தபடி. யிருந்த மௌந சுபாவ மாகையால், அதைத் துரிய மென்ற மேலோர், அது கற்பனை யிலாத விட மென்பதைத் தானே துரியாதீத மென்றார் களே யாகில், ஒரு பூமியைத் தானே யிரண் டவஸ்தை யாகக் கூறி யிருக்கின்றதே யென்று ஐய முண்டா மென்று கருதி, யதனைச் சீவந் முத்தியின் றிர மான துரிய மென்றே வைத்து அதில் பிறர் திருட்டிக் காவது தேக கற்பனை யிருப்பதால், தேக நீங்கி விதேக முத்தியைத் துரியாதீத மென்பார்க ளெனவும், அதனால் அவர்கள் ஆநந்தா நுபவத்தால், சகந் தோன்றாத ஐந்தாம் பூமியாகிற சுழுத்தி யவத்தைக்குள் ஆநந்த சாகரமா யிருக்கிற ஆறும் பூமியைக், “காட்சி சுழுத்தி” யென் றடக்கிக் கூறுவார்க ளெனவுங் கூறி, ஞாந பூமியைச் சேர்ந்த விபரம் மேலும் கூறத் தொடங்கின தாம்.

153



(அ—கை) அந்த ஞாந பூமிகளை யடைந்தோர் தார தம்மியத்தைக் கூறல்.

முன்னிலங்க ளேறியமூ வருமப்பி யாசிகளாம் முத்த ரன்றே,
பின்னிலங்கன் வான்வரியான் வரிட்டனெனுஞ் சீவந்முத்தர் பேத
]மாதும்,
சொன்னநடுப் பூமிவர்த ஞானிகளே பிரமவித்தாம் தூய முத்த,
ரின்னமுமப் பூமிகளின் பெருமைதனை நீயறிய யான்சொல்'வேனே.

(ப—ம்) சுபேச்சை விசாரனை தநுமாநசி மூன்று பூமியி லும், அப்பியாசிக்கின்றோர், வாக்குக் காயத்தால் ஞாநிகளைப் போலப், பிறருக்குக் காணப்பட்டா லும், அவ் வப்பியாசிகளுக்கு ஜெகத்தில் பிரமாண புத்தி அத்தியந்தம் நீங்காததனு லும். சம்சய பாவனை யாதி யின்றி ஞாந முண்டாகாததனு லு, மவர்கள் சாத்திய ரல்லச் சாதக ரென்பார், ‘முன்னிலங்க ளேறிய மூவரும் அப்பியாசிகளா முத்த ரல்ல’ வெனவும், விடய மாகிய பாம்பு கடிக்கு மென, மூவர் சமாதி மேடையி லேறி யிருக்க, தா னதை மேலே போட்டுக் கொண்டு, தனக்கு மயக்க விஷ மேறுமலும், கடிபட்ட முமுக்ஷு வுக்கு மயக்க விஷம் நீங்கவும், பிரம்மோக மென்னுங் கருடத் தியாநத்துட னிருப்பதால், ‘அத் தூய முத்த’ ரென்றார்.

(தா—ம்) முன் மூன்று பூமியை யடைந்தவர் அப்பியாசிக ளெனவும், மற்றை நான்கு பூமியை அடைந்தவர்கள் சீவந் முத்தர்க ளெனவுங் கூறின தாம்.

154

(அ—கை) முன் மூன்று பூமியையு மடைந்தோர் முத்த ரல்ல ராயினும், அவர் அப்பியாயம் வீ ணல்ல வெனத் தெளியக் கூறல்.

நலாம்பூ மியில்வருமுன் மூன்றுபூ மியுமடைந்து நடந்து மாண்,
[டோர்
மேலான பதமடைந்து பிறந்துமெள்ள மெள்ளவந்து வீடு சேர்வார்
மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்த
[மைந்தா,
காலான முதற்பூமி கைவந்தால் முத்தியுங்கை வந்த தாமே. 155

(ப—ம்) சுபேச்சை யாதி மூன்று பூமியில் அப்பியாசிக்கின்றோர் இடையில் சரீரம் நீங்கினுல், மந்திர கிரியா திரவிய லோப மின்றி, யாகாதி செய்தவர் எந்த உத்தமமான லோகத்தை யடைவார்களோ, வந்த லோகத்தை யடைந்து, அப் போகம் புசித்த பின், பூமியிற் செல்வவானிடத்தி லாவது, யோகிக ளிடத்திலாவது ஜெநித்து, அச் செந்மத்தி லாவது, அடுத்த செந்மங்களி லாவது, வருத்தமின்றி. தத்துவ ஞாநம் பெற்றுப், பர மோக்ஷ மடைவாரென்பார், 'நாலாம் பூமியில் வருமுன் மூன்று பூமியுமடைந்து நடந்து மாண்டோர் மேலான பத மடைந்து பிறந்து மெள்ள மெள்ள வந்து வீடு சேர்வா' ரெனவும், ஒரு புருடன் நன் னடையினுல் ராஜாவின் தயவு பெற்றுச், சிறிதா யாவது, ஒரு யுத்தி யோகம் பெற்றுக் கொண்டா, லவனுக்குப் பின்பு பெரி தான உத்தியோகம் சித்த மாய்க் கிடைக்கின்றது போல, ஒருவ னிடேத கன்மத்தை விட்டு, அநேக ஜந்மங்களில் நிஷ்காமமா யநுட்டித்த புண்ணியத்தால், ஈசுவர கிருபை பெற்று, அதனுல் முதல் பூமியை யடைந்தால், அவனுக்கு அவ் ஈசுவர கிருபை யிருப்பதனுலும், துர்ச்சங்கத்தை விட்டுச், சற்சங்கத்தைச் சார்ந்திருப்பதனுலும், சித்த மாய்ப் பரமோக்ஷ முண்டாகு மென்பார், 'காலான முதற் பூமி கைவந்தால் முத்தியுங் கைவந்ததா' மெனவுங் கூறினுர்.

*(தா—ம்) ஞாந பூமிகளின் முன் மூன்று பூமி அப்பியாசத்தால் வரும் பயனு, மதன் முதற் பூமியின் அருமையுங் கூறின தாம்.* 155



**(அ—கை) அப்பியாச பூமி யடைந்தவன், எவ் விதத்திலும் அநுபவியாவ னென்பது கருதி, அவன் அநுபவியே யெனக் கூறுதல்.**

இப்புவியி லிஞ்ஞாந பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தா ராறு,
லப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர் குருபாதத் தாணை மெய்யே,
தப்புரையென் றவர்கெடுவார் நடுவான மறைகளைநீ சங்கி யாதே,
செப்புமொழி வழிதிடமா யகம்பிரம மென்றிருந்து தெளிந்தி டாயே.

(ப—ம்) வைராக்கியம் பொறுமை முதலான சற்குணங்களும், நமஸ்கார தோத்திர தியாநாதி பத்தியும், சிரவண மநநாதி ஞாநாப்பியாசமும், சசல ஜீவர்களுக்கும் பொது வாயும், இவற்று லுண்டாகும் ஞாநத்தால், எந்த வர்ணுச்சிரமத்தாருக்கும், மோக்ஷ முண்டாவதாயு மிருக்க, உத்தம மான பிராஹ்மண வர்ணத்திலும், சந்நியாசம் பண்ணிக்கொண்டோருக்கே, மோக்ஷம் வரு மென்றும், மற்றையோருக்கு இந்த ஞாந பூமியை அப்பியாசித்தாலும், மோக்ஷம் உண்டாகா தென்றும், அதனு லுண்டாகு மென்பது அசத்திய மென்றும், கூறுகின்ற பேர்கள், நரக துன்பம் அடைவார்கள் என்பார், 'தப்புரை யென்றவர் கெடுவார்' எனவும், சமய நூல் போல், பக்ஷ பாத மின்றி, சமநா யிருக்கின்ற வேத மென்பார், 'நடு வான மறை' யெனவுங் கூறினுர்.

*(தா—ம்) இவ் வப்பியாச பூமியை அவசியம் அடையும் பொருட்டு அவைகளின் பெருமையையும், அவைகளால், பெறும் பயனையும் கூறி, முன் சொல்லிய மார்க்கப்படி அநுஷ்டித்து அகண்டாத்ம சொரூபமா யிருப்பாய் என்ற தாம்.* 156

**(அ—கை) முத்தி யடைவதற்கு வருணுச்சிரம பேதம் வேண்டுவ தின் றென்பது தோன்ற ஓர் சங்கை வினுதல்.**

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞ்ஞான பூமி யேன்று,
நெல்லாகி முளைக்குமெனைத் தண்டுலமாக் கியகுருவே நீர்சொன்
[னீரே,
இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்தே காங்கி யானே,
ரல்லாமல் முத்திபெற ரேன்றுசிலர் சொலு மயக்க மகற்று வீரே,

(ப—ம்) தவி டுமி முளையுட னிருந்து முளைக்கின்ற நெல்லை, அத் தவி டாதியை நீக்கி, அரிசியாக்கி, முளையாதபடி செய்கின்றது போலச், சீவ னுக அஞ்ஞானாதி மலத்துட னிருந்து, செநித்து மரித்த வென்னை, அஞ்ஞானாதி மலத்தை நீக்கிச், சிவ மாக்கிச் செநந மரணத்தைப் போக்கிய ஞானா சாரியரே என்பார், 'நெல்லாகி முளைக்கு மெனைத் தண்டுல மாக்கிய குருவே' என்றார்.

(தா—ம்) மோக்ஷம் துற வறத்தாருக் கன்றி, இல்லறத்தாருக்கு வரா தெனச் சிலர் கூறுவதா லுண்டாகு மையத்தை நீக்க வேண்டு மென வினவின தாம். 157

சிட்டர்புகழ் மகனேநீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்,
கட்டழியுந் துறவுநால் வகையாகு மவைகளுக்கங் காதும் பேர்கள்,
பட்டதுயர் கெடுங்குடி சகம்வெகூ தகமம்சன் பரம வம்சன்,
விட்டசலுந் துறவுக்கு விராகங்கா ரணமன்றி வேட மன்றே. 158

(ப—ம்) சுருதியில் கூறிய வாக்கியங்களை விசுவாசித் துத் தாமதம் பண்ணு, தவ் வாக்கியப்படி அநுஷ்டித்து, அகண்டாநந்தத்தைப் பெற் றிருப்பது குறித்து, மேலோர் களால், துதிக்கப்படுகின்ற குழந்தா யென்பார், 'சிட்டர் புகழ் மகனே' எனவும், நீ கேட்ட வினு வானது, துற வறத்தாருக்கு மோக்ஷம் வருமே யன்றி, இல்லறத்தாருக்கு வாரா தென்கின்ற மயக்கத்தினுல், மோக்ஷத்துக்கு ஏது வான அப்பியாசம் செய்யாதிருக்கின்ற ஜீவர்களுக் கெந்த



வருணுச்சிரமத்தாருச்கு மோக்ஷ முண்டாகு மெனத் தெரி வித்ததனுல், மோக்ஷத்தை விளைவிக்கத் தக்க தென்பார், 'நீ சங்கித்த சங்கை நன்' றெனவுங் கூறினுர்.

(தா—ம்) குடீசகம் பகூதகம் அம்சம் பரமாம்சம் எனத் துறவு நால் வகை யெனவும், அவை சித்திப்பது விராகசையினுலேயே யன்றி, அக் குடிசக மாதியின் வேடத்தினு லன் றெனவுங் கூறின தாம். 158

(அ—கை) வைராக்கியம் எத்தனை விதம் என்னில்? 'வகை விராகம்'

(அ—கை) அவற்றி னிலக்கணம் யா தெனில்?

மந்தமுந்தீ விரமுந்தீ விரதரமு மெனமூன்று வகைவி ராகம், [மந்தம்,
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராக
இந்தவுட லளவுமனை தநம்வேண்டா மெனவிடல்தீ விரமேன் பார்
[கள்,
அந்தணனூர் மித்தையென விடலதுதீ விரதரமா மறிந்தி டாயே. 159

(ப—ம்) மிகுந்த பாபத்தால் ஸ்திரீ தந மாதி நஷ்ட மான போதும், அவைகளினுல், தனக்குத் துன்பம் உண் டான போதும், அந்த ஸ்திரீ யாதியை விட்டு நீங்குவது, மந்த வைராக்கிய மென்பார், 'வெந் துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்து வரும் விராக மந்த' மெனவும், சொற்ப புண்ணியத்தால், சுவர்க்காதிய பரகதி விருப்பம் உண்டாகி, யதை அடையச் செய்யும் தவத்திற்கு, ஸ்திரீ யாதிகள் விரோத மெனவும், அவைகளால் துன்ப மெனவு, மானதால், தேகாந்தம் வரை அவைகள் தேவை யில்லை யெனவுங் கருதித், துறக்கின்றது தீவிர வைராக்கிய மென் பார், 'இந்த வுட லளவு மனை தநம் வேண்டா மென விட

றீவிர' மெனவும், மிகுந்த புண்ணியத்தால் பரமோக்ஷ விருப்ப முண்டாகி, அதை யடையும் பொருட்டுச் செய்யுஞ் சிரவணாதிக்குப் பிரம லோகாதி சத்திய புத்தியும், அந்த லோகாதி அடைதற்குச் செய்யும் உபாசனை யாதியும் விரோத மெனவும், அந்த லோகாதி உற்பத்தி நாச முள்ளதாகையால், அசத்திய மெனவுங் கருதி, அவைகளைத் துறக்கின்றது தீவிர தரமாம் என்பார். 'அந்தணனார் மித்தை என விடலது தீவிர தரமாம்' எனவுங் கூறினார்.

*(தா—ம்) வைராக்கிய மூன் றெனவும், அதில் துன்பத்தினால் சம்சாரத்தை வெறுத்தல், மந்த வைராக்கிய மெனவும், தேகாந்தம் வரை ஸ்திரீ யாதி தேவை யில்லை யென வெறுத்தல், தீவிர வைராக்கிய மெனவும், தேக முதல் பிரம லோக பரியந்த மசத்திய மெனக் கண்டு விடுதல் தீவிர தர வைராக்கிய மெனவுங் கூறினதாம்.*
159

**(அ—கை)** மந்த விராகத்தினால், முற் கூறிய நால் வகைச் சந்நியாசத்தி, லெது சித்திக்கு மெனில், 'பலித்திடாதே' யென்றும்.

**(அ—கை)** தீவிர வைராக்கியத்தினா, லெது சித்திக்கு மெனில், 'திறங்க ளுண்டாம்' என்றும்,

**(அ—கை)** அச் சந்நியாசம் எவ் விதம் இருப்போருக்குக் கூறிய தெனில், கூறுகின்றார்.

பாவிமந்த விராகத்தில் சந்நியா சங்களொன்றும் பலித்தி டாதே,
தீவிரத்திற் குடீசகமும் வெகூதகமு மென்றிரண்டு திறங்க ளுண்டாம்.
தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசகமுஞ் சகங்க ளெங்கு,
மேவிநடந் திடத்திடமுள் ளவர்க்குவெகூ தகமுமென விதித்தார்
[மேலோர். 160



(ப—ம்) பரமோக்ஷ அபர மோக்ஷங்களைக் குறியாது, துன்பத்தைக் குறித்துப் பாவத்தினால், ஸ்திரீ யாதியைத் துறந்தவனுக்குப், பின்பு ஸ்திரீயாதிக ளிடத்திலிச்சை யுண்டாகி, அவர்களைப் பற்றுதலினால், இம்மையிலிகழ்ச்சியும், மறுமையில் நரகமு முண்டாகுமே யன்றி, குடீசக மாதி நால் வகைச் சந்நியாசத்தில் ஒன்றுஞ் சித்தியாதென்பார், 'பாவி மந்த விராகத்திற் சந்நியா சங்க ளொன்றும் பலித்திடாது' எனவும், சஞ்சரிக்கச் சக்தி யில்லாத விருத்தாப்பிய மாவது, ரோக மாவது, உள்ளவர்கள், சந்நியாசஞ் செய்து கொண்ட பின், சந்நியாசிகளுக்கு விதித்தபடி சஞ்சரித்தால், தவத்துக்கு விக்கின மாகும், ஆகையால், அங்ஙனம் சக்தியில்லாதவர்களுக்கு காமாதி பிரவிர்த்திக்கு ஏதுவில்லாத ஓரிடத் திருந்து, தவஞ்செய்யத் தக்கதென்பார், 'தாவி நடந்திடத் திட மில்லாதவர்க்கு குடீசக' மெனவும், ஆரோக்கிய மாயும், திட காத்திர மாயும், யௌவன மாயும் உள்ளவர்கள், சந்நியாசஞ் செய்து கொண்ட பின், தத்துவ ஞாநம் வந்த சாதுக்களிடத்தி லிருந்து, ஆத்ம விசாரஞ் செய்யாது, தனித் தோரிடத்தி லிருந்தால், காமாதி பிரவிர்த்தி உண்டாகி, அதனால் தவ மிழந்து நரகத்துக்கு ஆளாவார்க ளாகையால், அங்ஙனம் ஆரோக்கிய மாதி, சஞ்சரிக்கச் சக்தி யுள்ளவர்களுக்குக். காமாதி பிரவிர்த்திக் கிடமில்லா திருக்கும் பொருட்டு. பட்டணம் பாஞ்சராத்திரியும். பட்டிக்காடு ஏக ராத்திரியு மாகச் சஞ்சரிக்கத் தக்க தென்பார். 'சகங்க ளெங்கு மேவி நடந்திடத் திட முள்ளவர்க்குப் பகூதக' மெனவுங் கூறினார்.

*(தா—ம்) மந்த வைராக்கியத்தினால், ஒரு சந்நியாசமும், சித்தியா தெனவும், தீவிர வைராக்கியத்தினால், குடீசகம் பகூதக மென்னும் கரும சந்நியாசங்கள் சித்திக்கு மெனவும், குடீசகம், சஞ்சரிக்கச் சக்தியில்லாதோருக்கும், பகூதகம் சஞ்சரிக்கச் சக்தி யுள்ளோருக்கு முரிய தெனவுங் கூறின தாம்.* 160

(அ—கை) தீவிர தர வைராக்கியத்தினுல், எத்தனை வகைச் சந்நியாசஞ் சித்திக்கும்? அச் சந்நியாச முடையோர் நாமம் யா தெனில்? 'சொல்வார்'

(அ—கை) அச் சந்நியாச முடையோருக் கெவ்விடத்தில் முத்தி யுண்டாகு மெனில்?

இருவகைத்தீ விரதரத்து மம்சனென்றும் பரமாம்ச னென்றுஞ்
[சொல்வார்,
வருமதிலம் சனுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா தென்பார்.
பரமாம்ச னுக்குமுத்தி யிவ்வுலகின் ஞானத்தாற் பலிக்கு மென்பார்,
திரமருவு பரமாம்சன் றனுமிரு வகையாதுஞ் செப்பக் கேளாய். 161

(ப—ம்) உபாசனை யோகாதிகள் செய்து, மோக்ஷ இச்சையுடன் தேகம் நீங்கி னோர், பிரம லோகத்தில் போய்த் தத்துவ ஞானம் பெற்று, ஜீவன் முத்தியுடனிருந்து, பிரம்ம தேவர் பிரமத்தில் லய மாகும் போது, விதேக முத்தி அடைவா ரென்பார், 'வரு அம்சனுக்கு முத்தி சத்திய லோகத் தன்றி வாரா' தெனவும், சாதந சதுஷ்டயம் பெற்றுச், சற் குருவை யடைந்து, சதா சிரவணுதி அப்பியாசஞ் செய்கின்றவர்கள், தத்துவ ஞானத்தை இவ் வுலகத்திலேயே பெற்றுப் பரமோக்ஷத்தை அடைவா ரென்பார், 'பரமாம்சனுக்கு முத்தி இவ் வுலகில் ஞானத்தால் பலிக்கு' மெனவுங் கூறினுர்.

(தா—ம்) தீவிரதர வைராக்கியத்தினு லிரண்டு சந்நியாசம் சித்திக்கு மெனவும், அவைகளை யுடையோர் நாமம், அம்சன் பரமாம்ச னெனவும், அம்சனுக்கு பிரம லோகத்திலும், பரமாம்சனுக்கு இவ் வுலகத்திலு முத்தி உண்டாகு மெனவும், பரமாம்ச சந்நியாசி இரு வகையா யிருப்ப னெனவுங் கூறின தாம். 161

(அ—கை) பரமாம்ச சந்நியாசியின் கூறுன இரு வகைச் சந்நியாசிகளுக்கு, நாமம் யா தெனின்? 'இரண்டு பேர்கள்'



(அ—கை) அவர்களின் இலக்கணம் யா தெனில்? 'மேலோன்'

(அ—கை) சிஞ்ஞாசு, சந்நியாசிகள் எத்தனை விதமென்னில்?

சிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு பேர்களா மிதிற்சிஞ் ஞாசு,
மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூ மியில்நடக்கும் விவேகி யானே,
அஞ்ஞான வானென்போன் சீவன்முத்தி யடைந்திருக்கு முயர்ந்த
[மேலோன்,
அஞ்ஞான மகலுமிந்தச் சிஞ்ஞாசு மிருவகையா மதுவுங் கேளாய். 162

(ப—ம்) அஞ்ஞானாதி மல மற்று, ஆத்ம சொரூபத்தை அடைந்தவ னென்பார், 'தூய மேலோ' னென வும், அஞ்ஞானாந்தமும், ஞான உதயமு முடையவ னென்பார், 'அஞ்ஞான மகலு மந்தச் சிஞ்ஞாசு' எனவுங் கூறினுர்

(தா—ம்) பரமாம்ச சந்நியாசியி னிரு வகைக்கும், சிஞ்ஞாசு ஞானவா னென நாம மெனவும், சிஞ்ஞாசு அப்பியாசியும், ஞானவா னநுபவியு மாவ ரெனவும், சிஞ்ஞாசுக்களு மிரு வகையா யிருப்ப ரெனவுங் கூறின தாம். 162

(அ—கை) சிஞ்ஞாசுவி னிரு வகை இலக்கணம் யா தெனின்?

பந்தமனை துறந்துசில ரதிதிகளா யிருந்தடைவர் பரம ஞானம்,
அந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரரா யிருந்துசில ரடைவர் ஞானம்,
இந்தவகை சாத்திரத்து முலகத்து நடப்பதுகண் டிருந்து மைந்தா,
சிந்தனையின் மயக்கமென்ன சுருதியுக்தி யநுபவத்தாற் றெளிந்தி
[டாயே. 163

(ப—ம்) பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர ரென்னும் நால் வருணத்தி னுள்ளு மிருக்கின்றவர்கள், பிரதிபந்த மில்லா திருந்தால், வாகியாந்தர சந்நியாசங்க ளிரண்டையும் பெற்றுச், சற்குருவை அடைந்து, சிரவணுதி அப்பியாசஞ் செய்து, அசம்பாவனை யாதி யின்றிய அபரோக்ஷ ஞானத்தினுல், பர மோக்ஷ மடைவர். வாகிய சந்நியாசஞ் செய்து கொள்ளப் பிரதிபந்த முண்டானுல், ஆந்தர சந்நியாசம் மாத்திரம் பண்ணிக் கொண், டவ்வகையே பரமோக்ஷ மடைவா ரென்பார், 'பந்த மனை துறந்து சில ரதிதிகளா யிருந் தடைவர் பரம ஞானம், அந்தணர் மன்னவர் வணிகர் சூத்திரரா யிருந்து சிலரடைவர் ஞானம்' எனவுங் கூறினுர்.

(தா—ம்) ஸ்திரீ முதலானதையும், அதன் ஆசையையும் விடுகின்ற, வாகியாந்தர சந்நியாச மான துற வறத்தினின்று சிரவணுதி அப்பியாசஞ் செய்கின்றதும், ஸ்திரீ முத லான ஆசையை விடுகின்ற ஆந்தர சந்நியாச மாத்திர முள்ள இல் லறத்தினின்று, சிரவணுதி அப்பியாசஞ் செய்கின்றதும், சிஞ்ஞாசி னிரு வகைக்கும் லக்ஷண மெனவும், ஸ்திரீ யாதியுடன் கூடி யிருக்கின்ற இல் லறமும், அவைகளை நீங்கி யிருக்கின்ற துற வறமும், மோக்ஷத்திற்குக் காரண மல்ல. நிராசையே காரண மெனவுங் கூறின தாம், 163

(அ—கை) மேற் கூறுவோ மென்ற வாறே, வித்தியாநந்தங் கூறுவான் தொடங்கி, இச் செய்யுளில், பிரஹ்மமே கூடஸ்த ரெனக் கூறுகின்ருர்.

பிறந்ததுண் டானு லன்றே பிறதுசா வதுதா னுண்டாம்,
பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா மதுவும் நீானே,
பிறந்தது நானென் றகிற் பிரமமன் றந்த நானே,
பிறந்தது மிறந்த தற்ற பிரமமா நானே் நானே. 164

(ப—ம்) தாவர முதல் தேவர்கள் வரை எழு வகைச் சரீரங்களும், மூர்த்த மாயும், அவயவ மாயும், கண்ட



மாயும், உற்பத்தி யுள்ளதாயு மிருப்பதால், நாச மடைகின்றது. அப்படி யின்றி, நிராகார மாயும், நிரவயவ மாயும், நிறை வாயும், நித்திய மாயும், இருக்கின்ற பிரமம், உற்பத்தி இல்லா திருப்பதால், நாச மடைகின்ற தல்ல வென்பார், 'பிறந்த துண்டானு லன்ருே பிறகு சாவது தா னுண்டாம்' எனவும், உற்பத்தி நாச முடைய பிரமாதி ஆகிய பிரமங்களுக்கு மே லாகச் சுருதியிற் கூறும் பிரம சொருபமே சச்சிதாநந்த மாகிய கூடஸ்த ரென்பார், 'பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா மதுவு நானே' யென்னும், சாம வேத மகாவாக்கியப்படி, அது நீ யானுய் என்பார், 'பிரம மா நான்' எனவுங் கூறினுர்.

(வி—ம்) பிரம மென்பது, சத்திய ஞான வநந்தாநந்த வஸ்து வாகிய அது, நா னென்பது சச்சிதாநந்த மாகிய நீ, ஆ மென்பது, ஆனு யென்னு மைக்கிய மெனக் 164
கொள்க.

(அ—கை) கூடஸ்தனே பிரம மெனக் கூறுகின்ருர்.

நானென்ற பிரம மான நானே நானறியேநா னென்ரு.
னுனென்ப தேது பின்னை நம்முடையப் புந்தி யென்னிற்,
ருனது மயக்கந் தன்னிற் சாகுமே சாகா தாகி, 165
நானென நிறைந்தி ருந்த ஞானமா நானே நானே.

(ப—ம்) யஜுர் வேத மகா வாக்கியப்படி, அஹம் பிரம்மாஸ்மி யென்பார், 'நா னென்ற பிரமமான' வென்ருர்.

(வி—ம்) 'நா' னென்பது, அஸ்தி பாதிப் பிரிய மாகிய வக மெனவும், பிரம மென்பது, நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமாநந்த அத்வைத சொருப மெனவும், ஆன 165
வென்பது அஸ்மி யெனவுங் கொள்க.

(அ—கை) ஞாநமே பிரம மெனக் கூறுகின்றார்.

நிறைந்தவா றெந்த வாறு நிலைதெரி யலையென் றாகி,
லறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லாநந்த மதுவே யாகும்,
குறைந்ததற் காநந் தந்தான் குவலயந் தன்னி லில்லை,
நிறைந்ததே யிந்த வாந்மா நிதாநமிவ் வறிவு தானே. 166

(ப—ம்) ஞாநமே பிரம மென்பார், 'நிதாந' மிவ் வறிவு தானே, யெனக் கூறினார்

(வி—ம்) இவ் வறி வென்பது பஞ்சேந்திரியத்தினால் பஞ்ச விடயத்தை யறிகின்ற பிரஞ் ஞாநமே, நிதாந மென்பது, சீவேசுவர சகத்துக் காதி காரண மாகியும், அவை களுக்குத் தற் சாக்ஷியும், வியாபக மாயு, மிருக்கின்ற பிர்ம மெனவுங் கொள்க. 166

(அ—கை) ஆத்மாவே பிரம மெனக் கூறுகின்றார்.

மநத்தினா லெண்ணித் தானே வந்ததிவ் வுலக மாகும்,
நினைத்திடி லநேக லோக நிற்பதவ் வறிவி லன்றோ,
அனைத்தையுங் கடந்தப் பாலு மந்தமற் றறிவு தாமே,
யெனத்தனி விசாரித் திட்டா லேகமாய் நிறைந்தோ
[னானே. 167

(ப—ம்) சீவேசுவர சகத் தெல்லாம் சங்கற்ப மாத்திர மென்பார், 'மநத்தினா லெண்ணித் தானே வந்த திவ் வுலக மாகும் 'எனவும், பழுதையில் மயக்கத்தினால் சர்ப்ப தண்ட மாலை தோற்றிக்கொண் டிருந்தாலும், அவைகள் பழு தையை விட வே றல்லாதது போல, அதிஷ்டாந மான பிரம்ம சொருபத்தில், ஆரோப மான மநதினாற் ஜீவேசுவர சகத்து தோற்றினாலும், அந்த அதிஷ்டாந மான பிரம



சொருபத்தைத் தவிர, அச் சீவேசுவர சகத்து வே றல்ல வென்பார், 'நினைத்திடி லநேக லோக நிற் பதவ் வறிவி லன்றோ' வெனவும்' அதர்வண வேத மகா வாக்கியப்படி, அயமாத் மா பிரம மென்பார், 'ஏகமாய் நிறைந்தோனா' னெனவுங் கூறினார்.

(வி-ம்) அற்ற வென்பது, அற்றெனத் திரிந்து நின் றது. நான் என்பது, சொயம் பிரகாச மாய் பிரத்தியக் சொரு பமா யிருக்கின்ற அய மாத்மா மெனவும், ஏக மாய் நிறைந் தோ, னென்பது, சச்சிதாநந்த நித்திய பூரணமா யிருக்கின்ற பிரம மெனவுங் கொள்க.

*(தா—ம்) இருக்காதி நான்கு வேதங்களில், முடிவா யுள்ள நான்கு மகா வாக்கியார்த்த சொருபந் தா னெனச் சிந்திக்கும் போ துண்டாகும் சுகம் வித்தையாநந்த மென்ப தாம்.* 167

(அ—கை) அகண்டாநந்த மநுபவிக்கிறதற்கு உபா யம் வினாதலும். அதற் குத்தரங் கூறலும்.

அந்தவா றிருந்து கொண்டு ஆநந்த மநுப விக்க,
எந்தவா றிருந்து கொண்டா லெனக்கிது தெரியு மென்னில்,
இந்தமூன் றவஸ்தை தன்னி லெழுந்திடும் விருத்தி நீக்கில், 168
அந்தாவா றிருந்து நீயு மாநந்த மடைய லாமே.

*(தா—ம்) முற் கூறிய கற்பிதங்க ளனைத்தும், விருத்தி கற்பித மாகையால், விருத்தியை அடக்கினாற் றான் அகண்டமா யிருந்து பூரணாநந்த மநுபவிக்கலா மென்ற தாம்.* 168

வாதநா வசத்தி னாலே வருகிற விருத்தி யெல்லா,
மேதினா லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யில்,
போதமா மிராசன் தானாய்ப் புந்தியைம் புலன்க ளெல்லாந், 169
தாதரா யிருக்கப் பெற்றாற் சகலமு மடங்குந் தானே.

விருத்திக ளடக்க வின்னம் விநோதமா யோகத் தாலே,
துருத்திபோ லூது மூச்சைச் சுகமுட னடக்கில் நிற்குங்,
கருத்ததுக் கில்லை யென்னிற் காரண சரீர மாகிப்,
பெருத்ததோ ரவித்தை தன்னைப் பிடுங்கிடி லடங்குந்
[தானே. 170

காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென் றுசி.
லாரணம் பொய்சொல் லாதே யதன்பொரு ளகத்தி லுய்த்
பூரண மாகு மென்மேற் புவங்க டோற்ற மென்று, [துப்,
தாரணை வந்த தாகிற் றரித்திடு மவித்தை யெங்கே. 171

அப்படி யிருக்கச் சித்த மலையுதே விவகா ரத்தில்,
எப்படிக் கூடு மென்னி லென்னைவிட் டொன்று மில்லை,
யிப்படிக் கண்ட தெல்லா மென்மய மென்க நாப்போல்,
கற்பித மென்று தானே காண்கின்ற சித்து நானே. 172

சித்துநா னிறைந்தே னென்ற திடமற வாதி ருந்தால்,
எத்தனை யெண்ணி னாலு மேதுசெய் தாலு மென்ன,
நித்திரை யுணர்ந்த பின்பு நிற்கின்ற கநாவே போல,
அத்தனை யும்பொய் தானே யாநந்த வடிவு நானே. 173

நானென வுடலைத் தானே நம்பினே னநேக சநம,
மீநராய்ப் பெரியோ ராகி யிருந்தவை யெல்லா மிப்போ,
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே,
நானென வென்னைத் தானே நம்பியீ டேறி னேனே. 174

என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ
[காணேன்
நன்னிலந் தனிலெ முந்த நாரணன் கிருபை யாலே,
தந்நிய னானே னுந் தரீயத்தை வீசு கின்றேன்,
தந்நிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன். 175



தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தால்,
நித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த,
சத்திய மதனு லன்றோ தாண்டவா வென்ற ழைத்தார்,
அத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தானே. 176.

வந்ததோ ரிந்தா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்
[யான்,
சிந்தையி லெழுந்து பொங்கிச் செகமெலா நிறைந்து தேக்கி,
அந்தமில் லாம லாச்சே யப்படிக் குருவே தாந்த,
மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னேனே. 177

வித்தியா நந்த மிந்த விதமென விளம்பி னேமே,
பத்தியா லிந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்,
நித்தியந் தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவந்,
முத்தியை யடைந் திருந்த முநிவர ராகு வாரே. 178

ஆரணப் பொருளாம் வித்தை யாநந்தம் விளங்க வேதங்,
காரணங் குறைவி லாமல் கைவல்லிய நவநீ தத்தைப்,
பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தில்,
நாரண குருந மக்கு நவின்றனர் யோகில் வந்தே. 179

அண்ணற னருளி னாலே யகம்புற மின்றி யொன்றாய்,
எண்ணமி லிலக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன,
நண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே,
கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் றுண்ட
[வேசன். 180

ஆன்ற பதமா மூன்றிற்கு மதுநீ யானு யெனும்பொரு
[ளிற்,
சான்ற துரியா தீதமெனுந் தடையற் றிலங்கொண்
[சைதந்நிய,
மூன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையு
[மூடறுத்துத்,
றேன்றித் தானே தானுகத் துலங்கு மவற்கே சுவா நுபவம்.

என்னு மாவாக் கியநான்கு டிசைக்கும் வித்தியா நந்தமிது
சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதித்தோர் துக
[ளற்றோ
ரின்ன மாணுக் கன்குருவா லிச்சந் தேகந் தெளிந்தின்பந்,
துன்னி நிறைந்து நின்றோர்கள் தூய முத்த ராமன்றே. 182

தத்துவ விளக்கத் தா லுஞ் சந்தேகந் தெளித லா லும்,
ஒத்திரு விடாத மாயா வுள்ளிரு ளிரிய வோங்கு,
சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்தி பேதப்,
புத்தியில் வருமை யத்தைப் புரையறத் தெளிவித் தாண்
[டான். 183

ஆண்டதே சிகனு மைய னுரண னநந்தன் பாதம்,
பூண்டவா ரோபத் தான்முன் பொய்மயக் காய்வந் தத்தை
மாண்டநல் லபவா தத்தான் மாய்த்தரு ளுேக்கத் தென்றுந்,
காண்டிட வைத்த ளித்த காரணு போற்றி போற்றி. 184

இந்நிலந் தனிற்கை வல்லிய நவநீத மெனப்பே ரிட்டு,
நன்னில மருவு நாரா யணன்சொன்ன ஞாந நூலைப்,
பன்னியா ராய்ந்து பார்ப்போர் பரமாத்ம சொரூப மாகி,
அந்நிய வநர்த்தம் பொய்யா யாநந்தம் மெய்யாய்
[வாழ்வார். 185

குலவுசற் குருவின் பாதக் குளிர்புனல் தலைமேற் கொண்
[டால்,
உலகினி நீர்த்த மெல்லா முற்றபே றடைவார் போல,
நலமையா குங்கை வல்லிய நவநீத நூலைக் கற்றோர்,
பலகலை ஞாந நூல்கள் படித்தஞா நிகளாய் வாழ்வார். 186

சந்தேகந் தெளிதற் படலம் முற்றிற்று

கைவல்லிய நவநீதம் மூலமும், கோவி லூர் மடம்,
ஸ்ரீ அருணுசல ஞாந தேசிக ஸ்வாமிகள் இயற்றிய
பதசாரம் என்னும் உரையும் முற்றுப் பெற்றது.
சுபகிருது ஞூ 1843 ஞூ